# சங்ககாலச் சமூகமும் பரத்தமையும்

# (Prostitution in Sangam Society)

முனைவர் பட்டத்திற்காகக் காஞ்சி மாமுனிவர் பட்டமேற்படிப்பு மையத்திற்கு அளிக்கப்பெறும் ஆய்வேடு

(புதுச்சேரிப் பல்கலைக்கழகத்தோடு இணைப்புப்பெற்றது)

**ஆய்வாளர் : இரா. குமுதவள்ளி**

**Research Scholar : R. KUMUDHAVALLI**

**நெறியாளர் : முனைவர் சு. தில்லைவனம்**

**Guide & Supervisor : Dr. S. THILLAIVANAM**




**தமிழ்த்துறை**

**காஞ்சி மாமுனிவர் பட்டமேற்படிப்பு மையம் (தன்னாட்சி)**

**Kanchi Mamunivar Centre for Post Graduate Studies**

**புதுச்சேரி - 605 008.**

**ஜூன் - 2017**

**முனைவர் சு. தில்லைவனம்** (ஓய்வு)
முதல்வர் & நெறியாளர்,
அவ்வையார் அரசு மகளிர் கல்லூரி,
காரைக்கால்,
புதுச்சேரி - 609 602.

# நெறியாளர் சான்றிதழ்

காஞ்சி மாமுனிவர் பட்டமேற்படிப்பு மையத் தமிழ்த்துறையில் **இரா. குமுதவள்ளி** முனைவர் பட்டம் பெறுவதற்காக மேற்கொள்ளப் பெற்ற ஆய்வேடு இது. **'சங்ககாலச் சமூகமும் பரத்தமையும்'** என்னும் தலைப்பில் அமைந்துள்ள இந்த ஆய்வேடு இதற்கு முன்னர் வேறு எந்தக் கல்வித்தகுதி பெறவும் அளிக்கப்பெறவில்லை என்றும் இவ்வாய்வேடு இம்மாணவரின் சொந்த முயற்சியால் உருவாக்கப்பட்டது என்றும் சான்றளிக்கிறேன்.

**துறைத்தலைவர் கையொப்பம்** **நெறியாளர் கையொப்பம்**

**இயக்குநர் கையொப்பம்**

**இடம் :** புதுச்சேரி

**நாள் :**

**இரா. குமுதவள்ளி**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
காஞ்சி மாமுனிவர் பட்டமேற்படிப்பு மையம்,
புதுச்சேரி - 605 008.

# ஆய்வாளர் உறுதிமொழி

**'சங்ககாலச் சமூகமும் பரத்தமையும்'** என்னும் தலைப்பில் காஞ்சி மாமுனிவர் பட்டமேற்படிப்பு மையத் தமிழ்த்துறையில் முனைவர் பட்டத்திற்காக செய்யப்பெற்ற இவ்வாய்வு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்படவில்லை என உறுதியளிக்கிறேன்.

**நெறியாளர் கையொப்பம்** **ஆய்வாளர் கையொப்பம்**

**துறைத்தலைவர் கையொப்பம்**

**இடம் :** புதுச்சேரி

**நாள் :**

# நன்றியுரை

***“சங்ககாலச் சமூகமும் பரத்தமையும்”*** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வேட்டைச் செம்மையுறச் செய்வதற்கு முதற்காரணமாக இருந்து என்னை நெறிப்படுத்தியும், எனது தவறுகளைச் சரி செய்தும், எனக்கு வேண்டிய நூல்களையும், பல அறிவுரைகளையும் வழங்கி நன்முறையில் என்னை ஊக்கப்படுத்தி வழிகாட்டிய என்னுடைய நெறியாளர் **முனைவர் சு.தில்லைவனம்** (ஓய்வு) அவர்களுக்கு என் நன்றியைக் கூற என்றென்றும் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வுத் தொடர்பான பல கருத்துக்களை வழங்கியும் ஆய்வுக்கு வேண்டிய பல நூல்களைக் கொடுத்தும், என்னை ஊக்கப்படுத்திய எனது துறைத்தலைவர் **முனைவர் இரா. நிர்மலா** அவர்களுக்கும், முன்னாள் துறைத் தலைவரான **முனைவர் (திருமதி) சிந்தா நிலா தேவி** (ஓய்வு) அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அவ்வப்போது எனக்கு எழும் ஐயங்களை நீக்கியும் எனக்கு தகுந்த முறையில் ஆய்வை மேற்கொள்வதற்கு ஆலோசனைகளை வழங்கியும் என்னை நன்முறையில் ஆய்வைச் செம்மையுற முடிக்க வைத்த ஆய்வுக்குழு உறுப்பினர்களாகிய **முனைவர் ஆ. விஜயராணி** அவர்களுக்கும், **முனைவர் இரா. ஸ்ரீவித்யா** அவர்களுக்கும் எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

முனைவர் பட்டத்திற்கான இவ்வாய்வை மேற்கொள்வதற்கு அனுமதி அளித்த இம்மைய இயக்குநர் **முனைவர் தமிழரசி தமிழ்மணி** அவர்களுக்கு எனது நன்றியைக் கூறுகின்றேன்.

துறைப் பேராசிரியர்களான **முனைவர் மு. இளங்கோவன், முனைவர் சிவ. மாதவன், முனைவர் ப. கொழந்தசாமி, முனைவர் மா. சுஜாதா** ஆகிய அனைவருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்ட ஆய்வு பயணத்தில் என்னுடன் இணைந்த மறக்க முடியாத எனது அன்பு நண்பர்கள் அனைவருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அனைத்திற்கும் மேலான என் குடும்ப உறுப்பினர்கள் என் அப்பா **இரா.இராஜேந்திரன்**, அம்மா **இரா.சத்தியவதி**, மற்றும் அண்ணன், அண்ணி ஆகிய அனைவருக்கும் என் இதயம் கனிந்த நன்றிகள் பல.

என் வாழ்க்கைப் பயணத்தில் என்றும் என்னுடன் துணைநிற்கும் என் அன்பு கணவர் **பு.கணேசன்**, ஆசை மகள் **ஓவியா**விற்கும் நன்றிகள் பல.

இவ்வாய்விற்கு வேண்டிய நூல்களைப் பயன்படுத்துமாறு உதவிய ரோமன் ரோலண்ட் நூலகத்திற்கும், பிரெஞ்சு இந்திய நிறுவனத்திற்கும், புதுச்சேரி மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவன நூலகத்திற்கும், புதுவைப் பல்கலைக்கழக நூலகத்திற்கும், அண்ணாமலைப் பல்கலைக்கழக நூலகத்திற்கும், இணைய நூல்களைத் தரவிறக்கம் செய்வதற்கு ஏற்ப உதவியவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

நன்றியுடன்

(இரா.குமுதவள்ளி)

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அகத். - | அகத்திணையியல் |
| அகம். - | அகநானூறு |
| ஆசா. - | ஆசாரக் கோவை |
| இறை.அக. - | இறையனார் அகப்பொருள் விளக்கம் |
| இல.வி. - | இலக்கண விளக்கம் |
| ஐங். - | ஐங்குறுநூறு |
| கலித். - | கலித்தொகை |
| குறுந். - | குறுந்தொகை |
| குறள். - | திருக்குறள் |
| சிலம்பு. - | சிலப்பதிகாரம் |
| சிறுபஞ்ச. - | சிறுபஞ்சமூலம் |
| திரி. - | திரிகடுகம் |
| தொல். - | தொல்காப்பியம் |
| தொ.ஆ. - | தொகுப்பாசிரியர் |
| நம்பி. - | நம்பியகப்பொருள் |
| நற். - | நற்றிணை |
| நாலடி. - | நாலடியார் |
| நீல. - | நீலகேசி |
| நூ. - | நூற்பா |
| ப.ஆ. - | பதிப்பாசிரியர் |
| பக். - | பக்கம் |

| | |
|---|---|
| பு.வெ. - | புறப்பொருள் வெண்பாமாலை |
| மணி. - | மணிமேகலை |
| மாறன். - | மாறனகப் பொருள் |
| மேலது. - | மேலே குறிப்பிடப்பட்டுள்ள நூல் |
| வளை. - | வளையாபதி |

# பொருளடக்கம்

# சங்ககாலச் சமூகமும் பரத்தமையும்

## ஆய்வு அறிமுகம்

மனிதனின் சமூக வாழ்வு என்று தொடங்கியது என்பதற்கு மிக எளிதான விடை ஒன்று உண்டு. மனிதன் என்று தோன்றினானோ அன்றே அவனது சமூக வாழ்வும் தொடங்கி விட்டது. சமூகம் என்பது ஒரு குறிப்பிட்ட பிரிவைச் சார்ந்த மக்கள் கூட்டத்தைக் குறிப்பதாக அமைகின்றது. அவ்வகையில் நம் பண்டையகால மக்களின் சமூக வாழ்க்கையை எடுத்துரைப்பதில் சங்க இலக்கியங்கள் பெரும்பங்கு வகிக்கின்றன. சங்க இலக்கியங்களில் அகம் சார்ந்த பாடல்கள் தலைவன், தலைவி வாழ்க்கையை முன்னிலைப்படுத்தியே உருவாக்கப்பட்டு இருக்கின்றன.

தலைவன் - தலைவியை மையப்படுத்திய இந்த புலனெறிவழக்கில் பரத்தையைப் பற்றிய சித்திரிப்புகள் அரிதாகவே இடம் பெறுகின்ற முறைமை சிந்தனைக் குரியதாகும். சங்ககாலச் சமூகத்தில் பரத்தமை என்ற நிறுவனம் செயல்பட்ட பாங்கினையும் பரத்தையருக்கு இருந்த சமூக மதிப்பினையும் அறிந்து கொள்ள வேண்டும் என்பதன் அடிப்படையில் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## ஆய்வுத் தலைப்பு

***“சங்ககாலச் சமூகமும் பரத்தமையும்”*** என்பது இவ்வாய்வின் தலைப்பாக அமைகிறது.

## ஆய்வு நோக்கம்

பரத்தமை, தமிழ்ச் சமூகத்தில் எத்தகைய தாக்கங்களை ஏற்படுத்தி இருக்கிறது என்பதைச் சங்க இலக்கியங்களின் வழி ஆராய்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வுச் சிக்கல்

தலைவி, தோழி, நற்றாய், செவிலி முதலான பெண் பாத்திரங்களுக்கு இடையில் பரத்தையர் மட்டும் ஏன் இழிவாக கருதப்பட்டனர் என்பதே இவ்வாய்வின் சிக்கலாக அமைகின்றது.

## ஆய்வுக் கருதுகோள்

சங்ககால ஆண்மையச் சமூகத்தில் பரத்தையரின் இழிநிலைக்கு அவர்களின் பொருளாதார நிலையும், பால் அடிப்படையிலான ஏற்றத் தாழ்வுமே காரணமாக இருந்திருக்க வேண்டும் என்பதைக் கருதுகோளாகக் கொண்டு இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியத்துள் எட்டுத்தொகை நூல்களுள் அகநூல்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகியவை மட்டும் ஆய்வு எல்லையாக வரையறை செய்யப்படுகிறது.

## ஆய்வு மூலங்கள்

சங்க இலக்கியத் தொகுப்புகளில் ஒன்றான எட்டுத்தொகையில் இருக்கின்ற அகநூல்கள் ஐந்தும் இவ்வாய்விற்கு முதன்மை ஆதாரங்களாக எடுத்துக் கொள்ளப்படுகின்றன. இந்நூல்கள் தொடர்பான ஆய்வேடுகளும், ஆய்வுக் கட்டுரைகளும் ‘பரத்தமை’ குறித்த ஆய்வு நூல்களும்,

கட்டுரைகளும் துணைமை ஆதாரங்களாக எடுத்துக் கொள்ளப்பெற்றுள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

சங்க அக இலக்கிய நூல்களில் பரத்தையர் குறித்த விளக்கங்களை ஆய்வு செய்வதால் விளக்கவியல் அணுகுமுறையும் பெண்ணிய அடிப்படையில் பல சிக்கல்களை ஆராய்வதால் பெண்ணிய அணுகுமுறையும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## ஆய்வு முன்னோடிகள்

இத்தலைப்பில் இதுவரை எந்த ஓர் ஆய்வும் மேற்கொள்ளப்படவில்லை. இருப்பினும் பரத்தைக் கூற்றுப் பாடல்களில் ஆய்வுகள் நிகழ்த்தப்பட்டுள்ளன. அவை பின்வருமாறு.

1. கல்பனா.சு, - ‘குறுந்தொகையில் பெண்பாற் புலவர் பாடியுள்ள பாடல்கள் - ஒரு பெண் நிலை நோக்குத் திறனாய்வு’
காஞ்சி மாமுனிவர் பட்ட மேற்படிப்பு மையம்,
புதுச்சேரி, 2005.

2. புவனேஸ்வரி.த, - ‘இலக்கியப் பரத்தையரும் நடப்பியல் விலை மகளிரும் - ஓர் ஒப்பீடு’
புதுவைப் பல்கலைக்கழகம்,
புதுச்சேரி, 2010.

3. லாரன்சியா மேரி.ம, - ‘சங்க இலக்கியத்தில் பரத்தைக் கூற்றுப் பாடல்கள் - ஓர்

உளப்பகுப்பாய்வு அணுகுமுறை’

புதுவைப் பல்கலைக் கழகம்,

புதுச்சேரி, 2003.

முதலான இளமுனைவர் பட்ட ஆய்வேடுகள் ஆய்வு முன்னோடிகளாகத் திகழ்கின்றன.

1. முருகேசன்.சி.எஸ். - வரலாற்றில் தேவதாசிகள்

குறிஞ்சி பதிப்பகம், சென்னை, 2004.

இந்நூலும் ஆய்வு முன்னோடியாக விளங்குகின்றது.

**ஆய்வுத்திட்டம்**

இவ்வாய்வேடானது முன்னுரை முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களைக் கொண்டுள்ளது.

இயல் : 1 வரலாற்று நோக்கில் பரத்தையர்

இயல் : 2 சங்ககாலப் பெண் மாந்தர்கள்

இயல் : 3 சங்ககாலப் பரத்தமையும் பரத்தையரும்

இயல் : 4 பெண்ணிய நோக்கில் பரத்தமை

## இயல் : 1 வரலாற்று நோக்கில் பரத்தையர்

சங்க இலக்கியக் காலம் என்பது இனக்குழுச் சமூகம் முடிந்து நிலவுடைமைச் சமூகம் தோற்றம் கொண்ட காலக்கட்டமாகும். இக்கால நிலவுடைமைச் சமூகத்தில் பெண்ணானவள் உற்பத்திப் பொருளாகவே பார்க்கப்பட்டாள். இதனையே புலவர் மரபும் பதிவுசெய்தது. இனக்குழுச் சமூகத்தின் கட்டற்றப் பாலுறவானது நிலவுடைமை காலக்கட்டத்தில்

மாற்றமடைந்து ‘கற்பு’ என்னும் கட்டுப்பாடு பெண் சமூகத்தின் மீது திணிக்கப்பெற்றது. இதன் காரணமாகப் பரத்தை என்னும் கருத்துருவாக்கம் தோன்றியது.

இலக்கியங்கள் சமூககத்தின் பிரதிபலிப்புகளாகும். அவை சங்க காலம் முதல் இக்காலம் வரை தத்தம் சூழலுக்கு ஏற்றவாறு பல்வேறு சூழல்களில் பல்வேறு கருத்தாக்கங்களைப் புலப்படுத்தி வந்துள்ளன. அவ்வகையில் பரத்தை என்ற கருத்தாக்கமானது காலம்தோறும், பல்வேறு சொற்களின் வாயிலாக ஒரே பொருளில் வெளிப்பட்டு நிற்கின்றது.

‘வரலாற்று நோக்கில் பரத்தையர்’ என்னும் இம்முதல் இயல், தொல்காப்பியர் காலம் முதல் கொண்டு சோழர் காலம் வரையிலான இலக்கியங்களில் பரத்தையர் பற்றிய பதிவுகள் எவ்வாறு இடம்பெற்றுள்ளன என்பது கூறப்படுகிறது. சோழர் காலத்திற்கு பிறகு மிக அருகிய நிலையிலேயே பரத்தமை பற்றிய கருத்துருவாக்கங்கள் காணக் கிடைக்கின்றன என்றாலும், ஐரோப்பியர் வருகைக்குப் பின்னரும் பரத்தையர் பற்றிய சொல்லாடல்கள் புழக்கத்தில் இருந்திருக்கின்றன என்பதை ஐரோப்பியர்களின் வரலாறுகள் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றன.

பரத்தை என்ற சொல்லிற்கு அகராதி, கலைக்களஞ்சியங்கள் ஆகியவை தருகின்ற சொற்பொருள் விளக்கங்கள் எடுத்துக் கூறப்படுகின்றன. இத்தகைய கருத்தாக்கங்களைக் கொண்டு வரலாற்று நோக்கில் பரத்தையர் என்ற முதல் இயல் அமைகிறது.

## இயல் : 2 சங்ககாலப் பெண் மாந்தர்கள்

‘சங்ககாலப் பெண் மாந்தர்கள்’ என்னும் இரண்டாவது இயலில் தலைவி, தோழி மற்றும் பரத்தையின் பண்புநலன்கள் ஆராயப்படுகின்றன.

அன்பின் ஐந்திணையில் களவு, கற்பு என்னும் இருவகை ஒழுக்கங்கள் நிகழ்கின்றன. கற்பு வாழ்க்கையானது பெரும்பாலும் மருத நிலத்தில் நிகழ்வதாக அமைகின்றது. பொருளீட்டலையே அடிப்படை நோக்கமாகக் கொண்டிருந்த ஆண்கள் பொருளாதாரத் தற்சார்பற்ற பெண்கள் மீதான ஆதிக்கத்தை உடையவர்களாக இருந்துள்ளனர். பொருளாதார வழிப்பட்ட இந்த ஆணாதிக்கத்தின் ஒரு கூறாகப் பரத்தமை மருத நிலச் சமூகத்தில் இருந்துள்ளது.

திணைச் சார்ந்த மருத நிலத்தை அடிப்படையாகக் கொண்ட பாடல்களில் தலைவி, தோழி மற்றும் பரத்தையின் பண்புகளை ஆராயும் விதமாக இவ்வியல் அமைகின்றது.

தலைவியின் பண்பு நலன்களைப் பற்றிய குறிப்புகள் புலவர் மரபால் எவ்விதம் புனையப்பட்டுள்ளன என்பது சுட்டிக்காட்டப்படுகிறது. தோழியின் பண்பு நலன்கள் பற்றிய விவரணைகள் சங்கப் பாடல்களின் அடியொற்றி எவ்வாறு சித்திரிக்கப்பட்டிருக்கிறது என்பதும் விளக்கப்படுகின்றன.

பரத்தை பற்றிய பதிவுகள் அக நூல்களில் அமைந்திருக்கிற முறைமையும், பரத்தையைப் பற்றிய புனைவுகளில் வெளிப்படுகிற அதிகாரத்துவ அரசியலும் விளக்கப்படுகிறது. இத்தகைய கருத்தாக்கங்களைக் கொண்டு ‘சங்ககாலப் பெண் மாந்தர்கள்’ என்ற இரண்டாவது இயல் அமைகின்றது.

**இயல் : 3 சங்ககாலப் பரத்தமையும் பரத்தையரும்**

தலைவன், தலைவியை விட்டு நீங்கிப் பரத்தமையில் ஈடுபடும் நிலையையும் அதற்கான காரணத்தையும், பரத்தையின் நிலைப்பாட்டையும் இவ்வியல் ஆராய்கின்றது.

சமுதாயம் ஒருதார மணமுறைக் குடும்பங்களை உடையதாக மாறுவதற்கு முன்னர் புணர்ச்சிச் சுதந்திரம் பரவலாக நிலவியிருந்தது. பிறப்பு, குடிமை, ஆண்டு, அருள், உணர்வு, திரு என்னும் பலவற்றில் ஒத்த தலைவனும் தலைவியும் கொள்ளும் காதலுறவும் மண உறவும் இதன் அடிப்படையிலான குடும்ப உறவும், தோன்றுவதற்கு முன்னர் நிலவிய இந்தப் புணர்ச்சிச் சுதந்திரமும் பரத்தமையின் தோற்றுவாய்க்கு ஒரு காரணமாகவே அமைகின்றது. சங்ககாலச் சமூகம் பரத்தமையைத் தொழிலாக அங்கீகரித்த தன்மையையும் பார்க்க முடிகின்றது. பரத்தையைக் குறித்த பழமொழிகளும் இடம்பெறுகின்றன. பாலின வேற்றுமையில் பரத்தன், பரத்தையர் குறித்த நிலைப்பாட்டையும் இவ்வியல் ஆராய்கின்றது.

தலைவனின் பண்பு நலன்களைப் பற்றிய விவரணைகள் கூறப்படுவதோடு, பரத்தமையில் அவனுக்குரிய செயலூக்கமான பங்கும் விவரிக்கப்படுகிறது.

பரத்தையர் பற்றிய புனைந்துரைகளில் வெளிப்படுகிற பரத்தையின் தன்னிலை விளக்கமும் பரத்தையின் ஆற்றாமையும் பரத்தையின் இடித்துரைக்கும் பண்பும் விவரிக்கப்படுகிறது. இத்தகைய கருத்தாக்கங்களைக் கொண்டு ‘சங்ககாலப் பரத்தமையும் பரத்தையரும்’ என்ற மூன்றாவது இயல் அமைகின்றது.

## இயல் : 4 பெண்ணிய நோக்கில் பரத்தமை

‘பெண்ணிய நோக்கில் பரத்தமை’ என்னும் இந்நான்காவது இயலில் சங்ககாலச் சமூகத்தில் பரத்தையரின் நிலை பற்றியும், தலைவி, தோழி முதலான பெண் மாந்தர்கள் சமூகத்தில் உயர் நிலையில் இருந்துள்ளதையும், பரத்தையர் மட்டும் இழிவாகக் கருதப்பட்டதையும் தெளிவாக அறியமுடிகிறது. ஆணின் தேவைக்காக உருவாக்கப்பட்ட

பரத்தையர்கள், தங்கள் வாழ்கையை அப்படியே ஏற்றுக் கொள்ளாமல், அவ்வப்போது தன் விருப்பு வெறுப்புகளையும் சமூகத்தின் மீது தமக்கிருந்த அக்கறையும் காட்டியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

குடும்பப் பெண்களோடு ஒப்பிடும் போது, பரத்தையர் சுதந்திரமான நிலையில் இருந்திருக்கின்றனர். குடும்ப அமைப்பில் காணப்படுகின்ற பெண் மீதான ஒடுக்குமுறைகளைப் பரத்தையர் அனுபவிக்கவில்லை, மகப்பேறு என்ற கருத்தாக்கத்தின் மூலம் செயல்படுகிற ஆண் ஒடுக்கு முறையமைப்பும் பரத்தையர் அனுபவிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

பரத்தையருக்குப் புணர்ச்சிச் சுதந்திரம் இருந்திருக்கிறது, தலைவனை முழுவதும் சார்ந்து இருக்க வேண்டிய கட்டாயம் இல்லை. இவை போன்ற கருத்தாக்கங்கள் பெண் விடுதலை என்ற பெண்ணியச் சிந்தனையோடு தொடர்புபடுத்தி ஆராயப்படுகிறது. குடும்ப அமைப்பை நிராகரித்தல், குழந்தைப்பேறோடு தொடர்பில்லாதிருத்தல் போன்ற பெரியாரின் பெண்ணியச் சிந்தினைகளோடும் பரத்தமை பற்றிய கருத்தாக்கங்கள் இணைத்து விளக்கப்படுகின்றன.

## முடிவுரை

மேற்காணும் நான்கு இயல்களில் கிடைத்த முடிவுகளை அடிப்படையாகக் கொண்டு ஒரு மதிப்பீடாக இவ்வாய்வின் முடிவுரை அமைகின்றது. மேலும் எதிர்கால ஆய்வாளர்கள் இவ்வாய்வு தொடர்பான ஆய்வினை மேற்கொள்வதற்கு இடமும் கருத்துகளும் மேலாய்விற்குரிய களங்களும் ஆய்வின் இறுதியில் கூறப்பட்டுள்ளன.

**துணை நூற்பட்டியல்**

ஆய்வேட்டின் இறுதியில் ஆய்விற்குப் பயன்பட்ட நூல்கள் அகரவரிசையில் தொகுக்கப்பட்டுத் துணைநூற்பட்டியல் கொடுக்கப்பட்டுள்ளது.

**பின்னிணைப்புகள்**

- இயலில் குறிப்பிடப்பட்ட பாடல்கள் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன.
- தேவரடியார்களின் புகைப்படங்கள் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன.

# இயல் ஒன்று

## வரலாற்று நோக்கில் பரத்தையர்

தமிழ்ச் சமூகத்தில் பரத்தையர் குறித்த கருத்தாக்கங்கள் வெவ்வேறு காலக்கட்டத்தில் வெவ்வேறு சூழலில் இடம் பெற்றிருந்த நிலை குறித்து வரலாற்றுக் கண்ணோட்டத்துடன் இவ்வியல் பதிவு செய்கின்றது. **"சமுதாயம் ஒருதார மணமுறைக் குடும்பங்களை உடையதாக மாறுவதற்கு முன்னர் புணர்ச்சிச் சுதந்திரம் நிலவியுள்ளது. யாரும் யாருடனும் உறவு கொள்ளலாம் என்று இருந்தபோது உறவின் வெளிப்பாடுகளாக இருப்பவையே கைக்கிளையும் பெருந்திணையும். பிறப்பு, குடிமை, ஆண்டு, அருள், உணர்வு, திரு எனும் பலவற்றில் ஒத்த தலைவனும் தலைவியும் கொள்ளும் காதலுறவும் மணவுறவும் இதன் அடிப்படையிலான குடும்ப உறவும் தோன்றுவதற்கு முன்பு நிலவிய இந்தப் புணர்ச்சிச் சுதந்திரமே பரத்தமையின் தோற்றுவாய்க்கான காரணம் என்பது அறிஞர் முடிபு"[1].**

இலக்கியம் என்பது வரலாற்றைப் பிரதிப்பலிக்கும் காலக்கண்ணாடி எனில் அது மிகையாகாது. அந்த வகையில் சங்க இலக்கியத்தில் இடம்பெறும் பெண் மாந்தர்களுள் குறிப்பிடும் படியான இடத்தைப் பெறுபவள் பரத்தையாவாள். ஏனெனில் சங்க இலக்கியங்களில் இடம்பெறும் தலைமாந்தர்களில் தலைவி மற்றும் தோழி ஆகிய பாத்திரங்கள் முதன்மை பெறுவதற்குச் சங்க இலக்கியங்களில் இடம்பெறும் பரத்தை என்னும் எதிர்மை (opposite) பெண் பாத்திரத்தின் படைப்பு முக்கியமானதாகக் கருதப்படுகிறது. மேலும், பிரிவு வகைகளில் பரத்தையர் பிரிவும் ஒன்றாகக் குறிப்பிடப்படுவதால் பரத்தையரின் முக்கியத்துவம் இங்கு நோக்கத்தக்கது.

உயர்குடி மாந்தர்களை இலக்கியங்களில் பதிவுச் செய்யும் வழக்கம் அக்காலக் கட்டத்தில் பெரும்பாலும் காணப்பட்ட சூழலில், சமுதாயத்தில்

இழிந்தவராக அறியப்பட்ட பரத்தையர் பற்றிய பதிவுகள் சங்க இலக்கியத்தில் கணிசமான அளவில் இடம் பெற்றிருப்பதும் இங்கு நினைவு கூரத்தக்கது. மேலும், சமுதாயத்தில் தாழ்ந்த நிலையில் அறியப்பட்ட பரத்தையர்கள் சமூகத்தில் அங்கீகரிக்கப் பட்டவர்களாகவும் இடம் பெறுகின்றனர். சங்ககாலப் பரத்தையர்களின் வாழ்வை வரலாற்று நோக்கில் அறிய இவ்வியலானது முற்படுகிறது.

**“வரலாற்று நோக்கில் பரத்தையர்”** என்ற இவ்வியலானது, இலக்கியம் மற்றும் கல்வெட்டுச் சான்றுகள் போன்றவற்றினை அடிப்படைத் தரவுகளாகக் கொண்டு, வரலாற்று நோக்கில் பரத்தையர் பற்றிய கூறுகளை ஆராய முற்படுகிறது.

1. பரத்தை – சொற்பொருள் விளக்கங்கள்
2. இலக்கண நூல்களில் பரத்தையருக்கான பதிவுகள்
3. உரையாசிரியர்களின் பார்வையில் பரத்தையர்
4. சங்க இலக்கியங்களில் பரத்தையருக்கான பதிவுகள்
5. சங்கம் மருவிய கால இலக்கியங்களில் பரத்தையருக்கான பதிவுகள்
6. காப்பிய கால இலக்கியங்களில் பரத்தையருக்கான பதிவுகள்
7. கல்வெட்டுக்களில் பரத்தையருக்கான பதிவுகள்

## பரத்தை – சொற்பொருள் விளக்கம்

தமிழ் இலக்கிய மற்றும் இலக்கணப் பதிவுகளில் காணப்படும் பரத்தை என்னும் சொல்லினைக் கொண்டும், அகராதி பதிவுகளில் காணப்படும் பரத்தை பற்றிய சொற்பொருள் விளக்கத்தைக் கொண்டும், பரத்தை என்னும் சொல்லின் பொருண்மையினைப் பெற முயலும் போது,

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பேரகராதி, கதிரைவேற்பிள்ளையின் தமிழ்ச் சொல்லகராதி மற்றும் சதுரகராதி போன்றவை, பரத்தை என்னும் சொல்லிற்கு அது 'ஒரு செடி, வேசி' முதலிய விளக்கங்களைத் தருகின்றன.

க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, பரத்தை என்பதற்கு 'விலைமகள், அயன்மை, விபச்சாரி, ஒழுக்கக்கேடு' என்னும் விளக்கங்களை அளிக்கின்றது. பரத்தமை - விலைமகளிருடன் தொடர்புக் கொள்ளுதல் என்ற பொருளையும் தருகிறது.

## இலக்கண நூல்களில் பரத்தையருக்கான பதிவுகள்

பரத்தை என்கிற சொல் தமிழ் இலக்கண நூல்களான தொல்காப்பியம், நம்பியகப்பொருள், மாறனகப்பொருள், இலக்கண விளக்கம் முதலிய நூல்களின் பதிவுகளிலும் மற்றும் இளம்பூரணர் உரைவிளக்கம், நச்சினார்க்கினியர் உரை விளக்கம், இறையனார் களவியல் உரை ஆகியன உரையளவிலும் பரத்தையைப் பற்றி விரிவாகப் பேசுகின்றன. அவை பரத்தை, காமக்கிழத்தி, பின்முறையாக்கிய வதுவை (தொல்காப்பியம்), பரத்தை, புறப்பெண்டிர், காதல் பரத்தை - காதலிக்கப்பட்ட பரத்தை (இறையனார் களவியல் உரை), பரத்தை, காமக்கிழத்தி, பின்னர் வரைந்த பெதும்பை, விருந்தியல் பரத்தை (நம்பியகப் பொருள், மாறனகப் பொருள், இலக்கண விளக்கம்) என்கிற சொற்கள் இடம்பெற்றுள்ளன. இவையாவும் ஒரு பொருள் தருவன போல் தோன்றினாலும் சிற்சில வேறுபாடுகள் உள்ளன. பரத்தை என்னும் சொல்லின் பொருளானது தொல்காப்பியத்தில் இடம்பெறும் மூவகை பரத்தையரின் இலக்கணம் மற்றும் கூற்றுக்களை ஆராயும் தன்மையில் பரத்தை பற்றிய ஒரு முழுமையான விளக்கத்தினைப் பெற முற்படலாம்.

## தொல்காப்பியத்தில் பரத்தைப் பதிவுகள்

தொல்காப்பியம், சங்க காலத்தில் களவொழுக்கம் ஒழுகாமலும் மணம் செய்து கொள்ளாமலும் காமத்திற்காக ஆடவருடன் கூடிவாழும் பெண்டிர் சிலர் இருந்து வந்துள்ளனர் என்பதைப் பதிவு செய்துள்ளது. மேலும், பரத்தையர் பற்றிய பிரிவினையைப் (classification) பதிவு செய்யும் போது மூன்று வகை பரத்தையர் பற்றிக் குறிப்பிட்டுள்ளது. தலைவன் ஒருத்திக்கு மேற்பட்ட மனைவியர் அல்லது காமத்திற்கு வரைந்து கொள்ளப்பட்டவர் இருந்ததாகக் கருதவும் வாய்ப்புள்ளது. இத்தகைய பெண்களைத் தொல்காப்பியம்,

1. காமக்கிழத்தியர்
2. காதற்பரத்தையர்
3. சேரிப்பரத்தையர்

என மூன்று பிரிவினராகக் குறிப்பிடுகின்றது. இப்பரத்தையர் பற்றிய பதிவுகள் சங்க இலக்கியத்திலும் காணப்படுகின்றது. இதனை,

> **“காதற்பரத்தையர் காமக் கிழத்தியர்**
> **பின்முறை வதுவைப் பெருங்குலக் கிழத்தியென்**
> **றன்னவ ருரிய ரவையிரண் டிற்கும்”** [2]

என்னும் நூற்பா பதிவு செய்துள்ளது. நிலவுடைமை சமூகம் தோற்றம் கொண்ட காலக்கட்டத்தில் தொல்காப்பியம் இயற்றப்பட்டிருக்க வேண்டும் அல்லது அவரது காலத்திய நடப்பியல் நிகழ்வுகளைப் பதிவு செய்திருக்க வேண்டும் என்பதை இத்தகைய நூற்பா தெளிவுப்படுத்துகிறது. மேலும் மொழி என்பது பெண்ணுடன் தொடர்புடையது என்றாலும், அது நிலவுடைமை சமூகத்தில் ஆண் சமூகத்திற்குச் சாதகமாக செயல்படக் கூடியது என்பதை மெய்ப்பிக்கும் வகையில், சங்க மகளிருக்கு இடம்பெற்றிருந்த

பெயர்களைத் தொல்காப்பியர் வரிசைப் படுத்தியிருப்பதை இத்தகைய தலைப்புகளின் பொருண்மைகள் தெளிவு செய்கின்றன.

## 1. காமக்கிழத்தியர்

தொல்காப்பியர் பரத்தையர் என்னும் சொல்லிற்கு இணையாக 'காமக்கிழத்தியர், காதற்பரத்தை' ஆகிய சொற்களைக் கையாண்டுள்ளார். இவற்றில் 'காமக்கிழத்தி' என்ற சொல் காமத்திற்கு உரிமையுடையவள் என்ற பொருளைத் தருகின்றது. ஆனால் தொல்காப்பியர் கூறும் பரத்தை என்னும் சொல், ஒருவகையில் தலைவனின் இரண்டாம் மனைவி என்னும் பொருளினைத் தருவதைப் 'பின் முறையாகிய வதுவை' என்னும் சொற்களின் பொருள் மூலம் அறியப்படுகிறது.

தொல்காப்பிய நூற்பாவில் இடம்பெறும், **'தன்வயின் உரிமையும் அவன் வயிற் பரத்தையும்'**[3] என்ற களவியல் நூற்பாவிற்கு உரையெழுதும் இளம்பூரணர் 'பரத்தை' என்பதற்கு 'அயன்மை' எனப் பொருள் கொண்டுள்ளார். மேலும், இங்குப் 'பரத்தையர்' என்பதற்கு அயலார் என்று பொருள் கொள்வது தவறாகாது எனவும் பதிவு செய்துள்ளார். 'அயலாந்தன்மை' எனச் சங்க இலக்கியப் பாட்டும் தொகையும் பொருள் கொள்ளப்பட்டுள்ளது.

**'தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை மாயப்பரத்தை யுள்ளிய வழியும்'**[4] என்ற கற்பியல் நூற்பாவில் வரும் 'மாயப் பரத்தை உள்ளுதல்' என்பதற்குத் தலைவன் புறப் பெண்டிர் மாட்டும் போகிய வழி வெகுளுமாறு போலப் புதல்வனையும் அவரிடைச் சென்ற வழி வெகுளல் எனப் பொருள் கொள்ளப் பெற்றுள்ளது. புதல்வன் அப்பரத்தையரிடத்துச் செல்லுதலும் அவர் அவனுக்கு நல்லணிகளைப் பூட்டுதலும் அவரைத் தாயர் என்ற சொல்லால் அழைப்பதும் அப்பரத்தையர் விலைமகளிர் அல்லர் என்பதைத் தெளிவு செய்கின்றன. மேலும், இத்தகைய நூற்பாவின் பொருளினை

ஆராய்வோமானால், பரத்தை என்பவள் ஒருவகையில் தலைவனின் மனைவி என்னும் உறவில் வைத்துப் பார்க்கப்பட்டவளாக அறியப்படுகிறாள்.

மேற்காட்டிய சான்றில் பரத்தையரைப் புதல்வனின் தாயர் என்று தொல்காப்பியர் குறிப்பிட்டது நோக்கத்தக்கது. இம்முறை வழியே தலைவியும் இவரை 'எங்கையர்' என்று குறிப்பிடுகின்றாள். இதனைத்

**"தங்கிய ஒழுக்கத்துக் கிழவனை வணங்கி**

**எங்கையர்க்கு உரையென இரத்தற் கண்ணும்**

**.........................................................**

**கொடுமை ஒழுக்கம் கோடல் வேண்டி**

**அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக்**

**காதல் எங்கையர் காணின் நன்றென**

**மாதர் சான்ற வகையின் கண்ணும்"[5]**

என்ற நூற்பா அடிகளும் மெய்ப்பிக்கின்றன.

இவற்றில் வரும் 'எங்கையர்' என்ற சொல் காமக்கிழத்தியரை மட்டுமே குறித்தது என்று கொள்ளுதல் இயலாது. ஏனெனில் புதல்வனின் தாயர் என்று பரத்தையரும் குறிக்கப் பெறுவதால் 'எங்கையர்' என்ற சொல் பரத்தையரையும் குறித்தது என்றே கொள்ளுதல் வேண்டும். ஆயின் ஆடவர் பலரோடு பரத்தையர் உறவு கொண்டிருப்பின் அவரைத் தலைவி எங்கையர் என்று எவ்வாறு அழைத்தல் இயலும். எங்கை என்று தலைவி அழைப்பதாலேயே அப்பரத்தையர் தலைவனோடு மட்டுமே உறவு கொண்டிருந்தனர் என்ற கருத்து வலுப்பெறுகின்றது.

பரத்தையரை விலைமகள் என்று பொருள்பட எந்த இடத்திலும் தொல்காப்பியர் குறிப்பிடவில்லை. இது போன்றே ஆடவர் பலரோடு தொடர்பு கொண்ட செய்தியும் இடம்பெறவில்லை.

சமூகத்தில் ஆண்களால் உருவாக்கப்பட்ட சங்ககால மகளிருக்கு இணையான அல்லது காமக்கிழத்தியர் என்னும் பெயருக்கு எதிரான ஆண்பால் பெயர் பதிவு செய்யப்படவில்லை என்பது இங்கு நோக்கத்தக்கது. அதுபோலவே காமக்கிழத்தியர் என்பதற்கு இலக்கண விளக்கம் வரையறை செய்துள்ளது. இதனை,

**"ஒருவன் தனக்கே உரிமை பூண்டு**

**வருகுலப் பரத்தையர் மகளி ராகிக்**

**காமக்கு வரைந்தோர் காமக் கழத்தியர்"[6]**

என்னும் நூற்பா பதிவு செய்துள்ளது. காமக்கிழத்தியர் என்பார் சேரிப்பரத்தையர் போல பலருக்கு உரிமையுடையவராக இல்லாமல் ஒருவருக்கு மட்டுமே உரிமையுடைய குலப்பரத்தையர் போன்றவர். இவர்கள் தலைவனது காமம் காரணமாகப் பரத்தையாக ஏற்றுக் கொள்ளப்பட்டனர் என்று கருதமுடிகிறது. இவர்கள் தலைவனுடன் திருமணம் செய்து கொள்ளாமல் மனைவி போல் வாழ்ந்து வருபவர். இவர்களை இன்றைய வைப்பாட்டியர்களாகக் கொள்ளலாம். இவர்கள் தலைவனை மணஞ்செய்து கொள்ளாது தமக்கு விருப்பமானவரோடிருந்து மனைவியர் போலவே இல்லறம் நடத்தி வருபவர். இவர் 'இல்பரத்தையர்' எனப்படுவர். இல் - இல்லறம், இல்பரத்தையர் - ஒருவனோடு கூடி மனைவியர் போலக் குடும்பம் நடத்தும் அயல் மகளிர். இத்தகைய காமக்கிழத்தியர் மூன்று வகைப்படுவர் என்று இளம்பூரணர் உரைவகுத்திருப்பர். அவை,

- ஒத்தக் கிழத்தியர் – மனைவிக்கு வழங்கக்கூடிய உரிமைகள் அனைத்தும் வழங்கப்படக் கூடிய இரண்டாம் உரிமைப் பெண்.
- இழிந்த கிழத்தியர் - அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் முதலான குலத்தவருள் அவரவருக்கு இணையானக் குலத்திலுள்ள பெண்கள்

அல்லாமல் அவர்களுக்கு அடுத்த நிலையில் உள்ள பெண்களைக் கொடுப்பதற்கு ஒப்பானவர் இழிந்த கிழத்தியர்.

- வரையப்பட்டார் – செல்வம் உடையவர்கள் கணிகைக் குலத்திலுள்ள கன்னிப் பெண்களை இல்லத்திற்கு உரியவர்களாக்கிக் கொள்வர். இவர்கள் இரண்டு வகைப்படுவர் 1. கன்னிப் பருவத்தில் உள்ள பெண்கள். 2. கன்னிப் பருவத்தை இழந்த பெண்கள் எனக் குறிப்பிடுவர். பரத்தையர் என்பவர் தன்னுடைய அழகையும், இளமையையும் காட்டி பொருளுக்காக ஒருவரிடம் மட்டும் தங்காது பலருடன் வாழ்பவராவர்.

**"காமக்கிழத்தி இரண்டாம் மனைவி போல்வாள். இவளைப் பின் முறைவதுவை பெருமனைக் கிழத்தி என்பார். அதனால் மனைவி போல் சிறிது கூடுதலாய் பேசுவாள். ஆயினும் மனைவி உரிமை இவளுக்கில்லை, அதனால் மனைவி மீது பொறாமைப்படுவாள் என்று தமிழண்ணல் பதிவு செய்திருப்பார்"**[7]. அடுத்த நிலையில் வைத்துப் பார்க்கப்படுபவள் காதற்பரத்தை ஆவாள்.

**2. காதற்பரத்தையர்**

**"அகராதிகள் காதற்பரத்தை என்பதற்குச் 'சேரி பரத்தையின் மகளாய் தலைவனது காதற்குரிமைபூண்டு அவனையே சார்ந்திருப்பவள் என விளக்கம் தந்துள்ளது"**[8]. மேலும் **"காதற்பரத்தையர்களுக்குக் கலையில் இருந்த திறன் அடிப்படையில்**

- **ஆடர் கூத்தியர்**
- **ஆடலங் கணிகையர்**

**என அழைக்கப்பட்டனர்"**[9]. மேலும் காதற் பரத்தையர் என்பதற்கு இலக்கண விளக்கம்,

**“யாரையும் நயவா இயல்பிற் சிறந்த**

**சேரிப் பரத்தையர் மகளி ராகிக்**

**காதலிற் புணர்வோர் காதற் பரத்தையர்”[10]**

என்னும் நூற்பாவின் பதிவுகள் வழி அறிய முடிகிறது. மேலும், காதற் பரத்தையர் என்போர் யாவரையும் விரும்பாத இயல்பினால் மிக்க சேரிப்பரத்தையருடைய மகளிராய்த் தம் அன்பினால் தலைமகனோடு கூடும் இயல்புடையவர் ஆவர் என்று இலக்கணம் கூறுகின்றது.

**காதற்பரத்தையர் உரிமை**

**“அவருளும் வரைதற் குரியோ ருளரே”[11]**

காதற் பரத்தையருள்ளும் தலைமகனால் வரைந்துகோடற்கு உரியர் உளர். இவர்கள் தலைவனிடம் அன்பு கொண்டு இன்பந்துய்ப்பவர். ஆனால் காமக்கிழத்தியர் போலத் தலைவனோடு உடனிருந்து வாழ்க்கை நடத்துபவர் அல்லர். குடும்பத்திற்கும் இவர்க்கும் யாதொரு தொடர்பும் இல்லை. இன்று ஏதாவது ஒரு வேலையில் இருக்கும் ஒருசில பெண்கள் தமக்குப் பிடித்த ஓர் ஆடவரை வரப்போக வைத்துக் கொண்டிருப்பது போன்றது இது. அதாவது இன்றைய ‘கம்பானியன்’ போன்றவர்கள். இவர்கள் தலைவனை நம்பி வாழாமல் தாம் தேடும் பொருளால் தன்னுரிமையுடன் வாழ்பவர்கள்.

பொதுவாகவே பரத்தை மற்றும் பரத்தைப் பிரிவுகள் மருத நிலம் சார்ந்த கற்பு வாழ்வினில் அதிகமாக காணப்படுவதைச் சங்க இலக்கிய மற்றும் இலக்கண நூல்கள் பதிவு செய்துள்ளன. ஆனால், காதற் பாத்தையர் என்னும் சொல், களவுக் கால வாழ்வோடு தொடர்புடைய சொல்லினைப் போன்று சிக்கல் நிறைந்ததாய்க் காணப்படுகிறது. நிலவுடைமை மருத நிலச் சமூகத்தில் ஆண்களால் கட்டமைக்கப்பட்ட கற்பு வாழ்க்கையில், தலைவிக்கு எதிரான நிலையில் கட்டமைக்கப்பட்ட பரத்தை (கற்பின்மை / களவுக் கால வாழ்க்கை) என்னும் சொல், களவுக் காலச் சொல்லோடு தொடர்புடையது

போல் தோன்றுகிறது. மேலும், களவு என்பது தாய் வழிச் சமூகத்துடன் தொடர்புடையது என்பதை இத்தகைய காதற் பரத்தை என்னும் சொல் மறைமுகமாகப் பதிவு செய்துள்ளதை எடுத்துக்காட்டுகிறது. ஏனெனில் களவுக் காலம் என்பது கற்பு வாழ்க்கை போன்றதல்ல. மேலும் கட்டுப்பாடற்ற புணர்ச்சிச் சுதந்திரம் நிலவிய காலக் கட்டத்தோடு தொடர்புடையதாகக் காதற் பரத்தை என்னும் சொல்லின் பொருள் விளங்குவதாக அமைந்துள்ளது. இதன் வழி களவு வாழ்க்கையில் தலைவனால் காதல் கொள்ளப்படும் ஒன்றிற்கு மேற்பட்ட தலைவிகளும் ஒரு வகையில் பரத்தை என்னும் சொல்லிற்கு உடன்பட்டவர்களாகவே தெரிகிறது. களவே கற்பாக நீடிக்கும் பொழுது, தலைவி அல்லாதவள் பரத்தை என்னும் சொல்லால் குறிக்கப்பட்டாள்.

### 3. சேரிப்பரத்தையர்

இத்தகைய பெண்கள் ஒருவரைத் தலைவனாகக் கொள்ளாமல் விருப்பமுள்ளபோது விரும்பியவரைக் கூடி வாழ்பவராவர். இவர் தலைவன் மீது அன்பின்றித் தலைவன் கொடுக்கும் பொருள் மீது அன்புடையவர். இவர்கள் ஒருசில பெருஞ்செல்வந்தரால் பரத்தைத் தொழிலுக்கு உட்படுத்தப்பட்டு, நாளடைவில் தாமாகவே பெருகி ஒரு தனிக்கூட்டமாக ஆனவர் ஆவர். ஆடவரிற் சிலரும் முறையாக மணஞ்செய்து கொள்ளாமல் இவ்வகை மகளிர் போலவே வாழ்க்கை நடத்தி வருவது அன்று தொட்டு இன்றளவும் உண்டு.

## பரத்தை பற்றிய உரையாசிரியர்களின் விளக்கம்

பண்டைய காலத்தில் பரத்தமை என்பது தலைவனிடம் காணப்பட்ட ஓர் ஒழுக்கமாக பரத்தமை ஒழுக்கம் காணப்பட்டமையைத் தொல்காப்பியம் குறிப்பிடுவதனால் அறியமுடிகிறது.

பரத்தையர் யார் என்ற விளக்கம் தொல்காப்பியத்தில் இடம்பெறாது பின்னர் வந்த உரையாசிரியர்களால் இச்சொல் விளக்கம் பெறுகிறது.

### இளம்பூரணர்

பரத்தை என்னும் சொல்லிற்கு இளம்பூரணர், **'பரத்தையராவர் யாரெனின் அவர் ஆடலும் பாடலும் வல்லவராகி, அழகும் இளமையுங் காட்டி இன்பமும் பொருளும் வெஃகி ஒருவர் மாட்டுந் தங்காதார்'**[12] என்னும் விளக்கத்தினைத் தருகிறார்.

### நச்சினார்க்கினியர்

**'கண்ணாத காமக்கிழத்தியர்' என்ற வகைப்பாட்டினுள், அவர் கூத்தும் பாட்டும் உடையராகி வருஞ்சேரிப் பரத்தையருள் குலத்தின் கண் இழிந்தோரும், அடியவரும், வினைவலப் பாங்கினரும் பிறருமாம்'**[13] என்று குறிப்பிடுகின்றார். இளம்பூரணரால் பரத்தைக்குரியதாகக் கூறப்பட்டுள்ள இயல்பு சேரிப்பரத்தையின் இயல்பாக நச்சினார்க்கினியரால் விளக்கப்பட்டுள்ளது.

கற்பு வாழ்வில் கூற்றுக்குரியோராகப் பரத்தையரைக் குறிப்பிட்டாலும், அவர்களுக்கான கூற்று நிகழ்த்துமிடங்கள் தொல்காப்பியத்தில் இடம்பெறவில்லை. வேறாக, காமக்கிழத்தியர் கூற்று நிகழ்த்துமிடங்கள் (கற்பு 149) என்று கூறப்பட்டுள்ளது.

பரத்தையுடன் கூடி மகிழ்வதாகக் கூறப்படும் தலைவன் பரத்தையுடன் கூற்று நிகழ்த்துவதாகக் குறிப்புகள் இல்லை.

## தொல்காப்பியம்: கூற்றுக்களில் பரத்தையர் பற்றிய பதிவுகள்

தொல்காப்பியம் பொருளீட்டலுக்கான ஆதாரமாக, அரசுக்கான அடிப்படைத் தேவையாக அமையும் ஓதல், பகை, தூது என்பன காரணமான பிரிவுடன் பொருள்வயிற் பிரிவும் பேசியுள்ளது. மேலும், பரத்தையர் பிரிவு தனியொரு பிரிவாகப் பதிவு செய்யப்படவில்லை என்றாலும் கூற்று நிகழும் இடங்களைச் சுட்டுகையில்,

**"பரத்தையி னகற்சியிற் பிரிந்தோட் குறுகி**

**......................வகையோ**

**டுரைத்திற நாட்டங் கிழவோன் மேன"** [14]

என அகத்திணையில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இத்தகைய கூற்றுக்களில் விளைவாக வெளிப்படுபவையே பரத்தை பற்றிய பிரிவுகளாக இலக்கண நூல்கள் பதிவு செய்துள்ளது.

### தலைவன் கூற்றுக்களில் காமக்கிழத்தியர்

அகத்திணையில், உடன்போக்கின் கண்ணும் அதற்குப் பிறகும் தலைவன் கூறும் கூற்றுக்கள் பின்வருமாறு விளக்கப்படுகிறது.

**"ஒன்றாத் தமரினும் பருவத்துஞ் சுரத்தும்**

**ஒன்றிய மொழியொடு வலிப்பினும் விடுப்பினும்**

**..........................................................**

**காவற் பாங்கி னாங்கோர் பக்கமும்**

**பரத்தையி னகற்சியிற் பிரிந்தோட் குறுகி**

**இரத்தலுந் தெளித்தலும் எனஇரு வகையோடு**

**உரைத்திற நாட்டம் கிழவோன் மேன"[15]**

பரத்தையின் அகற்சியிற் பிரிந்தோட் குறுகி இரத்தலும் தெளித்தலும் என இருவகையோடு, பரத்தையிற் பிரிதல் காணத்தாற் பரிபுலம் பெய்திய தலைவியை எய்தி இரத்தலும், இரந்த பின்னர் ஊடலுணர்த்தலும் என்ற இருவகையோடே முற்கூறிய இடங்களில் எல்லாம் தலைவன் கூற்று நிகழும் இடங்களில் பரத்தையர் பற்றிய குறிப்புகள் பதிவு செய்யப்படுள்ளன.

**தலைவி கூற்றுக்களில் பரத்தையர்**

கற்பு வாழ்க்கையில் தலைவி கூற்று நிகழும் இடங்களில் பரத்தை பற்றியப் பதிவுகள் இடம்பெறுகின்றன. இவற்றில் சில கூற்றுக்களுள் தன்வயின் உரிமையும் அவன் வயிற் பரத்தைமையும் நிகழ்த்தவும் பெறுமென்கிறார். இதனை,

**"மறைந்தவற் காண்ட றற்காட் டுறுத**
**னிறைந்த காதலிற் சொல்லெதிர் மழுங்கல்**
**வழிபாடு மறுத்தன் மறுத்தெதிர் கோடல்**
**……………………………………………**
**காமஞ் சிறப்பினும் அவனளி சிறப்பினு**
**மேமஞ் சான்ற வுவகைக் கண்ணுஞ்**
**தன்வயி னுரிமையு மவன் வயிற் பரத்தையு**
**மன்னவு முளவே யோரிடத் தான"[16]**

என்னும் அடிகள் காமஞ் சிறப்பினும் என்பது தலைமகன் மாட்டு வேட்கை மிகினும், தன் வயின் உரிமையும் அவன் வயிற் பரத்தையும் உரைக்கும் தலைவி, அவன் அளி சிறப்பினும் என்பது தலைவன் பரத்தைமையும் தோன்றக் கூறும் என்கின்றார். இது போலவே, சங்க இலக்கிய நூலான குறுந்தொகையில் (80), பரத்தமைக்கு அஞ்சும் தலைவி, தன் சுற்றத்தாரோடு தன் கணவன் மார்பைக் காத்துக் கொள்ள வேண்டும் என்றால் ஒரு பரத்தை

என்னும் பதிவு கிடைக்கிறது. இங்கு ஏமஞ்சான்ற உவகைக் கண்ணும் என்பது ஏமம் பொருந்திய மகிழ்ச்சி வந்துழியும் தன்வயின் உரிமையும் அவன் வயிற் பரத்தைமையும் தோன்றக் கூறும். அஃதாவது இவன் வரைந்தல்லது நீங்கான் என்னும் உவகை ஆகும் என்று கூறுகின்றது.

கற்பின்கண் தலைவன் கூற்றுக்கள் நிகழுமிடத்தினை,

**“கரணத்தி னமைந்து முடிந்த காலை**

**நெஞ்சுதளை யவிழ்ந்த புணர்ச்சிக் கண்ணும்**

**…………………………………………**

**காமக் கிழத்தி மனையோ ளென்றிவர்**

**ஏமுறு கிளவி சொல்லிய வெதிருஞ்”**[17]

என்னும் நூற்பா பதிவு செய்துள்ளது. காமக்கிழத்தி, மனையோள் என்ற இவர் ஏமுறு கிளவி சொல்லிய எதிரும் காமக்கிழத்தி மனையோளென்றிவர் சொல்லிய ஏமுறு கிளவி எதிரும் இற்பரத்தை தலைவியென்று கூறிய இருவர் சொல்லிய வருத்தமுற்ற நிலையின் எதிரிடத்தும் கூற்று நிகழ்த்துவதாக அமைகிறது. மேலும்,

கற்பின்கண் தலைவி கூற்றுக்கள் நிகழுமிடங்கள் இவை,

**“காமக் கழத்தி தன்மகத் தழீஇ**

**யேமுறு விளையாட் டிறுதிக் கண்ணும்”**[18]

தலைவியின் மகன் மனைப்புறத்தில் விளையாடுவதைக் கண்ட காமக்கிழத்தி அவனை அணைத்துக் கொள்கின்றாள். இதனால் தலைவி பரத்தையிடம் தலைவனிடமும் ஊடல் நிகழ்த்துகின்றாள். இங்குப் பரத்தை தலைவனைத் தமதாக்கிக் கொள்ளும் எண்ணத்துடன் தலைவன் புதல்வனைத் தன்னுடமையாக்கிக் கொள்ளக் கருதுகிறாள்.

நலம் பாராட்டிய காமக்கிழத்தியர் தலைவி தன்னிற் சிறந்தாராகத் தன்னான் நலம் பாராட்டடப்பட்ட இற்பரத்தையர் மேல் தீமையுறுவரென முடித்துக்கூறும் பொருளின் கண்ணும், கொடுமை ஒழுக்கம் தோழிக்கு உரியவை பரத்தையிற் பிரிவும் ஏனைப் பிரிவுகளும் ஆகித் தலைவன்கண் நிகழும் கொடுமை ஒழுக்கத்தில் தோழிக் கூறுதற்கு உரியளென மேற்கூறுகின்றவற்றைக் கேட்டவழி, கற்பின்கண் தோழிக்குரிய கூற்றுக்கள் நிகழுமிடம் என்று சுட்டடப்படுகிறது.

**“பிழைத்துவந் திருந்த கிழவனை நெருங்கி**

**யிழைத்தாங் காக்கிக் கொடுத்தற் கண்ணும்”**[19]

பரத்தையர் மனைக்கண் தங்கி வந்து அகனகர் புகுந்து புறத்திருந்த தலைவனை மிகக் கழறிச் சில மொழிகளைக் கூறி, இதனானே தலைவி மனத்தின்கண் ஊடல் நீங்கும் தன்மை உளதாக்கிக் காட்டும் இடத்தும்,

**“புறம்படு விளையாட்டுப் புல்லிய புகற்சியும்”**[20]

பரத்தையிடத்தே உண்டாம் விளையாட்டினைத் தலைவன் பொருந்திய மனமகிழ்ச்சிக் கண்ணும்,

**“பேணா வொழுக்கம் நாணிய பொருளினும்”**[21]

பரத்தை தலைவியைப் பேணாது ஒழுகிய ஒழுக்கத்திற்குத் தலைவி நாணிய பொருளின் கண்ணும் தலைவற்குத் தோழி கூற்று நிகழும். பாணரும் கூத்தரும் விறலியரும் என்று சொல்லுகின்ற இம்மூவரும் பேணிச் சொல்லிய குறைவினை எதிரும் விரும்பிக் கூறிய குறையுறும் வினைக்கு எதிராகவும் கூற்று நிகழும்.

**காமக்கிழத்தியர் கூற்றுக்கள் நிகழுமிடம்**

கற்பு வாழ்வில் கூற்று நிகழ்த்த தகுதியுடையோர் பட்டியலில் பரத்தையும் இடம்பெற்றுள்ளாள். பரத்தை பற்றித் தொல்காப்பியப் பொருளதிகாரத்தில்,

**"பரத்தையின் அகற்சியிற் பிரிந்தோட் குறுகி"[22]**

**"வழுவின்று நிலைஇய இயற்படு பொருளினும்"[23]**

**"காமக்கிழத்தி தன்மகத் தழீஇ"[24]**

மற்றும்,

**"பரத்தை மறுத்தல் வேண்டியுங் கிழவி**
**மடத்தகு கிழமை யுடைமை யானும்**
**அன்பிலை கொடியை யென்றலும் உரியள்"[25]**
**"கற்புவழிப் பட்டவள் பரத்தையை ஏத்தினும்"[26]**

எனும் கூற்றுக்கள் பரத்தை பற்றியதாக அமைகின்றன. மேலும், பரத்தையர் பிரிவிற்கு நாள் வரையறையும் செய்துள்ளார் தொல்காப்பியர். இது,

**"பூப்பின் புறப்பா டீராறு நாளும்"[27]**

என்னும் நூற்பாவால் அறியப்படுகிறது. அதுபோலவே, கற்புக் காலத்தில் தலைவன் காமக்கிழத்தியரை நாடும் இடங்களாக வரையறை செய்யும் போது,

**"புல்லுதன் மயக்கும் புலவிக் கண்ணும்**

**...............................................**

**கண்ணிய காமக் கிழத்தியர் மேன"[28]**

என்றும்,

**"பரத்ததை மறுத்தல் வேண்டியுங் கிழத்தி"[29]**

என்றும், தலைவன் படிற்றுள்ளத்தாற் புறத்து ஒழுகும் ஒழுக்கத்தைப் போக்குதல் விரும்பியும் பரத்தையிற் பிரிவின்கண் தலைவற்கும் தலைவிக்கும் இலக்கணம் உரைக்கப்படுகிறது.

**பரத்தையிற் பிரிவு நிகழ்தற்கான காலம்**

**“பூத்த காலைப் புனையிழை மனைவியை**
**நீரா டியபின் ஈராறு நாளுங்**
**கருவயிற் றுறூஉங் கால மாதலிற்**
**பிரியப் பெறாஅன் பரத்தையிற் பிரிவோன்”[30]**

நீராடியபின் பன்னிரண்டு நாளுங் கருவுறுங் காலமாதலால் பரத்தையிற் பிரிந்த தலைமகன் அப்பன்னிரண்டு நாளுந் தலைமகளைப் பிரிய மாட்டான்.

**“பூப்பின் புறப்பா டீராறு நாளு**
**நீத்தகன் றுறையா ரென்மனார் புலவர்**
**பரத்தையிற் பிரிந்த காலை யான”[31]**

பரத்தையிற் பிரிந்த காலையான, பரத்தையிற் பிரிந்த காலத்தின் கண்ணுண்டான பூப்பின் நீத்து இருகாலத்தின்கட் சொற்கேட்கும் அண்மைக்கண் நீங்கியிருந்து, புறப்பாடு ஈறாறு நாளும் அகன்றுறையார்.

**“தோழி தாயே பார்ப்பான் பாங்கன்**
**பாணன் பாடினி யிளையர் விருந்தினர்**
**கூத்தர் விறலிய ரறிவர் கண்டோர்**
**யாத்த சிறப்பின் வாயில் களென்ப”[32]**

என்று நூற்பாவில் கற்பு காலத்தில், பரத்தையர் பிரிவால் தலைவனிடம் தலைவிக்கு ஏற்படும் ஊடலைத் தவிர்க்கும் வாயில்களாக,

**“பாணன் கூத்தன் விறலி பரத்தை**
**யாணஞ் சான்ற அறிவர் கண்டோர்**
**பேணுதகு சிறப்பிற் பார்ப்பான் முதலா**

**முன்னுறக் கிளந்த அறுவரொடு தொகைஇத்**

**தொன்னெறி மரபிற் கற்பிற் குரியர்"[33]**

பாணன் முதலாகச் சொல்லப்பட்ட அறுவரும் மேற்சொல்லப்பட்ட பார்ப்பான் முதலிய அறுவருங்கூடப் பன்னிருவருங் கற்பின்கட் கூறுதற்குரியர் ஆவர்.

**பரத்தை வாயில்கள்**

ஊடல் தீர்க்கும் வாயில் நால்வர்க்கும் உரியது. பரத்தையின் பிரிவு தலைவன் தலைவி வாழும் அதே நிலத்தில் நிகழும் என்பதை,

**"பரத்தை வாயி னால்வர்க்கு முரித்தே**

**நிலத்திரி பின்ற தென்மனார் புலவர்"[34]**

பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்து. தலைவன் பரத்தமையால், தலைவிக்குத் தோன்றிய ஊடல் தீர்த்தற்குரிய வாயிலை, அவர்பாற் செலுத்தல் நான்கு வருணத்தாருக்கும் உரித்து, அஃது நிலத்திரிபு என்கின்றனர். அவ்வொழுக்கம் பெரும்பான்மை மருத நிலத்தினின்றுந் திரிந்து வருதலாகும் என்று கூறுகின்றார்.

தலைவி பரத்தையைப் புகழினும் உள்ளத்தூடல் உண்டெனல்,

**"கற்புவழிப் பட்டவள் பரத்தை யேத்தினு**

**முள்ளத் தூட லுண்டென மொழிப"[35]**

கற்பின்வழி நின்ற தலைவி, பரத்தையைப் புகழ்ந்து பேசினாலும், அவளிடம் உள்ளத்தில் ஊடல் கொண்டிருப்பாள் என்பதை அறியமுடிகின்றது. மேலும் இதனை,

**"தம்முறு விழுமம் பரத்தையர் கூறினும்**

**மெய்ம்மை யாக வவர்வயி னுணர்ந்தும்**

**தலைத்தாட் கழறல்த மெதிர்ப்பொழு தின்றே**

**மலிதலு மூடலு மவையலங் கடையே"[36]**

தலைவனால் தாம் உற்ற வருத்தத்தைத் தலைவிக்குப் பரத்தையர் கூறினும் ஏனைத் தலைவியர் கூறினும், அவர் வயின் மெய்ம்மையாக உணர்ந்து அவர் கூறியவற்றானே, அவ்வருத்தத்தை அவரிடத்து உண்மையாக உணர்ந்து தலைவன் முன் நின்று கழறும் கழற்றுரை தம்மைப் பரத்தையர் எதிர்ப்பட்ட பொழுதின்கண் இல்லை. அவர் துயருற நின்றுழிக்கவல்லது நீங்கினானென மகிழ்தலும், அவன் பிரிவிற்கு இவர் இரங்கினாரென்ற காரணத்தான் ஊடுதலும் நிகழாது என்பது புலப்படுகின்றது.

## ஒருசார் கூற்றிற்கு உரியார்

**"பரத்தை வாயில் எனவிரு வீற்றுங்**

**கிழத்தியைச் சுட்டாக் கிளப்புப் பயனிலவே"[37]**

பரத்தையென்று சொல்லப்படும் வேறுபாட்டினும் வாயிலென்று சொல்லப்படும் வேறுபாட்டினும், தலைமகளைச் சுட்டாத கூற்றும் பயனில்லை என்பது இதன் மூலம் தெளிவாகிறது.

## இறையனார் களவியல் உரை

இறையனார் களவியல் உரை பரத்தை என்ற சொல்லிற்கு அடைமொழியாகப் 'பொருட்பிணிப் பரத்தையர்' எனச் சேர்த்துக் கூறியிருக்கிறது. இங்குப் பரத்தை என்கிற சொல் தலைவன் தலைவியைத் தவிர உறவு கொள்ளும் பிற பெண்களைப் பொதுப் பெயரிட்டு அழைக்கும் முறையில் அமைந்துள்ளது. பொதுவாகவே, அகத்தில் திருமணத்திற்கு முன்பே பரத்தையருடன் ஒழுக்கம் கொள்ளும் முறை தலைவனுக்கு உண்டு. திருமணத்திற்கு முன்பு காதற் பரத்தையிடமும் திருமணத்திற்குப் பின்பு காமக்கிழத்தி, பின்முறை வதுவைப் பெருங்குலக் கிழத்தி ஆகிய இருவரும் ஆணின் புணர்ச்சிக்கு உரியவர் என்பதை இறையனார் களவியலுரை பதிவு செய்துள்ளது.

பரத்தையரிடம் இருந்து பிரிந்து வந்தால் தான், ஆண் இடத்தில் மனைவிக்குக் காதல் மிகுதியாகும். பரத்தை காரணமாகத் தலைவன் பிரிவது தன் ஊரை, நாட்டை விட்டுத் தாண்டிய இடமாக இருக்கக் கூடாது. ஏனெனில்,

**"பரத்தையிற் பிரிந்த கிழவோன் மனைவி**
**பூப்பின் புறப்பா டீராறு நாளும்**
**நீத்தகன் றுறைதல் அறத்தா றன்றே"[38]**

என்றதனால் தன் மனைவிக்குக் குழந்தைப்பேறு காலம் வந்துவிட்டால், அதாவது அவள் புணர்தலுக்கு உரியவள் என்பதை அறிகிறாள். பூப்பு தோன்றியது முதல் பன்னிரண்டு நாளும் ஆண் பெண்ணைப் பிரிவதில்லை. பெண் பூப்பெய்தியதை வாயில்கள் செவ்வணி அணிந்து உணர்த்துவர். எனவே, அவன் ஊர் எல்லையைத் தாண்டக் கூடாது. பூப்பு அடைந்த முதல் மூன்று நாள் ஆண் பெண்ணைப் புணர்வது இல்லை. எனவே, நாலாம் நாள் முதல் பன்னிரண்டாம் நாள் வரையிலான ஒன்பது நாளும் ஆண் தன் மனைவியுடன் இருப்பான். அவள் கருத்தரித்ததும் பிரிவான். அந்தப் பெண் குழந்தைப் பெற்றதும் வெள்ளணி உடையணிந்து ஊடல் தணிக்கும் வாயில்கள் என்று சொல்லப்படுகின்றவர்கள் ஆணுக்கு அறிவிப்பர். பின் ஆண் வருகை தந்து மனைவியுடன் கூடுதல் நிகழும். இவ்வாறே ஒரு ஆணின் அகஒழுகலாறு இருந்திருக்கிறது என அகப்பொருள் இலக்கணங்கள் விளக்குகின்றன.

## நம்பியகப்பொருள்

நம்பியகப்பொருள், பரத்தை பற்றிய செய்திகளை அகம் சார்ந்த பொருளில் பதிவு செய்துள்ளது. இதில் **"காதற்பரத்தையர் என்போர் யாவரையும் விரும்பாத இயல்பினால் மிக்க சேரிப்பரத்தையருடைய மகளிராய் தம் அன்பினால் தலைமகனோடு கூடுவார் என்றவாறு"[39]** என்கிற

நம்பியகப்பொருள் உரைக்கருத்தும் இணைத்துப் பார்க்கத்தக்கது. இப்படி வரையறை செய்யப்பட்ட பரத்தை என்கிற சொல் மீதான புரிதல் நம்பியகப்பொருளிலும் பிற்கால இலக்கண நூல்களிலும் இடம்பெற்றன. எனவே தொல்காப்பியத்தில் இடம்பெற்ற ஒரு சொல் கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டிலும், பன்னிரெண்டாம் நூற்றாண்டிலும், பதின்மூன்றாம் நூற்றாண்டிலும் என்று ஒவ்வொரு காலக்கட்டத்திலும் அச்சொல் அதற்கான பொருளும் பலவாறு புரிந்து கொள்ளப்பட்டிருக்கின்றது.

பரத்தன் x பரத்தை எனும் சொல் தரும் பொருளுக்கு இணையான பொருளைப் பரத்தன் எனும் சொல் தரவில்லை. திருக்குறளில் வரும் பரத்தன் எனும் சொல் 'அனைவரும் விரும்பும் தன்மையை உடையவன்' என்ற பொருளிலும், அகநானூற்றில் 'ஏமாற்றுப் பேர்வழி' என்கின்ற பொருள்படவும் தான் வந்திருக்கிறது. அதே சமயம் பெண்பாலைக் குறிக்கும் 'பரத்தை' எனும் சொல்லினைப் பலவாறு பிரித்து விளக்குகின்றன. இலக்கண நூல்களும் உரைகளும், ஒரு ஆண் ஒரு பெண்ணைக் காண்பது முதல் தொடங்கும் அக இலக்கண களவு, கற்பு என்ற இருபெரும் பாகுபாட்டை அமைக்கிறது. இதில் பிரிவு என்பது முக்கியமான ஒன்று. களவில் பிரிவு, கற்பில் பிரிவு என அவை இரண்டாக அறியப்படுகின்றது. கற்புக்காலத்தில் அதாவது திருமணத்திற்குப் பின்பு பிரியும் பிரிவில் ஒன்றாகவே எல்லா இலக்கண நூல்களிலும் பரத்தையர் பிரிவு இடம்பெறுகிறது. எனவே பரத்தை என்கிற சொல் திருமணத்திற்குப் பிறகான வாழ்க்கை முறைமைக்குள் நடைபெறுவது பெரும்பான்மை என்னும் பரத்தை பற்றிய குறிப்பினை நம்பியகப்பொருள் பதிவு செய்துள்ளது.

நம்பியகப்பொருள் ஒவ்வொரு பரத்தையைப் பற்றியும் விளக்கம் தருகிறது. களவு ஒழுக்கத்தின்போது ஆண்மகன் காதற்பரத்தையையும் காமக்கிழத்தியையும், பின்முறை வதுவைப் பெருங்குலக் கிழத்தியையும் புணர்தலுக்கு உரியனவாகக் குறிப்பிடுகின்றது. அயன்மனைப் பிரிவு,

அயற்சேரிப் பிரிவு, புறநகர்ப் போக்கு முதலியனவும் மனைவி தவிர பிற பெண்டிர் உடன் நிகழ்த்தப்படுவதாகக் கூறுகிறது. நானில ஒழுக்கம் சார் அகவாழ்வின் கருப்பொருளைக் கூறுமிடத்து நெய்தலுக்குரிய மக்களைக் கூறும் நம்பியகப்பொருள் ஆசிரியர்,

**"வருணன் சேர்ப்பன் விரிதிரைப் புலம்பன்**

**பரும அல்குற் பரத்தி நுளைச்சி**

**நுளையர் நுளைச்சியர் பரதர் பரத்தியர்"**[40]

எனக் குறிப்பிடுகிறார். இங்கு அறியப்படும் நெய்தல் நில மக்களும், கற்பொழுக்கத்தில் இடம்பெறும் பரத்தை என்கிற பெயரும் இணைந்து அறியத்தக்கது. எனவே தமிழ் அக இலக்கண மரபில் பரத்தை என்கிற சொல் மீதான புரிதல் காலந்தோறும் புதிது புதிதாகப் பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது.

## புறப்பொருள் வெண்பாமாலை

தொல்காப்பியத்தின் புறத்திணைப் பொருளினை விரிவாக விளக்கும், பிற்கால இலக்கண நூலான புறப்பொருள் வெண்பாமாலையில் பெருந்திணைப் படலம், பெண்பால் கூற்று குறித்து விளக்குமிடத்துப் பரத்தை பற்றிய பதிவினை விளக்கியுள்ளார் அதன் ஆசிரியர் ஐயனாரிதனார். புறப்பொருள் வெண்பாமாலை பொருந்தாக் காமமாகக் கருதப்படும் பெருந்திணையில் இடம்பெறும் பெண்களாகப் பரத்தையைக் காட்டுகிறார். பரத்தையை ஏசல், பரத்தைக் கூறல், பரத்தை வாயில், பாங்கி சொல்லல் என அவை அமைந்துள்ளன. இதில் பரத்தையை ஏசல் என்பதில்,

**"யாமுயங்கு மென்முலையால் யாணர் வயலூரன்**

**தேமுயங்கும் பைந்தார் திரைமுயங்க - யாமுயங்க**

**செவ்வயர் சேரி இரவும் இமைபொருந்தாக்**

**கவ்வைக் கருதிற் கடை"[41]**

என்று பரத்தையைப் பற்றி பதிவு செய்துள்ளது. கி.பி.10ஆம் நூற்றாண்டு அளவில் பொருந்தாக் காமத்தினூடாக இச்செய்தி பதிவு செய்யப்பட்டுள்ளமைக் குறிப்பிடத்தக்கது.

## மாறனகப் பொருள்

கி.பி.16ஆம் நூற்றாண்டில் தோன்றிய மாறனகப்பொருள் காமக்கிழத்தியர் பற்றியும் சேரிப்பரத்தையர் பற்றியும் காதற் பரத்தையர் பற்றியும் தனித்தனியே விளக்குகிறது.

**"காமரதம் பயில் காமக்கிழத்தியர்**
**ஒருவன் தனக்கே உரிமை பூண்டு**
**நிலைபெறும் குலம்என நிகழ்பரத் தையரே"[42]**

என்றும் நாளும் ஒவ்வொருவரை நாடிப் பிழைக்கும் தன்மை உடையவராக சேரிப் பரத்தையர் செயல் சொல்லப்படுகிறது. தம்மொடு தொடர்பு கொண்ட முதல் ஆணைத் தவிர வேறு யாரையும் காதற்பரத்தை உரிமையாக்க மாட்டார்கள் என்று கூறுகிறது.

## இலக்கண விளக்கம்

காதற் பரத்தை என்பதற்கு தொல்காப்பியம் தராத இலக்கணத்தை, அவற்றிற்குப் பிந்தைய இலக்கண நூலான இலக்கண விளக்கம் வரையறை செய்கிறது. இதனைப் பின்வரும் நூற்பா சுட்டிக் காட்டுகிறது.

**"யாரையும் நயவா இயல்பில் சிறந்த**
**சேரிப் பரத்தையர் மகளிர் ஆகிக்**
**காதல் புணர்வோர் காதல் பரத்தையர்"[43]**

என்பதை மட்டும் புதிதாகக் கூறுகிறது இலக்கண விளக்கம். சேரிப்பரத்தையின் மகள் காதற்பரத்தையாகின்றாள். நாளும் ஒருவரை நாடிப் பிழைக்கும் சேரிப்பரத்தையின் மகள் ஒருவனுக்கே உரிமை பூண்டு வாழக் கட்டுப்படுத்தப் பட்டிருக்கிறாள்.

சேரிப்பரத்தையர் தம் காதலாற் புணர்தற்குரியவராவார். காமக்கிழத்தியர் ஒருவனுக்கே உரிமை பூண்டவராய்க் காமத்தின் பொருட்டு வரையப்படுவர். பின்முறை வதுவைப் பெருங்குலக் கிழத்தியாவாள் இரண்டாம் மனைவி.

**“அவருட்**

**காதற் பரத்தையர் களவிற் குரியர்”[44]**

மேற்சொல்லப்பட்ட மூவகையவர்களில் காதற் பரத்தையர் களவொழுக்கத்திற்கு உரியர்கள் ஆவர்.

**“ஒழிந்தோர் மன்றற் புணர்ச்சிக் குரியர்”[45]**

காமக்கிழத்தியும், பின்முறை வதுவைப் பெருங்குலக் கிழத்தியுமாகிய இருதிறத்தோரும் வதுவைப் புணர்ச்சிக்குரிய மகளிர் ஆவர்.

**கற்பில் நிகழும் பிரிவின் வகை**

**“பரத்தையிற் பிரிதல் ஓதற்குப் படர்தல்**
**அருட்டகு காவலொடு தூதிற் ககறல்**
**உதவிக் கேகல் நிதியிற் கிகத்தலென்**
**றுரைபெறு கற்பிற் பிரிவறு வகைத்தே”[46]**

பரத்தையிற் பிரிதல் முதலாக நிதியிற்கிகத்தல் ஈறாக ஆறு வகையினை உடைத்தாங் கற்பின்கட் பிரியும் பிரிவு ஆகும்.

**பரத்தையிற் பிரிவின் வகை**

> **"அயன்மனைப் பிரிவயற் சேரியின் அகற்சி**
> **புறநகர்ப் போக்கிவை புரவலற் குரிய**
> **பரத்தையிற் பிரிவும் பருவத் தான"[47]**

அயன்மனைப்பிரிவு முதலாகிய மூன்று வகைப் பிரிவும் தலைவனுக்கு உரிய பரத்தைப் பிரிவுகள் ஆகும்.

**அயன்மனைப் பிரிவுக்குக் காரணம்**

> **"கெழீஇய காமக் கிழத்தியர் பொருட்டாத்**
> **தழீஇய அயல்மனைத் தலைவன் பிரியும்"[48]**

பொருந்திய காமக்கிழத்தியர் காரணமாகத் தலைமகன் தொடர்ந்து இல்லறத்தை விட்டுப் பிரியும் பிரிவுகளாகும்.

**அயற்சேரிப் பிரிவுக்குக் காரணம்**

> **"பின்னர் வரைந்த பெதும்பையும் பரத்தையும்**
> **இன்னியல் விழவும் ஏது வாக**
> **அவனயற் சேரியின் அகலும் என்ப"[49]**

இரண்டாவது வரைந்து கொள்ளப்பட்ட பெதும்பைப் பருவக் கிழத்தியும், காதற்பரத்தையும் இனிய தன்மையுடைய விழவும் காரணமாகத் தலைமகன் அயற்சேரியின் கண்ணே பிரியும் தன்மையாகும்.

**புறநகர்ப் போக்குக்குக் காரணம்**

> **"விருந்தியற் பரத்தையைப் பெருந்தேர் மிசைக்கொண்**
> **டிளமரக் காவின் விளையா டற்கும்**
> **புனலா டற்கும் புறநகர்ப் போகும்"[50]**

இளமரக்காவின் கண்ணே விளையாடுதல் காரணமாகவும் புனலாடுதல் காரணமாகவும் தலைமகன் புதியளாகிய பரத்தையைத் தேரின் மேல் ஏற்றிக்கொண்டு நகர்ப்புறத்திலே போவான் என்று கூறுகிறது.

**நான்கு வருணத்தார்க்கும் உரிய பிரிவு**

**"பரத்தையிற் பிரிவும் பொருள்வயிற் பிரிவும்**
**உரைத்த நால்வர்க்கு முரிய வாகும்"[51]**

பரத்தையிற் பிரிவும், பொருள்வயிற் பிரிவுமாகிய இரண்டும் மேற்சொல்லப்பட்ட நால்வர்க்கும் உரியனவாம்.

**கற்புக் காலத்துத் தலைமகள்**

**"பூத்தமை சேடியிற் புரவலற் குணர்த்தலும்**
**நீத்தமை பொறாது நின்றுகிழ வோனைப்**
**பழிக்குங் காமக் கிழத்தியைக் கழறலும்**
**கிழவோற் கழறலும் வழிமுறை மனைவியைக்**
**கொழுநனொடு வந்தெதிர் கோடலும் அவனொடு**
**பாங்கொடு பரத்தையைப் பழித்தலும் நீங்கிப்**
**……………………………………………**
**ஆடிவிளை யாடலுங் கூடும் கிழத்திக்கு**
**பூத்தமை சேடியிற் புரவலற்குணர்த்தல்"[52]**

முதலாகக் குளனாடல் ஈறாகச் சொல்லப்பட்டவை எல்லாம் கற்புக்காலத்துத் தலைமகனுக்குப் பொருந்துகிறது.

**பரத்தையர்க்கு உரிய செயல்**

> **"கிழவோன் தன்னையுங் கிழத்தி தன்னையும்**
> **இகழ்தலும் தம்மைப் புகழ்தலும் நிகழ்பொருள்**
> **காத்தலும் பரத்தையர் கடனென மொழிப"**[53]

தலைமகனையும் தலைமகளையும் இகழ்தல் முதலாகச் சொல்லப்பட்டவை எல்லாம் பரத்தையர் முறைமையினை வெளிப்படுத்துகின்றது.

**பரத்தையர்க்கு உரிய சிறப்புவிதி**

> **"பரத்தையர் காதற் பரத்தையைப் புகழ்தலும்**
> **தம்மை இகழ்தலும் தம்முளுங் கூறுப"**[54]

இந்நூற்பவானது காதற்பரத்தையைப் புகழ்தலும், தங்களையிகழ்தலும் உண்டு என்று கூறுவர் பரத்தையர் எனச் சுட்டுகின்றது.

**சங்க இலக்கியங்கள்**

மனித வாழ்வியலில் காலங்காலமாகப் பரத்தமை காணப்படுகிறது. பழந்தமிழர் வாழ்வில் பரத்தமை பற்றிய செய்திகளைத் தொகுத்து நோக்கும்போது சங்கப் புலவர்களின் நோக்கும் வெளிப்படுகின்றது. பரத்தமை பற்றிய தெளிவு தமிழர் பண்பாட்டில் இன்றியமையாதது என்பதைச் சங்கப் புலவர்கள் எடுத்துக்காட்டியுள்ளனர்.

சங்கப் பாடல்களின் தொகுப்புகளில் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, கலித்தொகை, ஐங்குறுநூறு என்னும் ஐந்தும் பரத்தமை பற்றிய செய்திகளை விளக்கமாகத் தருகின்றன.

ஐந்து தொகுப்பு நூல்களின் முழுமையான பாடல்களின் எண்ணிக்கை (அகநானூறு 400, நற்றிணை 400, குறுந்தொகை 401, ஐங்குறுநூறு 500, கலித்தொகை 150) 1851 ஆகும். அவற்றுள் பரத்தமை பற்றிய பாடல்களின் தொகை 257 ஆகும். மொத்தப்பாடல்களில் ஏழில் ஒரு பங்கு பரத்தமை பற்றிய

பாடல்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன. இப்பாடல்களைப் பாடிய புலவர்களின் தொகை 63. ஆண்பாற் புலவர்கள் 56 பேர். பெண்பாற் புலவர்கள் 7 பேர். பாடியவர் பெயர் குறிப்பிடப்படாத பாடல்களாக 3 பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

சங்கப் புலவர்கள் தொகை 473. அவர்களில் அகம் பற்றிப் பாடியவர்கள் 378. இவர்களுள் 63 பேர் பரத்தமை பற்றிப் பாடியுள்ளமை தெளியப்படுகிறது. பரத்தமை பற்றிய செய்திகள் பாடல்களிலே கூற்று நிலையிலே அமைக்கப்பட்டுள்ளன. தலைவி, தோழி, தலைவன், விறலி, சான்றோர், காவலர், கூன்குறள், பரத்தையர், தோழி என்ற பல்வகைப்பட்டோர் கூற்றுக்களாகச் சங்கப்புலவர்கள் பாடல்களை அமைத்துள்ளனர். இக்கூற்று நிலையான பாடல்களில் தலைவி, தோழி என்னுமிருவர் கூற்று நிலையான பாடல்களே அதிகமாகவுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| 1. | தலைவி | கூற்றுநிலைப்பாடல்கள் | 100 |
| 2. | தோழி | கூற்றுநிலைப்பாடல்கள் | 94 |
| 3. | தலைவன் | கூற்றுநிலைப்பாடல்கள் | 17 |
| 4. | பரத்தை | கூற்றுநிலைப்பாடல்கள் | 22 |
| 5. | காதற்பரத்தை | கூற்றுநிலைப்பாடல்கள் | 15 |
| 6. | இற்பரத்தை | கூற்றுநிலைப்பாடல்கள் | 2 |
| 7. | நயப்புப்பரத்தை | கூற்றுநிலைப்பாடல்கள் | 1 |
| 8. | விறலி | கூற்றுநிலைப்பாடல்கள் | 1 |
| 9. | சான்றோர் | கூற்றுநிலைப்பாடல்கள் | 2 |
| 10. | காவலர் | கூற்றுநிலைப்பாடல்கள் | 1 |

11. கூன்குறள் கூற்றுநிலைப்பாடல்கள் 1

12. பரத்தை தோழி கூற்றுநிலைப்பாடல்கள் 1

--------

257

---------

கூற்று நிலையான பாடல்களிலே தொடர்புடையோரின் அக உணர்வுகள் இயற்கைப் பொருள்களின் மூலமும் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. கருப்பொருள்களை உரிப்பொருளின் தெளிவுக்குப் புலவர்கள் நன்கு பயன்படுத்தியுள்ளனர்.

கூற்று நிலையான பாடல்களிலே உணர்வுநிலை வேறுபாடு கருப்பொருள்களாலே தெளிவுபடுத்தப்படும் போது அவற்றின் தன்மையும் வேறுபடுகின்றது. தலைவி, தலைவன், பரத்தை என்போரின் உணர்வு நிலைவேறுபாட்டைப் புலப்படுத்தும் கருப்பொருள்களைப் புலவர்கள் இயற்கை நிலையின் பொருத்தப்பாட்டுடன் பாடல்களிலே இணைத்துள்ளனர். தலைவனுடைய குணஇயல்பைக் கூறுவதற்குத் தலைவியும் தோழியும் கருப்பொருள் நிலையை நன்கு பயன்படுத்தியுள்ளனர். உள்ளுறை, உவமை நிலையிலே அவை அமைந்துள்ளன.

பரத்தமையைப் பற்றி அகப்பாடல்களில் தலைவி, தலைவன், தோழி, காதற்பரத்தை என்னும் நால்வரது கூற்றுக்களும் தனிநிலையாக அமைகிறது. அதாவது தமது உயர்வுகளைப் பற்றித் தாமே கூறுவதாக அமைய விறலி, சான்றோர், காவலர் போன்றோர் கூற்றுக்கள் அகவுணர்வு நிலையிலே வேறுபட்ட சூழலில் அமைந்த கூற்றுக்களாக விளங்குகின்றன.

உறவுநிலை வேறுபாடுகளால் பரத்தமை பற்றிய செய்திகளும் பாடல்களில் பலதரப்பட்டனவாய் அமைகின்றன. சங்கப்புலவர்கள் தலைவன் தலைவியருடைய நெருங்கிய உறவுநிலை பரத்தமை ஒழுக்கத்தால்

பங்கப்படுவதை விளக்கியுள்ளனர். திருமண உறவு, தோழமை உறவு என்ற இருநிலைகளில் தலைவிக்கும் தலைவனுக்கும் சில உறவுகள் தோன்றுகின்றன. தலைவனுக்குத் தோழியின் தொடர்பு நெருக்கமான தொடர்பாகவுள்ளது. ஆனால் தலைவிக்குப் பாங்கனிடம் அத்துணை நெருக்கமான தொடர்பு குறைவாகவே உள்ளது. பரத்தமை பற்றிக் குறிப்பிடுகின்ற பாடல்களிலே பாங்கன் கூற்றாக அமைந்த பாடலும் இடம்பெறவில்லை.

சங்கப்புலவர்கள் பரத்தமை பற்றிக் கூறவந்த செய்திகளைத் தலைமக்களுடன் தொடர்புடையவர்களின் கூற்றாகவும் தகவல்களாகவும் பாடல்களிலே அமைத்துள்ளனர். பரத்தமை ஒழுக்கம் மேற்கொண்டு தலைவியிடம் திரும்பிவரும் தலைவனைத் திட்டுபவளாகத் தோழி அமைகிறாள். தொல்காப்பிய நூற்பாவும்,

**“பிழைத்துவந் திருந்த கிழவனை நெருங்கி**

**இழைத்தாங் காக்கிக் கொடுத்தற் கண்ணும்”**[55]

என இதனைக் குறிப்பிடுகின்றது. பரத்தமை பூண்டு ஒழுகிய தலைவன் தலைவியிடம் திரும்பி வந்து பல்வேறு விளக்கங்களை மொழிவான் என்று கூறுகின்றது.

பரத்தமை பற்றிய பாடல்களைத் தொகுத்து நோக்குமிடத்துப் பரத்தை காதற்பரத்தை, இற்பரத்தை, நயப்புப்பரத்தை என நான்கு தரப்பட்டவர்களைக் காணமுடிகின்றது. இவர்கள் கூற்றாக 40 பாடல்கள் காணப்படுகின்றன. கூற்று நிலையில் இப்பாடல்களிலே பரத்தையருடைய உணர்வுகள் மட்டுமன்றி வாழுமிடம், வாழ்வியல் என்பனவும் புலவர்களால் விளக்கப்பட்டுள்ளன. இப்பாடல்களுக்குக் கூறப்பட்டுள்ள துறை விளக்கங்களை ஒரு நோக்கில் காணும்போது பரத்தையர் பற்றிய செய்திகள் மிக இன்றியமையாத செய்திகளாக அமைவதைக் காணலாம்.

நற்றிணையிலும், குறுந்தொகையிலும் முறையே 8, 2 பாடல்கள் பரத்தை பற்றிய கூற்றாக வந்துள்ளன. அகநானூற்றில் 5 பாடல்கள், ஐங்குறுநூற்றில் 7 பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

பரத்தை மகளிர் வாழுமிடங்கள் அவர்களது தன்மைக்கேற்ப வேறுபட்டிருந்தன. காதற்பரத்தையரும் காமக்கிழத்தியரும் பரத்தையரின் சற்று உயர்நிலையில் வாழ்ந்ததை அறியமுடிகிறது. பரணரும் ஔவையாரும் இற்பரத்தை பற்றிப் பாடியுள்ளனர். முறையே அகப் பாடல் 186, குறுந்தொகைப் பாடல் 364 இற்பரத்தை பற்றிய பாடல்களைக் காணமுடிகிறது. இப்பரத்தையர் இல்லிலே வாழும் இயல்புடையராய் இருந்திருத்தல் வேண்டும். இப்பரத்தையரோடு தலைவனும் இல்லில் தங்கியிருப்பது வழக்கமாயிருக்க வேண்டும். இவர்களே காமக்கிழத்தியர், காதற்பரத்தையராகவும் இருந்திருக்க வேண்டும் என்றும் கூறுகின்றது.

**“சங்க இலக்கியங்களில் இப்பரத்தையரைக் குறிக்கும் முகமாகப் பதினேழு சொற்கள் இடம் பெற்றுள்ளன. ஆயிழை மகளிர், நேரிழை மகளிர், விலைக் கணிகை, விலைநலப் பெண்டிர், குறுமகள், மாணிழை மகளிர், வாலிழை மகளிர், குறுந்தொடி மகளிர், கனங்குழையவர், எழிலுண்கண், நல்லார் துணைமலர் கொடியன்னார், எழில் நல்லார், கோதையார், கடிக் கொண்டார், ஏதிலார், கொண்டிமகளிர் என்று பல பெயர்கள் கூறப்பட்டுள்ளன. பரத்தை என்ற சொல் அகநானூற்றில் ஒரு பாடலிலும், பரிபாடல், நற்றிணை, கலித்தொகை, ஐங்குறுநூறு ஆகியவற்றில் இரண்டு பாடல்களிலும் இடம்பெற்றுள்ளது”**[56] என்பதை அறியமுடிகின்றது.

**சங்கம் மருவிய கால இலக்கியங்கள்**

சங்கம் மருவிய கால இலக்கியங்கள் எனப்படுபவை அற இலக்கியங்கள் ஆகும். இத்தகைய இலக்கியங்கள் அனைத்தும் சமண சமய கருத்துகளை வலியுறுத்தும் நோக்கில் படைக்கப் பெற்றதாகும். இவையாவும் தமிழரின் வாழ்வியல் கருத்துகளுக்கு எதிரானதாகவும் கருதப்படுகிறது. இவற்றில் முதன்மையானதாகக் கருத்தப்படுவது திருக்குறள் ஆகும்.

**திருக்குறள் காட்டும் பரத்தை**

திருக்குறள், ஒருவனுக்கு ஒருத்தி என்கின்ற கோட்பாட்டை முதன் முதலாகப் பேசுகிறது. அதற்குப் பல சான்றுகள் உள்ளன. காமத்துப்பாலின் சில குறட்பாக்கள் கூர்ந்து நோக்கும்போது, வள்ளுவத்தில் தலைவி தலைவனுடன் பிணக்கம் கொள்ளும் போது, பரத்தையைக் காரணங்காட்டிப் பிணங்குவதாக உரைப்பர். அதற்குப்,

**"பெண்ணியலார் எல்லாரும் கண்ணிற் பொதுவுண்பர்**

**நண்ணேன் பரத்தநின் மார்பு"** **(குறள்:1311)**

என்ற குறளினைச் சான்றாகச் சுட்டுவர். மேலும், பரத்தையரைப் பற்றி வள்ளுவர் காமத்துப்பாலில் குறிப்பிடுகின்றார் என்றும், இக்குறளில் வரும் 'பரத்தி' எனும் சொல்லில் நட்பு உண்டு என்றும் வாதிடுவர்.

பொருட்பாலில் 'வரைவின் மகளிர்' எனும் ஓர் அதிகாரம் வகுத்து, பொதுப் பெண்டிரான பரத்தையரை அதில் முற்றிலும் கடிந்தே பேசுகிறார். அவை,

**"பயன்தூக்கிப் பண்புஉரைக்கும் பண்பில் மகளிர்**

**நயன்தூக்கி நள்ளா விடல்"** **(குறள்:912)**

**"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்**

**ஏதில் பிணம்தழீஇ யற்று’ (குறள்:913)**

அவர் வாழ்ந்த காலத்திலும், அவருக்கு முற்பட்ட காலத்திலும், தமிழ்ச் சமுதாயத்தில், கள்ளுண்ணலும், புலால் உண்ணுதலும், வரைவின் மகளிர் நடமாட்டமும் நிறைந்து காணப்பட்டன. இத்தகைய சமுதாயச் சூழலில் வாழ்ந்த வள்ளுவர் தான், முதன் முதலில் இவற்றையெல்லாம் இடித்துரைக்க குரல் எழுப்புகிறார். சமுதாயத்திலிருந்து இத்தீங்கினை முற்றிலும் களைய வேண்டும் என்று விரும்பிய வள்ளுவர், காமத்துப்பாலில் தலைவனுக்குப் பரத்தையர் நட்பு உண்டு என்று கூறுவதாகக் கொள்வது பொருந்துவதாகாது.

தொல்காப்பியமும், சங்கப்பாக்களும் பிரிவுகளில் பரத்தையர் பிரிவு என்ற ஒன்றை உளப்படுத்திக் கூறுகின்றன. வள்ளுவர் இப்பிரிவைப் பற்றி எங்கும் சுட்டவில்லை. மேலும், இத்தகைய பெண்டிரை வள்ளுவர் பொருட்பெண்டிர், வரைவின் மகளிர் என்று ஏசுவதையும் காணமுடிகின்றது. காமத்துப்பாலில் இந்த ஓரிடத்தைத் தவிர வேறு எங்கும் இச்சொல் பயன்படுத்தவில்லை என்பதும் குறிக்கத்தக்கது. அதனால் பரத்தை என்ற சொல் வேறு ஒரு பொருண்மையை அல்லது குறிப்பைக் கொண்டிருத்தல் வேண்டும் என்றும் கருத முடிகின்றது.

**“பெண் இயலார் எல்லாரும் கண்ணிற் பொது உண்பர் என்பதற்குப் ‘பார்த்த பெண்கள் எல்லாரும் பொதுவாக ஆசை கொள்வார்கள்’ என்பது மட்டுந்தான் பொருள் ‘பெண்ணியலார்’ என்பதற்குக் ‘கற்பு’, நாண் முதலிய நற்குணங்களின் தன்மையிற் பரத்தையற்குள்ளது பெண்ணியற்கை மாத்திரமே யென்னும் கருத்தாற் ‘பெண்ணியலா’ ரென்றாள் என்று பொருள் கொள்வது சிறிதும் பொருந்தாதது. அது மட்டுமின்றிப் பெரிதும் “குற்றமானது எப்படியென்றால் ‘கண்ணிற் பொது உண்பர்’ என்று கண்ணினால் உண்பதை மட்டும்தான் சொல்லப்படுகிறது. வேசியர் வீட்டுக்குப் போகிறவன் அவர்கள் இவனுடைய மார்பைக் ‘கண்ணில்’ மட்டும் உண்ணும்படிக் காட்டப் போகிறவனல்லன். ஆதலால் ‘பெண்ணியலார்’ என்பதற்கு ‘வேசிகள்’ என்று**

**பொருள் கொண்டு காதலன் வேசிகள் வீட்டிற்குப் போய் வந்தவனாகப் பேசுவது திருக்குறளில் உள்ள தூய காமத்துக்கு மாசுண்டாக்கும். 'பரத்த' என்பது பரத்தை என்பதன் ஆண்பால். பரத்தன், பல பேருக்குத் தம்முடைய அழகைக் காட்டி ஆசை உண்டாக்குகிறவர்கள். அப்படிப்போலத் தன் கணவன், அவனைப் பார்க்கிறவர்களுக்கெல்லாம் ஆசை உண்டாகும் படி அவ்வளவு அழகாக இருப்பதாக மறைமுகமாக, காதலி மகிழ்வதை நிந்தனைப் புகழ்ச்சியாகச் சொல்லப்படுகிறது"**[57]. ஆளைப் பற்றியோ அவர்தம் அழகைப் பற்றியோ கவலைப்படாத பொருட்பெண்டிரே பார்த்து ஆசைப்படும் மார்பழகு வாய்க்கப்பெற்றவன் எனத் தலைவி தன் தலைவனின் அழகு பற்றிப் பெருமிதம் கொண்டதாகவே இதற்குப் பொருள் கருதவேண்டும். இக்கருத்தை அடியொற்றிச் சிந்திக்கும்போது, தலைவன் பிற பெண்களை விரும்பவில்லை என்பது தெளிவாகிறது. இவனுடைய அழகின் காரணமாகவே மற்றவர்கள் இவன்மீது விருப்பங்கொள்கின்றனர். எனவே வள்ளுவத் தலைவன் பரத்தனல்லன் என்பது புலனாம்.

தலைவன், தலைவியருக்கிடையே ஊடல் நிகழ வேண்டும். அதற்கு ஏதாவது ஒரு காரணம் கற்பிக்க வேண்டும். இதையெண்ணியே தலைவி பொய்யாக அவனிடம் ஊடுகிறாள். உண்மையில் அவனுக்குப் பரத்தையர்பால் ஈடுபாடோ, நட்போ கிடையாது என்பது தலைவிக்கே தெரிந்த செய்தி. வள்ளுவர் காலத்தில் 'பரத்தமை ஒழுக்கம்' இருந்திருக்கலாம். வள்ளுவர் அதனைக் காண்பிக்கிறார். அதற்காகத் தலைவனைப் பரத்தையர் நட்புள்ளவனாகக் காட்டவில்லை. வள்ளுவர் காமத்துப் பாலிலே ஒருவன் ஒருத்திக் கோட்பாட்டிற்கான வித்தினைத் தோற்றுவிக்கிறார் என்று எனலாம். இதற்குச் சான்றாகப் புலவி நுணுக்கத்தில் இடம் பெறும் ஏனைய குறள்களையும் சான்றாகச் சுட்ட முடியும் குறிப்பாகத் தலைவி, தலைவனுடைய தும்மல் குறிப்பினை அறிந்து ஊடுகின்ற போக்கினை எடுத்துரைக்கும் குறட்கருத்துக்கள் சிந்திக்கத்தக்கன.

புலவி நுணுக்கம் எனும் அதிகாரம் தலைவன், தலைவியரிடையே நிகழும் ஊடல் நிகழ்ச்சிகளை எடுத்துரைக்கின்றது. ஊடல் என்பது காதல் வாழ்க்கையில் சிறப்பு அம்சமாகும். காதல் வாழ்க்கையில் தலைவன் தலைவியரிடையே இந்த ஊடல் நிகழ்ச்சி நடைபெறவில்லை என்றால் சிறப்புப் பெறாது. இதனைத்தான் வள்ளுவர்,

**“ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம்**

**கூடி முயங்கப் பெறின்”** **(குறள்:1330)**

எனும் குறளில் எடுத்துரைக்கிறார். எனவே தலைவன் தலைவியர்க்கிடையே ஊடல் நிகழ ஏதேனும் ஒரு காரணம் வேண்டும். சங்கத் தலைவி என்றால் தலைவன் பரத்தையரோடு தொடர்பு வைத்திருப்பதைக் காரணம் காட்டி ஊடுவாள். ஆனால், வள்ளுவத் தலைவி அவ்வாறு பரத்தமையைக் காரணமாகக் கொண்டு ஊட முடியாதபடி தலைவன் நெறியாளனாக உள்ளான். ஆனால் சுவை கருதி ஊடல் அமைய வேண்டும். ஊடுதல் எனும் நிகழ்ச்சி நடைபெற்றால் தான் காதல் வாழ்க்கைச் சிறக்கும். வள்ளுவத் தலைவி பொய்யாகச் சில காரணங்களைக் கற்பித்துக் கொண்டு ஊடல் நிகழ்த்துகிறாள்.

தலைவனும் தலைவியும் அருகருகே அமர்ந்து இருக்கும்போது தலைவன் தும்முகிறான். அருகில் இருப்பவர் யாராவது ஒருவர் தும்மினால் அவர்களை வாழ்த்துவது மரபு. அம்மரபின் காரணமாக முதலில் தலைவி தலைவனை வாழ்த்துகிறாள். பின்னர், நினைவு வந்தவளாக அழத் தொடங்குகின்றாள். காரணம், தலைவனை வேறு எவரோ நினைப்பதாக எண்ணுகிறாள். ‘நான் தங்கள் அருகில் இருக்கும் போது, என்னைத் தவிர உங்களை யார் நினைக்கிறார்கள்’ என்று வினவுகிறாள். நம்முடன் நெருங்கிய தொடர்புடையவர் யாரோ ஒருவர் நம்மைப் பற்றி நினைக்கும் போது தும்மல் வரும் என்பது தமிழர் நம்பிக்கை. அந்நம்பிக்கையின் அடிப்படையிலேயே,

‘என்னைத் தவிர உனக்கு நெருங்கியவர் வேறு யார் இருக்கிறார்கள்’ என்று வினவுகிறாள். தலைவனை நினைப்பது அவன் உறவினராகவும் இருக்கலாம். அவன் தாய் தந்தையராகவும் இருக்கலாம். அவர்கள் நினைத்துக் கொண்டதாக எண்ணி தலைவி ஊடாடினால் அவ்வூடல் சிறப்புறாது. எனவேதான் நெருங்கிய வேறு யாரோ ஒரு பெண் தலைவனை நினைக்கிறாள் என்று எண்ணிக்கொண்டு ‘யாருள்ளித் தும்மினீர்’ என்கிறாள். இதற்குக் காரணமாகப் பின்வரும் கூற்றினைச் சுட்டலாம்.

**“அவனைப் ‘பரத்த’ என்று விளிப்பதும், பிற மகளிரோடு இணைத்து ஐயுறுவதும் அன்றைய சமுதாயத்தில் மகளிருக்கு இருந்த அச்சவுணர்வின் வெளிப்பாடுகள். தலைமகனின் தலையளியே ஊடல் கொள்வதற்குக் காரணமாயிற்று எனத் தலைமகள் கூறுவது குறள் காட்டும் தலைமகன் தவறற்றவன் என்பதைக் காட்டுகிறது”**[58] என்ற கருத்து எண்ணிப் பார்க்க வேண்டிய ஒன்று. இக்கருத்தைப் பின்வரும் கூற்றும் மெய்ப்பிக்கும்.

**“தொல்காப்பியமும், சங்கப்பாட்டுக்களும் காட்டிய பரத்தையர் பற்றிய இலக்கிய மரபு வள்ளுவருக்கு உடன்பாடு இல்லை. பரத்தையரால் தலைவன் பிரிவான் என்பதும், அதனாலேயே ஊடல் நிகழும் என்பதும் அவர் ஏற்றுக் கொள்ள விரும்பாத மரபுகள் ஆயின. ஆதலில், சங்க நூல்கள் போற்றிப் பாடிய கள்ளைச் சிறிதும் போற்றாமல், அடியோடு பழித்துக் கூறியது போலவே, திருவள்ளுவர் அந்தப் பரத்தமை ஒழுக்கத்தைப் பொருட்பாலில் வரைவின் மகளிர் என்ற அதிகாரத்தில் கடிந்து கூறத் தலைப்பட்டார், அக்காரணத்தால் பழைய மரபுகளை நினைவூட்டும் ‘பரத்தை’ முதலான சொற்களையும் விளக்கினார். ஆயினும் காதலரின் வாழ்வில் ஊடலுக்கு ஒரு சிறப்பிடம் உண்டு என்று உணர்ந்தவராதலின், அந்த ஊடலை விலக்குவேன் என்று துணிந்தார். ஆயினும், பரத்தையர் பிரிவு இல்லாமலே, பரத்தையர் இல்லாமலேயே, புதுவகையில் பாடுவேன் என்று முன் வந்தார். முயற்சியில் வெற்றியும் பெற்றார்”**[59].

மேற்சுட்டிய சான்றுகளை நோக்கும்போது, திருக்குறளில் சொல்லப்பட்ட தலைவனுக்குப் பரத்தையரோடு கூடி ஒழுகும் ஒழுக்கம் முற்றிலும் இல்லை என்பது புலனாகிறது. இக்காமத்துப்பாலில் தான் திருவள்ளுவர் ‘ஒருவனுக்கு ஒருத்தி’ என்ற கோட்பாட்டின் விதையை ஊன்றுகின்றார். அதுவே அறத்துப்பாலின் இல்லறவியல் பகுதியில் முளைவிட்டு வளர்ந்தது எனலாம்.

ஊடல் நிகழ்ச்சி அகவாழ்க்கையைச் சிறப்புச் செய்வது. ஆதலால் தான் குறளியத் தலைவி இல்லாத ஒன்றினை இருப்பதாக எண்ணித் தலைவனிடம் ஊடுகிறாள். இதற்கு அவள் வாழ்ந்த சமூகச் சூழலே காரணம். ஆனால் குறளியத் தலைவன் பரத்தையரோடு ஒழுகுபவன் அல்லன் என்பதற்குப் பல குறள்கள் சான்றாக நிற்கின்றன. இதன் அடிப்படையில் திருக்குறள் ‘ஒருவனுக்கு ஒருத்தி’ கோட்பாட்டை வலியுறுத்துகிறது எனலாம்.

## நாலடியார் காட்டும் பரத்தமை சமுதாயம்

நான்கு, நான்கு அடிகளை உடைய வெண்பாவால் ஆகியன நானூறு பாடல்கள். இவை அனைத்தும் அறம், பொருள், இன்பம் எனப் பிரிந்து நின்று பொருள் பயக்கின்றது. இலக்கியம் என்பது மனிதப் பண்பை, குணத்தை அடிப்படையாகக் கொண்டது. மனித உள்ளத்து உணர்வினை, வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டுவதாகும். மனிதனை மாண்புடையவனாய், மனிதனாய் வாழ நெறிப்படுத்துவது என்று கூறலாம்.

சங்ககாலப் பரத்தமை வாழ்க்கை, சங்கம் மருவிய காலத்தில் மாறிப் பிறன்மனை நயத்தல் எனும் பேரில் காலூன்றி இருந்தது. அதனால் அச்சமுதாய மக்களிடமும் ஒழுக்கக் கேடுகள் மலிந்தன. அதைக் களையும் முகமாகப் பிறன்மனை நயத்தலைப் பெரும்பாவம், கொடிய குற்றம் என்று புலவர்கள் கூறியிருப்பதன் மூலம் அறிய முடிகின்றது.

**பிறன்மனை நயத்தல் (பொதுமகளிர்)**

தொடக்க காலச் சமுதாயம் வரன்முறையற்ற உறவு முறையைக் கொண்டும், பின் குழுமண முறையைக் கொண்டும், பின் இணைமண முறையைக் கொண்டும் மாறி வளர்ந்தது. இதனின் மற்றொரு மாற்றமே ஒருதார மணமுறை எனப்பட்டது.

ஒவ்வொரு காலக்கட்டத்திலும் தன் அனுபவத்தின் வாயிலாகச் சமுதாயச் சீரமைப்பினைச் செம்மையாகச் செய்தான் மனிதன். தன்னலம் கருதிய ஒரு பொதுநலம் தான் இந்தச் செய்கை எனலாம். தனக்குப் பின்னால் தன்னுடைய பொருள் அனைத்தும் தன் வாரிசு நுகர வேண்டும் என்ற உள்ளக்கிடக்கையின் முடிவுதான் ஒருதார மணமுறையாகும்.

மனிதன் மாறிவந்தாலும் அவனுடைய முன்னைய பண்புகள் அவனை விட்டுப்போதல் இல்லை என்பதன் சான்று தான் பிறன்மனை நயத்தல் எனும் இயல்பு என எண்ணத் தோன்றுகிறது. ஒருகாலத்திய எண்ணங்கள் மறுகாலத்தில் மாறுவது இயற்கை. தன் பழக்கவழக்க மாற்றங்களினால் முன்னைய பழக்கங்களை மனிதன் மறந்தானில்லை. அதனால் தான் பிறன்மனை நயத்தல், சங்கம் மருவிய காலத்தில் அதிகம் இருத்தல் வேண்டும். வரையறையான சமுதாயத்தை உருவாக்கும் போது இத்தகைய இடர்ப்பாடுகள் தோன்றிச் சமூக அமைப்பினை மாற்றிவிடப் போகிறது என்ற பய உணர்வுதான், நாலடிப் புலவர்களைப் பிறன்மனை நயவாமை பற்றிய கருத்தினைச் சொல்ல வைத்து இருக்கிறது எனலாம்.

**“-------------------------பாம்பின் உடைத்து**

**தலைநக் கியன்ன துடைத்து”[60]**

‘பிறன்மனை நயத்தல்’ பாம்பின் தலையை நாவினால் நக்குதல் போன்றதாகும் என்ற கருத்தும்,

**“புக்க இடத்து அச்சம், போதரும் பொது அச்சம்**

**துய்க்கும் இடத்து அச்சம், தோன்றாமைக் காப்பு அச்சம்,**

**எக் காலும் அச்சம் தருமால், எவன் கொல்லோ**

**உட்கான் பிறன் இல் புகல்"[61]**

பிறன்மனை நயப்பவர்க்கு எப்போதும் அச்சமே எனும் கருத்தும் எண்ணத்தக்கவை. மாற்றாரின் அலித் தன்மை உடையவர்கள் என நாலடிப் புலவர்கள் கருதினர். அதனால்தான்

**"வலியால் பிறர் மனைமேல் சென்றாரே – இம்மை,**

**அலி ஆகி, ஆடி உண்பார்"[62]**

'பிறன்மனை நயவர் அலி ஆவார், அலியாகி ஆடி உண்பர்' என்ற கருத்துக்களை அறக்கருத்துக்களாக வைத்துள்ளனர்.

**"காணின் குடிப் பழி ஆம், கையுறின், கால் குறையும்,**

**ஆண் இன்மை செய்யுங்கால், அச்சம் ஆம் நீள்நிரயத்"[63]**

பிறன்மனை நயப்பதனால் குடிப்பழி உண்டாதல், கைகால் குறைதல், அச்சம் தருதல் போன்ற பாவச் செயல்கள் ஏற்படும் எனக் கூறுகிறது. எனவே நாலடி சமுதாய மக்களைப் பிறன்மனை நோக்குதல் கூடாது என்று பல இடங்களிலும் சொல்கிறது. சங்ககாலச் சமுதாயத்தில் இருந்த பழக்க வழக்கங்களைப் பதினெண் கீழ்க்கணக்கு காலச் சமுதாயம் மறுத்துரைக்கின்றது. பிறன்மனை நயத்தல் என்ற பழக்கத்தினால் சமுதாயச் சீர்கேடுகள் ஏற்பட்டும், சண்டைச் சச்சரவுகள் தோன்றியும் இருந்திருக்க வேண்டும். அமைதியான வாழ்க்கையை விரும்பும் நாலடிப் புலவர்கள் இவற்றை விரும்பாததால் தான் இவ்வொழுக்கத்திற்கு முதன்முதலில் எதிர்ப்புக் குரல் கொடுத்துள்ளனர்.

**பொதுமகளிர்**

பொது மகளிர் என்போர், தமது நலத்தைத் தம் உள்ளங்கலந்த ஒருவனுக்கு மட்டுமே அளித்துத் தாமும் இன்புற்று, அவனையும் இன்புறுத்துகின்ற கற்புத் தன்மை இல்லாதவர்கள். தன் நலத்தை விரும்பி அதற்கான விலையைக் கொடுக்கும் ஆடவர்க்கெல்லாம் இன்னார், இனியார் என்னுமோர் வரைமுறையின்றி இன்பந் தந்து வாழ்பவர்.

**“விளக்கு ஒளியும், வேசையர் நட்பும், இரண்டும்**

**துளக்கு அற நாடின், வேறு அல்ல - விளக்கு ஒளியும்**

**நெய் அற்றக்கண்ணே அறுமே, அவர் அன்பும்**

**கை அற்றக் கண்ணே அறும்”**[64]

என்ற பாடலில் உண்மை அன்பில்லாதவருடைய இன்பம் இனியதன்று, துன்பந்தருவதே என்று கூறுகின்றது. வேசையர் இன்பம் உண்மை இன்பம் அல்ல என்பதையும் புலப்படுத்துகிறது.

அழகும் பெருமையும் முதலிய சிறப்பு வாய்ந்த ஆடவரேனும், வேசையர் தமக்குப் பொருள் தராதவரைக் கூடமாட்டார்கள்.

**“பாம்பிற்கு ஒரு தலைகாட்டி, ஒரு தலை**

**தேம் படு தெண் கயத்து மீன் காட்டும் ஆங்கு**

**மலங்கு அன்ன செய்கை மகளிர் தோள் சேர்வர்**

**விலங்கு அன்ன வெள்ளறிவினார்”**[65]

என்ற பாடலில் வேசையர் அவரவர்க்கும் இசைவார் போலக் காட்டிப் பலரையும் இன்புறுத்தும் வஞ்சனையுடையவர். அவர் உறவு, உண்மை உறவென நாடிச் செல்பவர் மூடர்களாவர் என்று கூறுகின்றது.

**“ஊறு செய் நெஞ்சம் தம் உள் அடக்கி, ஒண்ணுதலார்**

**தேற மொழிந்த மொழி கேட்டு, தேறி,**

**எமர் என்று கொள்வாரும் கொள்பவே, யார்க்கும்**

**தமர் அல்லர் தம் உடம்பினார்"[66]**

இப்பாடலில் வேசையரின் பசப்பு மொழிகளை உண்மையென நம்புதல் கூடாது. அவர் உடல் என்றும் அவர்க்கே உரியதன்றி அதனைப் பிறருக்குக் காதலால் உரியதாக்கும் இயல்பு அவரிடம் என்றும் கிடையாது என்று கூறுகின்றார். இவ்வாறு நாலடியார் பொது மகளிர் பற்றி விளக்குகின்றது.

**திரிகடுகம்**

**"வழங்காத் துறைஇழிந்து நீர்ப்போக்கும், ஒப்ப**

**விழைவுஇலாப் பெண்டிர் தோள்சேர்வும், உழந்து**

**விருந்தினனாய் வேற்றூர் புகலும் இம்மூன்றும்**

**அருந்துயரம் காட்டும் நெறி"[67]**

என்னும் பாடலில், யாவரும் இறங்கி ஆடிடும் வழக்கம் அற்ற துறையில் இறங்கிப் பெருநீரில் போவதும், தனக்கு ஒப்பாக விருப்பம் இல்லாத பொதுமகளிர் தோள்களைச் சேர்வதும், வருந்தி விருந்தினனாய் அயலூரில் சென்று புகுவதும் ஆகிய இந்த மூன்றும் ஒருவனுக்கு அரிய துன்பத்தைக் காட்டும் வழிகள் என்பதைப் புலப்படுத்துகின்றது. மேலும்,

**"காண்தகு மென் தோள் கணிகை வாய் இன்சொல்லும்**

**தூண்டிலினுள் பொதிந்த தேரையும் - மாண்டசீர்**

**காழ்த்த பகைவர் வணக்கமும் இம்மூன்றும்**

**ஆழ்ச்சிப் படுக்கும் அளறு"[68]**

என்று காணுதற்கு மிக்க அழகுடைய மென்மையான தோள்களை உடைய பொது மகளிரின் வாயில் பிறக்கும் இனிய சொல்லும், தூண்டிலில் வைக்கப்பட்ட தவளையும், வயிரம் பொருந்திய பகைவரின் சிறந்த

சிறப்பையுடைய வணக்கமும் என்ற இம்மூன்றும் உயிர்களைத் தன்னுள் அழுந்தப் பண்ணுகின்ற நரகத்தைப் போன்றவை என்பதை அறிவுறுத்துகிறது. மேலும்,

**“செருக்கினால் வாழும் சிறியவனும் பைத்து அகன்ற**
**அல்குல் விலை பகரும் ஆய்தொடியும், நல்லவர்க்கு**
**வைத்த அறப்புறம் கொண்டானும் - இம் மூவர்**
**கைத்து உண்ணார், கற்றறிந்தார்”[69]**

என்னும் பாடலில் சான்றோரை மதிக்காது செருக்குடன் வாழ்கின்ற சிறியவனும், பரத்தைப் போன்ற அல்குலை விலை கூறி விற்கும் வளையலை அணிந்த கணிகையும், துறவியர்க்கு அமைந்த அறச்சாலையை அழித்தவனும் என்ற இம்மூன்று பேர்களின் கைப்பொருளைக் கற்றறிந்தார் உண்ண மாட்டார்கள் என்பதை புலப்படுத்துமாறு அமைந்துள்ளது.

## பொருட் பெண்டிர் தோய்தல்

**“புலைமயக்கம் வேண்டிப் பொருட்பெண்டிர்த் தோய்தல்,**
**கலம் மயக்கம் கள் உண்டு வாழ்தல், சொலை முனிந்து**
**பொய்ம் மயக்கம் சூதின்கண் தங்குதல் - இம்மூன்றும்**
**நன்மை இலாளர் தொழில்”[70]**

என்னும் பாடலில், இழிந்த தன்மையுடன் கலத்தலாவது பொருளை விரும்பும் பொது மகளிரை விரும்பிச் சேர்தல், மற்றவரின் எச்சில் கலத்துடன் கலத்தலாவது கள்ளைக் குடித்து வாழ்தல், சான்றோர் கூறும் சொல்லை வெறுத்துப் பொய்யுடன் கலத்தலாவது சூதாட்டத்தில் தங்குதல் (ஆடுதல்) இம்மூன்றும் அறம் இல்லாதவரின் செயல்கள் என்பதை அறியமுடிகின்றது.

**பரந்தொழுகும் பெண்பாலார்**

> **“இரந்துகொண்டு ஒண் பொருள் செய்வல்! என்பானும்**
> **பரந்து ஒழுகும் பெண்பாலைப் பாசம் என்பானும்**
> **விரி கடலூடு செல்வானும் - இம் மூவர்**
> **அரிய துணிந்து ஒழுகுவார்”**[71]

என்னும் பாடலில் பொருள் இல்லாமையால் மற்றவரிடம் கெஞ்சிப் பெற்றுச் சிறந்த பொருளை ஈட்டுவேன் என்று கூறி இரப்பவனும், பலரிடம் போய்க் கூடி ஒழுகும் பெண்ணை - பொதுமகளை - அன்புடையாள் என எண்ணும் காமுகனும், கடலின் இடையே தக்க கருவியின்றிப் பொருள் ஈட்டச் செல்பவனும் ஆகிய இந்த மூவரும் செய்வதற்கரிய பொருள்களைப் பின்வாங்கல் இல்லாது மேற்கொண்டு வாழ்வார் போன்று தாழ்பவராவார்கள் என்பதை உணரமுடிகிறது. மேலும்,

> **“மாரி நாள் வந்த விருந்தும், மனம் பிறிதாக்**
> **காரியத்தில் குன்றாக் கணிகையும், வீரியத்து**
> **மாற்றம் மறுத்து உரைக்கும் சேவகனும் - இம்மூவர்**
> **போற்றற்கு அரியார், புரிந்து”**[72]

என்னும் பாடலில் மழைக்காலத்தில் வந்த விருந்தினரும், தன் உள்ளம் வேறொன்றில் சென்றவிடத்தும் பொருள் வருவாயை மேற்கொள்வதில் குறையாத பொதுமகளும், போரில் காட்டப் புகுந்த வெற்றித் திறலில் தலைவன் பகைவர் மீது கூறிய சொல்லை மறுத்துச் சொல்கின்ற வீரனும் என்ற இம்மூவரும் விரும்பிக் காப்பதற்கு அரியவர் என்பதைப் புலப்படுத்துகின்றது. மேலும் மற்றொரு பாடலில்,

> **“தோள் வழங்கி வாழும் துறைபோல் கணிகையும்**
> **நாள் கழகம் பார்க்கும் நயம் இலாச் சூதனும்**
> **வாசிகொண்டு ஒண்பொருள் செய்வானும் - இம்மூவர்**

**ஆசைக் கடலுள் ஆழ்வார்”**[73]

என்னும் பாடலில் பலர்க்கும் பொதுவாய்த் தன்னிடம் உள்ள நீரைத் தரும் துறையினைப் போல் தன் தோள்களைத் தந்து வாழ்கின்ற பொது மகளும், நாள்தோறும் சூதாட்டத்தைத் தேடி அலையும் நீதியில்லாத சூதாடியும், மிக்க வட்டி வாங்கிக் கொண்டு சிறந்த பொருளை ஈட்டுபவனும் என்னும் இம்மூவரும் ஆசை என்ற கடலில் மூழ்குபவர் ஆவர்.

**ஆசாரக்கோவை**

**“மின்ஒளியும் வீழ்மீனும், வேசையர்கள் கோலமும்**

**தம்ஒளி வேண்டுவார் நோக்கார், பகற்கிழவோன்**

**முன்ஒளியும், பின்ஒளியும் அற்று”**[74]

என்னும் பாடலில் தம் புகழ் கெடாமல் இருக்க விரும்புபவர் மின் ஒளியையும் எரி நட்சத்திரத்தையும் விலைமகளிர் கோலத்தையும் பார்க்கமாட்டார்கள். பகல் பொழுதுக்கு உரிய ஞாயிற்றின் காலை ஒளியும் மாலை ஒளியும் அப்படியே பார்க்கத் தகாதவை என்பது புலப்படுகின்றது.

**அறிவுடையார் விரும்பாத இடங்கள்**

**“கறுத்த பகைமுனையும், கள்ளாட்டுக் கண்ணும்**

**நிறுத்த மனம் இல்லார் சேரி யகத்தும்**

**குணம்நோக்கிக் கொண்டவர் கோள்விட் டுழியும்**

**நிகர்இல் அறிவினார் வேண்டார் - பலர்தொகு**

**நீர்க்கரையும், நீடு நிலை”**[75]

இப்பாடலில் ஒப்பில்லாத அறிவுடையவர் சினத்துடன் பகைக்கும் போர்க்களத்திலும், கள் உண்டு ஆடும் இடத்திலும், ஒருவரிடம் நிலை நிறுத்திய மனம் இல்லாத வேசையரின் தெருவிலும், குணங்களை ஆராய்ந்து நட்புக் கொண்டவர் கொள்கையை நீக்கின இடத்தும், பலர் ஒன்று கூடும்

நீர்த்துறையிலும் நெடுநேரம் நிற்பதை விரும்ப மாட்டார்கள் என்பதை வலியுறுத்துகிறது.

**விலைமகளிர் இருக்குமிடத்துக்கு அண்மையில் வாழலாகாது**

**“வண்ண மகளிர் இடத்தொடு தம்இடம்**

**ஒள்ளியம் என்பார், இடம்கொள்ளார், தெள்ளி,**

**மிகக்கிழமை உண்டு எனினும், வேண்டாவே - பெண்டிர்க்கு**

**உவப்பன வேறாய் விடும்”[76]**

என்னும் பாடலில், அறிவுடையவர் எனக் கூறப்படுபவர் கோலம் செய்யும் மகளிர் (விலைமகளிரின்) இடத்தோடு சேர்ந்த தம் இடத்தைச் சிறந்த இடமாய்க் கொள்ளார். தெளிந்து மிக்க உரிமை உள்ளதாயினும் தம் மனைவியர்க்கு விருப்பத்தைத் தருவன வேறு பலவாக ஆகிவிடும். அவை விரும்பத் தக்கவை ஆகாது.

**சிறுபஞ்சமூலம்**

**“பூவாதாள், பூப்புப் புறக்கொடுத்தாள், இலிங்கி,**

**ஓவாதாள் கோலம் ஒருபொழுதும் காவாதாள்,**

**யார்யார் பிறர்மனையாள் உள்ளிட்டு இவ் ஐவரையும்**

**சாரார், பகைபோல் சலித்து”[77]**

இப்பாடலில் அறிவுடையார் பருவம் வரப் பெறாத கன்னிப் பெண்ணும், மாதவிடாய் நீங்கியவளும், தவமுடையவளும், ஒரு காலத்தும் கோலம் கொள்வதில் நீங்காதவளும், கற்பைக் காவாத பொதுமகளிரும், பிறர்க்கு உரியவளான மனைவியும் உள்ளிட்ட இந்த ஐவரையும் பகைவரைப் போல் வெறுத்துச் சேர மாட்டார். மேலும்,

**“வரைவு இல்லாப் பெண்வையார் மண்ணைப்புற்று ஏறார்**

**புரைவுஇல்லார் நள்ளார்போர் வேந்தன் வரைபோல்**

**கடுங்களிறு விட்டுழி, செல்லார், வழங்கார்**

**கொடும்புலி கொட்கும் வழி”[78]**

அறிவுடையார் திருமணம் இல்லாத விலைமகளிரை மனைவியராக வீட்டில் வைத்துக் கொள்ளமாட்டார். நிலை பெற்று மழுங்கும் பாம்புப் புற்றின் மீது ஏறமாட்டார். தமக்கு உறவு இல்லாதவருடன் நட்புக் கொள்ளமாட்டார். போர்த் தொழிலில் வல்ல மன்னரின், வடிவில் மலை போன்ற கடுமையான குணம் கொண்ட யானையை விட்ட இடத்தில் செல்லமாட்டார். கொடிய புலி திரிந்து உழல்கின்ற காட்டில் செல்ல மாட்டார். மேலும்,

**“நாண்இலன் நாய்நன்கு நள்ளாதான் நாய், பெரியார்ப்**

**பேண்இலன் நாய்பிறர் சேவகன் நாய்ஏண் இல்**

**பொருந்திய பூண்முலையார் சேரிகைத்து இல்லான்,**

**பருத்தி பகர்வுழி நாய்”[79]**

நாணம் இல்லாதவன் நாயைப் போன்றவன். நன்கு பிறருடன் நட்புக் கொள்ளாதவன் நாய் போன்றவன். தந்தை தாய் முதலிய பெரியவரைப் பாதுகாவாதவன் நாய் போன்றவன். பிறர் பணியாளனாய் உள்ளவன் நாய் போன்றவன். பெருமை இல்லாத நகையை அணிந்த கொங்கைகளையுடைய பரத்தையரின் தெருவில் அப்பரத்தையர் மீது கொண்ட ஆசையால் திரியும் கைப்பொருள் இல்லாதவன் பருத்தி விலை கூறுமிடத்துப் போய் நிற்கும் நாய் போன்றவன் என்று விளக்கப்பட்டுள்ளது.

பொதுமகள் என்னும் பரத்தைத் தொழில் புரிபவர்களுக்கு மனைவி என்னும் உரிமையும் தங்கள் இல்லத்திற்குள் வர அனுமதியும் மறுக்கப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

பிற்கால நீதி இலக்கியங்களும் பெண்ணைப் பாலியல் பொருளாகவே சித்திரித்து உள்ளதைக் காண முடிகிறது.

‘மைவிழியார் மனையகல்’ என்று ஆத்திச்சூடியிலும் ‘மைவிழியார் தன் மனையகன்று ஒழுகு’ என்று கொன்றை வேந்தனிலும் ஔவையார் திரும்பத் திரும்ப ஒரே கருத்தைக் கூறி உள்ளார். மேலும், சமூகம் விலைமகள் என்று ஒரு பிரிவினரைப் பிரித்து வைத்து விட்டு, அவர்கள் கொடூரமானவர்கள் என்று கூறுவதும் ஆணாதிக்கச் செயல்பாடே ஆகும்.

விலைமகளை இழித்துக் கூறும் நீதி இலக்கியங்கள் அவர்களுக்காக அறத்தையும் வகுத்துத் தந்துள்ளன. ஆண்களைக் கவரும் வகையில் தன்னை அழகுபடுத்திக் கொள்வதே விலைமகளுக்கு உரிய நிலையாக வெற்றிவேற்கை கூறியுள்ளது.

**ஏலாதி**

**“பாடுஅகம் சாராமை, பாத்திலார் தாம்விழையும்**
**நாடகம் சாராமை, நாடுங்கால், நாடகம்**
**சேர்ந்தால் பகைபழி, தீச்சொல்லே, சாக்காடே**
**தீர்ந்தாற்போல் தீரா வரும்”[80]**

என்னும் பாடலில், ஒருவர் வகையில் உரிமையில்லாத பொதுமகளிர், பாடுகின்ற இடத்தில் அணுகாதொழிக, அவர்கள் விரும்பியாடுகின்ற நாடகத்தைச் சேராதொழிக, ஆராயுங்கால், (பாடகம்) அப்பாடுமிடத்தையும் நாடகத்தையும் அணுகினால் பகையும் பழியும் கடுஞ்சொல்லும் சாவும் இல்லாதன போலிருந்து ஒழியாமல் வரும்.

குலமகள், பொதுமகள் ஆகிய இருவகையினரையும் பெண் என்ற நிலையில் பாலியல் பொருளாக மட்டும் பார்க்கும் நிலை உருவாகி உள்ளதை அறிய முடிகிறது.

## திணைமாலை நூற்றைம்பது

திணைமாலை நூற்றைம்பதில் மருதத்திணைப் பாடல்கள் பெரும்பான்மையும் பரத்தையிற் பிரிவு பற்றிய பாடல்களாகவே உள்ளன. பரத்தையிற் பிரிவில் கூற்று நிகழ்த்துவோராகத் தலைவன், தலைவி, விறலி, காமக்கிழத்தி, அறிவர் ஆகியோர் காணப்படுகின்றனர்.

## காப்பியங்கள்

பெருந்தொடர்நிலைச் செய்யுளைப் பெருங்காப்பியம் என்றும் சிறுகாப்பியம் என்றும் பகுப்பர். தண்டியலங்காரத்தில் இதற்கான இலக்கணம் கூறப்பட்டுள்ளது. பெருங்காப்பியம் என்பது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருளும் உணர்த்துவது ஆகும். காப்பியம் என்பதனைச் சிறுகாப்பியம் என்றும் கூறுவர். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருளில் ஒன்றோ பலவோ குறைந்து வருவது சிறுகாப்பியம் ஆகும். தமிழ்மொழியில் சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி முதலியன பெருங்காப்பியமாகும். சூளாமணி, நீலகேசி, யசோதர காவியம், உதயண குமார காவியம், நாக குமார காவியம் முதலியன சிறுகாப்பியமாகும்.

## இரட்டைக் காப்பியங்கள்

இலக்கியங்களில் காதற்பரத்தையர் என்று கூறுபவர்களை இரட்டைக் காப்பியங்கள் கணிகையர் என்று அழைக்கின்றது. சிலப்பதிகாரமும், மணிமேகலையும் கணிகையர் குறித்து ஒரு வரைவுச் சித்திரத்தை வழங்குவதுடன், அவர்களின் வெவ்வேறு பிரிவுகள், அவர்களுடைய திறன்கள் மற்றும் அவர்களுக்கிருந்த சமூக மதிப்பு ஆகியவற்றைப் பற்றியும் தெரிவிக்கின்றது.

**“காப்பியங்களில் நடன மகளிர், ஆடற்கூத்தியர், அரங்கக்கூத்தி, அரங்கியன்மகளிர், கடைகழி மகளிர், கணிகை கூத்தியர், தோரிய மடந்தையர், நாடக மடந்தையர், பூவிலை மடந்தையர், வம்பப் பரத்தை, கூத்தியன் மடந்தையர், கொண்டி மகளிர், பொதுவர், பொருள் விளையாட்டி, தாசி, கலையுணர் மகளிர், அரிவையர், ஆடன் மகளிர், போக மகளிர், கலையீன்ற சொல்லால் ஆடன் மங்கையர், பரத்தை, நாரியர், நாடக மகளிர், இன்னிசை மகளிர் என்று பல பெயர்களால் குறிப்பிடப் படுகின்றனர். மேற்குறிப்பிட்டதில் கணிகை என்ற சொல் சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் நீலகேசியிலும் ஏனைய காப்பியங்களை விட அதிகமாகக் கையாளப்பட்டுள்ளது”**[81] என்று கூறுகின்றார்.

அவர்களுள் நான்கு வகையினர் குறித்து சிலப்பதிகாரம் விளக்குகிறது. அவர்கள் 1. நாடகக் கணிகை (நடிகையர்) 2. காவற் கணிகை (போர்க்களத்தின் நடன மங்கை) 3. ஆடற் கூத்தியர் (ஆடலில் நிபுணத்துவம் பெற்றோர்) 4. இவரிசிலடியார் (ஆலய மடப்பள்ளி சமையற்காரிகள்).

பூம்புகாரின் திறன்மிக்க நடனக்கலைஞரான மாதவி, நாடகக் கணிகையர் பிரிவைச் சார்ந்தவள்.

### ஆயிரங் கணிகையர்கள்

புகாரிலும் மதுரையிலும் கணிகையர் பலர் இருந்துள்ளனர். கோவலனும் மாதவியும் மணிமேகலை பிறந்த போது அவளுக்குப் பெயர் சூட்டு விழாக் கொண்டாடினர். அப்போது,

> **“அணிமே கலையார் ஆயிரங் கணிகையர்**
> **மணிமே கலையென வாழ்த்திய ஞான்று”**[82]

மேகலை அணிந்த ஆயிரங் கணிகையர் கூடி நின்று குழந்தைக்கு ‘மணிமேகலை’ எனப் பெயரிட்டு வாழ்த்தினர் என்பது புலப்படுகிறது.

**கணிகையர் வீதிகள்**

பட்டினப்பாக்கத்து பரத்தையர் வீதிகளிலே இருக்கும் பெண்களை,

> **"காவற் கணிகையர் ஆடற் கூத்தியர்**
>
> **பூவிலை மடந்தையர்......................"**[83]

காவற் கணிகையர், ஆடர் கூத்தியர், பூவிலை மடந்தையர் என்று பரத்தையரைச் சிலப்பதிகாரப் பாடலடிகள் குறிப்பிடுகிறது.

மேலும் தலைக்கோலரிவையும் தோரிய மடந்தையும், கூத்தியரும், ஆயிரத்தெட்டு கழஞ்சு பொன் பெற்றோரும் என எண்ணெண் கலையோர் இருபெரு வீதியில் இருந்ததாக,

> **"மலைப்பருஞ் சிறப்பின் தலைக்கோல் அரிவையும்**
>
> **எண்ணெண் கலையோர் இருபெரு வீதியும்"**[84]

என்று ஊர்காண் காதை அறிவிக்கிறது.

**கலைகளில் சிறப்புப் பெற்ற கணிகையர்கள்**

கணிகைக் குலத்தில் பிறந்தவள் மாதவி. இவளை **"மாதவி மரபின் மாதவி"**[85] என்று குறிப்பிடலாம். இவள் நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்து **"ஆடலும், பாடலும், அழகும் என்றி"**[86] ஆடலும், பாடலும், அழகும் எனக் கூறப்பட்ட இம்மூன்றிலும் குறைபடாமல் ஐந்தாம் ஆண்டு தொடங்கித் தொடர்ந்து ஏழு ஆண்டுகள் நன்கு பயிற்றுவிக்கப்பட்டாள். பன்னிரண்டாம் ஆண்டு அரங்கம் ஏறித் தன் ஆற்றலைக் காட்டுகின்றாள்.

மாதவி என்பவள் இசை மற்றும் நடனம் ஆகியவற்றில் இணையற்றவளாகத் திகழ்ந்தாள். மாதவியின் அழகில் மயங்கிய கோவலன் மாதவியுடனேயே இருந்து விடுகிறான். இருவரும் மகிழ்ச்சியாக இருக்கின்றனர். இடையிலே மாதவியின் கானல்வரிப் பாடலால் கோவலன்

ஊடலுற்று மாதவியைப் பிரிந்து கண்ணகியுடன் இணைகின்றான். அவளிடம் மாதவியுடன் வாழ்ந்த காலத்தில் தனக்கு ஏற்பட்ட துன்பத்தை வாய்விட்டு உரைக்கின்றான்.

**"சலம்புணர் கொள்கை சலதியோ டாடிக்**

**குலந்தரு வான் பொருள் குன்றம் தொலைத்த**

**இலம்பாடு நாணுத் தரும்"[87]**

எல்லாச் செயலிடத்தும் வஞ்சம் பொருந்திய கொள்கையுடைய மாயத்தாளோடு கூடி ஆடிய தீய ஒழுக்கத்தால் நம் குலத்தவர் தேடித் தந்த மலை போன்ற செல்வக் குவியல்கள் எல்லாம் தொலைந்து ஒழிந்தன. பரத்தமை ஒழுக்கத்தால் உண்டான வறுமை எனக்கு நாணத்தைத் தருகிறது என்று கூறுகிறான் கோவலன்.

சிலம்பின் தொடர்ச்சியாக மணிமேகலை விளங்குகின்றது. இதில் சித்திராபதி மணிமேகலையின் பாட்டி, மாதவியின் தாய். அவள் பரத்தை வாழ்க்கை நடத்தியவள். பலரை இன்புறுத்துவதே நம் கடமை என்று கொள்பவள். கோவலன் இறந்தபின் மாதவி இந்திரவிழா நாளில் நடனம் ஆடாததைச் சித்திராபதி விரும்பவில்லை. மேலும் தன் பேத்தி, குமரிப் பருவத்திலுள்ள மணிமேகலையும் ஆடல், பாடல்களில் ஈடுபடாமல் ஒதுங்கியிருப்பது சரியல்ல என்று கருதினாள். மணிமேகலையையும் மாதவியையும் வயந்தமாலையை அனுப்பி கூப்பிட்டு வரச் சொல்லுகின்றாள். வயந்தமாலை ஏமாற்றத்துடன் திரும்பினாள். சித்திராபதியோ தன் குலவொழுக்கம் போயிற்று என்று துடிக்கின்றாள். இதனை,

**"பத்தினிப் பெண்டிர் அல்லேம் பலர்தம்**

**கைத்தூண் வாழ்க்கை கடவியமன்றே"[88]**

என்னும் பாடலடிகள் வாயிலாக அறியலாம். யாழினம் போலும் இயல்பினம், பூத்துறக்கும் வண்டு போலும் என்று வர்ணிக்கிறாள். உதயகுமரன் போன்ற அரசிளங் குமரன் விரும்பினால் அது தங்களுக்கு பெருமை எனக் கருதுகிறாள்.

**சித்திராபதி பரத்தையர் கடமையைக் கூறுகிறாள்**

**"நாடவர் காண நல்லரங்கு ஏறி**
**ஆடலும் பாடலும் அழகும் காட்டிச்**
**சுரும்பு நாண் கருப்புவில் அருப்புக் கணை தூவச்**
**செருக்கயல் நெடுங்கண் சிறுக்குவலைப் படுத்துக்**
**கண்டோர் நெஞ்சங் கொண்டகம் புக்குப்**
**பண்டேர் மொழியாற் பயன்பல வாங்கி**
**வண்டிற் றுறக்கும் கொண்டி மகளிரை"[89]**

சித்திராபதியும் மாதவியும் ராஜமாதேவியிடமிருந்து மணிமேகலையை அழைத்து வந்தனர். ராஜமாதேவி சித்திராபதியை இகழ்கின்றாள். பரத்தைத் தொழில் கேவலம் என்று கூறுகின்றாள்.

**'மணிமேகலையின் வாயிலாகவும், கணிகையர் பற்றிச் சாத்தனார் கூறுகிறார். மணிமேகலை சுதமதியிடம் கணிகையருக்குக் கற்பு வேண்டியதில்லை, தவ உணர்ச்சி வேண்டியதில்லை, மரபுக்கு ஏற்றவாறு பாதுகாவல் அவர்களுக்கில்லை. பொருள் கொடுப்பாருக்குத் தன்னை விற்பவள் விலைமகள்'[90]** என்கிறார். மணிமேகலையின் இக்கூற்றிலிருந்து, கணிகையர் சமுதாயத்தில் பாதுகாவல் அற்றவர்களாக வாழ்க்கை நடத்தினர் என்பதை உணர முடிகின்றது.

ஆதிரையின் கதையிலும் பரத்தையரை நம்பினோர் பல துன்பங்களுக்கு ஆளாகின்றனர் என்ற உண்மை கூறப்படுகின்றது.

**வளையாபதி**

கணிகையர் பொருளுக்காகவே ஆடவரை விரும்புகின்றனர் என்பதனை, வளையாபதியின் பாடல்களும் விளக்குகின்றன.

**“ஆய்குரங் கஞ்சிறை வண்டினம் போல்க வென்று**

**பாயிர மின்றிப் பயிற்றி மொழிந்தனள்**

**மேவரும் வான்பொருள் தந்துநின் றோள்நம்பி**

**யாவ ரடைந்தவர்க் கவையும் புரைப”**[91]

என்ற பாடல், வயது முதிர்ந்த கணிகை, இளைய கணிகைக்கு உன்னிடம் வருபவர் பலர் இருந்தாலும், அவர்களில் பொருள் அதிகமாகத் தருபவரை நீ ஏற்றுக் கொள்க என்று அறிவுரை கூறுவதாக அமைகின்றது. மேலும் ‘கணிகையரை விலங்குகளுக்கு ஒப்பாக’ விளக்குகின்றனர்.

**“வீபொருளானை யகன்று பிறனுமோர்**

**மாபொரு ளான் பக்க மாண நயத்தலின்**

**மேய்புலம் புல்லற மற்றோர் புலம்புகு**

**மாவும் புரைப மலரன்ன கண்ணார்”**[92]

என்ற பாடலின் வழி, புல் அற்ற நிலத்தை விடுத்து வேறோர் இடத்தை விலங்கு தேடிச் செல்வது போல, கணிகையர் பொருள் நிறைந்த இடத்தினைத் தேடிச் செல்வர் என்பதனை விளக்குவது புலப்படுகின்றது.

நீலகேசியிலும் கணிகையர் பொருளைக் கவரும் பெண்ணாகக் காட்டப்படுவது தெரிய வருகின்றது.

**“ஊன்றின்ற விலிழுக்கென்னா**

**னுயிரினையு முளதென்னா**

**னோன்றலையு நோன்பென்னா**

**னோக்குடைய கணிகையரே**

**போன்றிருந்து பொதியறுக்கும்**

**புத்தன்றன் புன்னெரியை**

**யான் சென்றஃ தடிப்படுப்ப**

**னறக்கரும மிதுவென்றாள்”**[93]

என்ற பாடலில், பௌத்த சமயத்தைப் பொய்யென்று கூற, பிறர் பொருளைக் கவரும் கணிகை மகளிர் போன்று, **“பொய்யான பௌத்த சமயத்தை மக்களிடையே பரப்பும் புத்தன்”**[94] என்று ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது.

**சீவகசிந்தாமணி**

சிந்தாமணி என்பதற்குத் தன்னை அடைந்தார்க்கு வேண்டுவனவற்றைத் தருவதோர் தெய்வமணி என்பது பொருள். அம்மணியினைப் போல், இதனைக் கற்பாருக்கு வேண்டும் பொருள்களைத் தருவதால் இந்நூலும் சிந்தாமணி எனப் பெயர் பெற்றது.

சீவக சிந்தாமணியில் நாமகள் இலம்பகத்தில் வரும் வருணனைகள் சுவை மிக்கன. காப்பிய புலவரின் கற்பனைத் தேர், நீரும், நிலமும், நாட்டு வளமும், நகர் வளமும் பாடும் பகுதியே எனின் அது மிகையன்று. இப்பொது நிலைக்கு ஏற்பவே தேவரின் நாமகள் இலம்பகம் அமைந்தாலும், இவ்இலம்பகத்தால் தேவரைக் கற்பனைக் களஞ்சியம் என்று கூறும் அளவிற்குப் பாடல்கள் உள்ளன.

**“பட்டவர்த் தப்பலிற் பரவை யேந்தல்குல்**

**அட்டொளி யரத்தவாய்க் கணிகை யல்லது**

**மட்டுடை மணமகன் மலர்ந்த போதினாற்**

**கட்டுடைக் காவலிற் காமர் கன்னியே”**[95]

எனும் பாடலின் வரிகள், அகப்பட்டவரைக் கரையேறாமற் கோறலிற் பரத்தையை யொக்கும், அதுவொழிய மலர்ந்த பூவினால் மணஞ்செய்த குலமகளை யொக்கும், காவலாற் கன்னியை யொக்கும் என்று கூறுகின்றது.

பரத்தையர் நெஞ்சம் போலப் கவரப்பட்ட வழியாக,

**"ஏற்றரு மணிவரை யிறந்து போனபின்**

**மாற்றரு மணநெறி மகளிர் நெஞ்சமே**

**போற்பல கவர்களும் பட்ட தாயிடை**

**ஆற்றல்சால் செந்நெறி யறியக் கூறுவாம்"[96]**

என்னும் இப்பாடல்களில், ஏறுமிடம் அரிய அவ்வூரைக் கடந்துபோய் பின்பு புணர்ச்சி நெறியையுடைய பரத்தையரது நெஞ்சம் போல் வழி பல கவர்ப்புக்களும் உண்டாயிற்றாதலின், அவ்வழியிடத்துச் செல்லுதலமைந்த செந்நெறியை அறியக் கூறுவோம் என்று கூறுகின்றது.

**பரத்தையர் வீதி, பரத்தையர் பரிசம்**

**"துப்புறழ் தொண்டைச் செவ்வாய்த் தோழியர் காமத்தூதின்**

**ஒப்பவொன் றாதியாக வாயிரத் தோரெட் டீறாச்**

**செப்பித்தஞ் செம்பொ னல்கு னலம்வரை வின்றி விற்கும்**

**உப்பமை காமத் துப்பி னவரிட முரைத்து மன்றே"[97]**

வேட்கையினை விளைவிக்குந் தோழியராகிய தூதாலே செம்பொன் ஒன்றாதியாக ஆயிரத்தெண் கழஞ்சு ஈறாக வந்தவனுக்கு ஒப்ப விலை சொல்லித் தம் அல்குலை விற்கும் உவர்ப்பில்லாத காம நுகர்ச்சியையுடைய பரத்தையரிடத்தைக் கூறுவதாக அமைகிறது.

**பரத்தையரிற் கன்னியர்**

**"விலைபகர்ந்தல்குல் விற்கும் வேலினும் வெய்ய கண்ணார்**
**முலைமுகந் திளையர் மார்ப முரிவில் ரெழுதி வாழும்**
**கலையிகந் தினிய சொல்லார் கங்குலும் பகலு மெல்லாம்**
**சிலையிகந் துயர்ந்த திண்டோட் சீவகற் கரற்றி யாற்றார்"[98]**

அல்குலைவிற்றற்குக் காரணமான கண், களவு குடிகொள்ளுங்கண் இவர் பரத்தையரிற் கன்னியர். மார்பை முலையாலே முகந்து நீங்காது எழுதி வாழும் இனிய சொல்லார். போக நுகரும் பரத்தையர் சிலைக்குக் கூறுகின்ற நிலையைக் கடத்தலாலே சீவகற்குக் கண்ணார் சொல்லார் எல்லாரும் இரவும் பகலும் அரற்றி ஆற்றாயினர் என்று கூறுகின்றது.

**இற்பரத்தையரும் சேரிப்பரத்தையரும்**

**"அரும்பொனும் வெள்ளியும் மணியும் அல்லது**
**கருங்கலம் தோய்வு இலாக் காமர் பூந்துறை**
**குரும்பைமென் முலையின் மேல் குலாய குங்குமம்**
**விருந்துசெய் திடவெறி மேனி சேந்ததே"[99]**
**"பட்டவர்த் தப்பலிற் பரவை ஏந்து அல்குல்**
**அட்டுஒளி அரத்தம்வாய்க் கணிகை அல்லது**
**மட்டுமடை மணமகள் மலர்ந்த போதினால்**
**கட்டுடைக் காவலிற் காமர் கன்னியே"[100]**
**"நிரைகதிர் நித்திலங் கோத்து வைத்தபோல்**
**விரைகமழ் கமுகின்மேல் விரிந்த பாளையும்**
**குரைமதுக் குவளைகள் கிடங்கிற் பூத்தவும்**
**உரையின் ஒரோசனை உலாவி நாறுமே"[101]**

பொன்னாலும், வெள்ளியாலும், மணியாலும் ஆன குடங்கள் அல்லது வேறு மண் குடங்கள் அமிழாத, வாசமலர் பூத்துக்கிடக்கும் வாவிகளில், புகுந்து நீர்விளையாடும் செல்வ மங்கையரின் மென்முலையில் பூசிய குங்குமம் கரைந்து நீரோடு கலக்க அந்நீரின் மேற்பரப்புச் சிவந்து தோன்றும். அப்படிச் சிவந்த நீர் சேர்ந்து நிறைந்த அகழிகள் விழுந்த வரைக் கரையேற விடாமல் கொல்லுவதால் அகப்பட்டவரை விடாது பற்றிக் கொள்ளும் உருக்கி ஊற்றிய அரக்கைப்போலச் சிவந்த வாயுடைய பரத்தையரை ஒத்திருக்கும்.

விரிந்த மலர்ந்த பூக்களினால் அவ்வகழிகள் காச்சுவை நிறைக்கும் காதல் பெண்களை ஒத்திருக்கும். அதுவும் இல்லையென்றால் கோட்டையைக் காத்திருக்கும் தன்மையால், அவை காவலுக்கடங்கி வாழும் கன்னிப் பெண்களை ஒத்திருக்கும். இத்தகைய தன்மை உடைய அகழிகளில் எழிலோடு ஒளிவீசும் முத்துக்களைக் கோர்த்து வைத்ததுபோல், விரிந்த கமுகமரத்தின் பூம்பாளையின் மணமும், பூத்துக் குலுங்கும் குவளை மலர்கள் சிந்தும் தேனின் வாசமும், அதை உண்ணவரும் வண்டுகளின் ஓசையும் சேர்ந்து ஒரு யோசனை தூரம் வரை பற்றி நிற்கும்.

**பரத்தையர் சேரி**

**“துப்புறழ் தொண்டச் செவ்வாய்த் தோழியர் காமத்தூதின்**
**ஒப்பவொன் றாதியாக ஆயிரத் தோரெட்டு ஈறாச்**
**செப்பித்தம் செம்பொன் அல்குல் நலம்வரை வின்றி விற்கும்**
**உப்பமை காமத் துப்பின் அவரிடம் உரைத்தும் மன்றே”[102]**
**“குங்குமம் மெழுகிச் சார்வுந் திண்ணையுங் குயிற்றி யுள்ளாற்**
**செப்பித்தம் செம்பொன் அல்குல் நலம்வரை வின்றி விற்கும்**
**உப்பமை காமத் துப்பின் அவரிடம் உரைத்தும் மன்றே**
**குங்குமம் மெழுகிச் சார்வுந் திண்ணையம் குயிற்றி உள்ளால்”[103]**

**“தூசுசூழ் பரவை அல்குல் சுமக்கலாது என்ன வீழ்த்த**

**காசுசூழ் கோவை முத்தம் கதிர்முலை திமிர்ந்த சாந்தம்**

**வாசநற் பொடிகண் மாலை வண்டுண வீழ்ந்த முற்றம்**

**ஆசைப்பட் டரசு வைக வருங்கடி கமழு மன்றே”**[104]

என்னும் பாடல்களில் பவளத் தண்டு போன்ற தொண்டையும் சிவந்த வாயும் உடைய தோழியர்கள் சென்று சொன்ன தூதினாலே தம்மைத் தேடி வருவார்க்கு, எல்லையில்லாமல் தம் உடலை விற்று, ஒன்று ஆயிரத்தெட்டு வரைக்கும் தம் உடலுக்கு விலைக் கூறிப் பொருள் தேடல் ஒன்றே குறியாகக் கொண்டு உடல் விற்கும் காதல் சுவையறியா காமக்கிழத்தியர்கள் - கணிகையர்கள் இருக்குமிடம் பற்றிப் புலப்படுத்துகின்றன.

குங்குமத்தாலே திண்ணையையும் முன்வாயிலையும் மெழுகி, உட்புறமெல்லாம் சந்தன மணம் பரப்பி, மலர் மாலைகளைத் தொங்கவிட்டு, சுவர்ப்புறம் எல்லாம் இன்பச் சுவையூட்டும் எழிலோவியங்கள் தீட்டி, இன்ப விளையாட்டிற்கு ஏதுவாகப் பூமலர் கொய்து பெய்த, பஞ்சணைகள் விரித்து வைத்திருக்கும் கணிகையர் இல்லங்கள் விண்ணவர்களும் விரும்பும் இயல்புடையவாய் இருக்கும். மேலும் சேலை சுற்றிய அவர் சிற்றிடை சுமக்க மாட்டாது என்று இடைச் சுற்றி அணிந்த முத்துமணி, ஆரங்கள் சிதறிச் சிந்த, அழகிய முலைமேல் பூசிய சந்தனமும் வாசனைப் பொடிகளும் உதிர்ந்து போக, அவர் அணிந்திருந்த மலர் மாலைகள் மொய்க்கத் தரையில் கழன்று விழ, அவை முற்றமெல்லாம் சிதறிக் கிடக்க - அவர் வீடுகள், அரசர்கள் விரும்பி வந்து தங்கும் அளவுக்கு எழிலும் மணமும் உடையதாய் இருக்கும்.

**“அஞ்சிலம்பு ஒலியோடு அல்குல் கலையொலி அணிந்தமுன்கைப்**

**பஞ்சிமெல் விரலில் பாணி பண்ணொலி பவழச் செவ்வாய்**

**அஞ்சிநேர்ந்து உயிர்க்கும் தேன்சேர் குழலொலி முழவினோசை**

**துஞ்சல்இல் ஓசை தம்மால் துறக்கமு நிகர்க்க லாதே"[105]**

**"தேனுலாம் மதுச்செய் கோதை தேம்பகை கமழ ஊட்ட**

**வானுலாம் சுடர்கண் மூடி மாநகர் இரவு செய்யப்**

**பால்நிலாச் சொரிந்து நல்லார் அணிகலம் பகலைச்செய்ய**

**வேனிலான் விழைந்த சேரி மேலுலகு அனையா தொன்றே"[106]**

**"இட்டநூல் வழாமை ஓடி யோசனை எல்லை நீண்டு**

**மட்டுவார் மாலை வேய்ந்து சதுக்கங்கள் மலிந்த சும்மைப்**

**பட்டமும் பசும்பொற் பூணும் பரந்தொளி நிழற்றும் தீந்தேன்**

**அட்டும்தார் அணிந்த மார்பர் ஆவணம் கிளக்க லுற்றேன்"[107]**

என்னும் பாடல்களில், அழகிய பாதத்தில் அணிந்திருக்கும் சிலம்போசையும் இடையில் அணிந்திருக்கும் மேகலை எழுப்பும் இன்னொலியும், செம்பஞ்சுக் குழம்பு அணிந்த மெல்லிய விரலால் மீட்டியெழுப்பும் யாழிசையும், பவளச் செவ்வாய் வருந்தப்பாடும் பா அசையும், தேன் என இனிக்கும் தீங்குழல் ஓசையும், முழவின் ஒலியும் நீக்கமற நிறைந்திருக்கும் அப்பரத்தையர் சேரிகள், இத்தகைய ஒலிகளால் எப்போதும் நிறையப் பெற்றிருக்கும் வானுலகை ஒத்திருக்கும்.

மேலும் வண்டு மொய்க்கின்ற தேன் நிறைந்த மலர் மாலைகள் அணிந்த கோதையர்கள் தங்கள் உடலுக்கும் கூந்தலுக்கும் மணம் நிறைக்கச் சந்தனம், அகில் முதலியவற்றின் புகை ஏற்ற, அப்படி ஏற்றிய புகை நிறைந்து வானத்துச் சூரியனை மூடி மறைத்தது. அதனால் இருட்டான சேரிகளை, அச்சேரியில் வாழும் அழகிய பெண்கள் அணிந்திருக்கும் பொன் அணிமணிகள், பால் நிலவுபோல் ஒளிவீசிப் பகல்போல் விளங்கச் செய்ய, அவை வசந்த வேளாகிய காமனும் விரும்பும் இயல்புடையவாகும். இத்தகு சிறப்பு மிக்க சேரிகளைத் தாண்டி, நூல் பிடித்து விட்டதுபோல் ஒழுங்கு தவறாமல் ஒரு யோசனை தூரம் நீண்டு, தேன் நிறைந்த மலர் மாலைகள்

தோரணங்களாக விளங்க, எப்போதும் சந்தடி மிகுந்து இருக்கும் சதுக்கங்கள் நிறைந்த, தத்தம் பதவிக்கேற்பப் பெற்ற நற்சான்றும் பொற்பூணும் ஒளி சிந்தத் தேன் சிதறும் மலர்மாலை அணிந்த மார்புடைய வணிகப் பெருமக்கள் வாழும் அங்காடி வீதிகளின் அழகு புலப்படுத்தப்பட்டுள்ளது.

**கல்வெட்டுக்கள்**

தமிழகத்தில் மிகப் பழங்காலந்தொட்டே கல்லில் எழுத்துக்களைப் பொறிக்கும் வழக்கம் நிலவிவந்துள்ளது. தங்களது முக்கிய செயற்பாடுகளைப் பனையோலைகளில் எழுதி வந்த மக்கள் அவற்றின் அழிவு கருதிச் செப்புத் தகடுகளிலும் என்றும் அழியாது நிலைத்து நிற்கக் கற்களிலும் எழுத்துக்களை வடிக்கத் தொடங்கினர். இதனை, அக் காலங்களில் கோயிலுக்குச் செய்யப்பெற்ற அறச்செயல்கள், கிராமச் சபையோரின் நீதி நெறி முறைகள், நிலம் விற்பனை செய்தல், நிலம் வாங்குதல், மக்களின் வாழ்வியல் முறைமைகள், ஆட்சி வழி நிகழ்ந்த ஆணைகள், அளவைகள் முதலான செய்திகளைப் பனையோலைகளில் எழுதி வந்தனர் என்ற குறிப்பாலும், அவை காலத்தால் அழிக்கப்பட்டதால் எழுத்துக்கள் என்றும் அழியாமலும், அழிக்கப்படாமலும் இருத்தற் பொருட்டுச் செப்புத் தகடுகளில் எழுதி வைத்தனர். அச்செப்புத்தகடுகள் ஒருகால் எவராலேனும் மறைக்கப்படலாம் என்ற எண்ணத்தில் அவற்றைவிட உறுதியாகவும், நிலையாகவும் பிறரால் எளிதில் மறைக்கப்படாமலும் இருத்தற் பொருட்டுப் பொது இடங்களில் எழுத்துக்களை வெட்டினார்கள் என்று அறிந்து கொள்ள முடிகிறது.

**நடுகல் முறை**

இலக்கியங்கள் போர்க்காலத்தில் உயிர்நீத்த வீரர்களுக்கு நடுகல் நட்டு வழிபடுவதைக் குறிக்கின்றன. இதைத் தொல்காப்பியம்,

**“காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்**

**சீர்த்தகு மரபின் பெரும்படை வாழ்த்தலென்று**

**இருமூன்று மரபிற் கல்லொடு புணர"[108]**

என்னும் நூற்பா சுட்டுகிறது. அந்நடுகல்லின் மேல் இறந்த வீரர்களின் பெயரும் பெருமையும் பொறிக்கப்படும் பழக்கம் இருந்ததை,

**"ஆடவர்**

**பீடும் பெயரும் எழுதி அதர் தொறும்**

**பீலீ சுட்டிய பிறங்கு நிலை நடுகல்"[109]**

என்ற பாடல் வரிகளும்

**"அணி மயிற் பீலி சூட்டிப் பெயர் பொறித்**

**தினி நட்டனரே கல்லும்"[110]**

என்ற பாடல் வரிகளும் உணர்த்தும். இவற்றின் வழி வீரப்போர் புரிந்து விழுப்புண்பட்டு இறந்த வீரர்க்கு நடுகல் நடுவதும், அக்கல்லில் அவர்களின் இறப்பைப் பொறித்து வைப்பதும், தொன்றுதொட்டுத் தமிழர் தம் பழக்கமாக இருந்தது தெரிகிறது. இதுவே கல்வெட்டுத் தோன்றுவதற்கு மூலக் காரணமாக அமைந்தது எனலாம். தொடக்கத்தில் இந்தக் கல்வெட்டுக்கள் இறந்தவர்களின் வெற்றியை மட்டும் குறித்தன.

முதலில் பௌத்த சமணத் துறவியரின் கற்படுக்கைகளிலும் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டிருப்பதை, நம் தமிழகத்தே வாழ்ந்து வந்த பௌத்த சமணத் துறவியர் அரிய நோன்பு இருந்து உயிர் துறந்த இடங்களில் அவர்களைப் பற்றிய செய்திகளை அவர்களுடைய மாணாக்கர்களும், அரசர்களும் பொறித்து வைத்துள்ளனர். அத்தகைய சமாதிச் சாசனங்களை மலைப் பாறைகளிலும், குன்றுகளிலும், குகைளிலும் காணலாம். திருமலைநாதன் குன்றிலும், திருநெல்வேலி பகுதியில் உள்ள கழுகு

மலையிலும், மதுரைப் பகுதியில் உள்ள ஆனை மலையிலும், திருச்சிராப்பள்ளிக் குன்றிலும் அச்சாசனங்களைக் காணலாம்.

இக்கல்வெட்டுக்கள் முறையே பல்லவர் காலத்திலும், கி.பி.4ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.9ஆம் நூற்றாண்டு வரை சோழர் காலத்திலும், பாண்டியர் காலத்திலும் வளர்ச்சியுற்ற நிலையினைக் காணலாம். பல்லவர்களுக்குப் பின் 430 ஆண்டுகள் சோழர்கள் தஞ்சையிலிருந்து தமிழ் நாட்டை ஆட்சி புரிந்தனர். அவர்கள் காலத்தில் சிறப்பாக முதலாம் இராசராசன் காலத்தில் வெற்றி மேம்பாடு குறிக்கும் மெய்க்கீர்த்திச் சாசனங்கள் தோன்றலாயின. சோழர்களைப் பின்பற்றிப் பாண்டியர்களும் இத்தகு மெய்க்கீர்த்திக் கல்வெட்டுக்களை வெட்டலாயினர் என்ற கருத்தும் தெளிவுறுத்தும். இதுபோன்றே தமிழகத்திலுள்ள எல்லாக் கோயில்களிலும், இறைவனுக்குச் செய்யப்படும் பூசையும், நாள் வழிபாடும், திங்கள் விழாக்களும், ஆண்டு விழாக்களும், வழிபாடு முதலியனவும் கல்லில் செதுக்கப்பட்டன. கோயிலுக்கு வழங்கிய அணிகலன்கள், நிலக்கொடைகள் ஆகியவற்றையும் கல்லில் செதுக்கினர். அரசர்களும் அரசியல் அதிகாரிகளும், பொது மக்களும் செய்துள்ள அறச் செயல்களையும் பொறித்து வைத்தனர். முதலில் நடுகல்லில் தொடங்கிய இக்கல்வெட்டுக்கள் படிப்படியாக வளர்ந்து சமுதாயத்தில் முக்கிய தலைமையிடமாக விளங்கிய பொது இடங்களில் காட்சி அளிக்கும் தன்மையைப் பெற்றன.

**எழுத்து**

தமிழகத்தில் கிடைத்துள்ள மிகவும் தொன்மையான எழுத்து வடிவமே தாமிழி எனப்படுகிறது. தமிழ்நாட்டில் கிடைத்துள்ள எழுத்துக்களில் காலத்தால் முந்தியுள்ள எழுத்து பிராமியேயாகும். இங்குக் கிடைக்கும் பிராமி எழுத்துக்களுக்கும் வரிவடிவத்தில் சில வேற்றுமை காணப்படுகிறது. ஆகவே தமிழ்நாட்டில் கிடைக்கும் எழுத்துக்களைத் தாமிழி என்று கூறுகின்றனர்.

வடபகுதியிலிருந்து தென்பகுதி வரை பல இடங்களில் தமிழ் எழுத்துக்கள் கிடைத்துள்ளன. இவை கல்லிலும் பனை ஓலைகளிலும், காசுகளிலும் இடம்பெற்றுள்ளபடியால் ஒரு குறிப்பிட்ட சமயத்தாரால் மட்டும் வழங்கப்பட்டது என்று இல்லாமல் எல்லாப் பிரிவினராலும் வழங்கப்பட்டது என்று கூறலாம். தமிழ்நாட்டில் வழங்கிய எழுத்து ஆதலில் வடமொழியில் இதைத் தமிழி என்று குறித்தனர்.

## அமைப்பு

பொதுவாகக் கல்வெட்டுக்களாயினும், செப்பேடுக்களாயினும் ஒவ்வொன்றையும், ஐந்து பகுதிகளாகப் பிரித்துவிடலாம். அவை மங்கல வாசகம், சாசனம் தோன்றிய காலம், சாசனச் செய்திகள், கையெழுத்துக்கள், ஓம்படைக்கிளவி என்பனவாகும். இவற்றுள் சில பகுதிகள் குறைந்த சாசனங்களும் உண்டு.

## கல்வெட்டுக்காலம்

கல்வெட்டுத் தோன்றிய காலத்தினைக் குறிக்கும் பொழுது ஆட்சி புரிந்த மன்னனையும், அவனது ஆட்சி ஆண்டையும் குறிப்பது வழக்கம். சிலவற்றில் அரசனது ஆட்சியாண்டோடு கலியப்தமும், சகாப்தமும் கொல்லம் ஆண்டும் வரையப்பட்டிருக்கின்றன. விஜய நகர மன்னனான சதாசிவ தேவ மகாராயர் ஆட்சிக்காலத்தில் சகவருஷம் 1487 விசுவாவசு ஆண்டில் பப்பு திம்மய்யதேவ மகாராயர் திருநந்தானம் எண்ணுமிடத்திலுள்ள சத்திரத்துக்காகப் புத்தகரம் என்னும் கிராமத்தைச் சர்வமானியமாக அளித்த செய்தியைக் கூறுவதால் இவ்வுண்மை புலப்படுகிறது.

## கல்வெட்டுச் செய்தி

கல்வெட்டு அமையப்பெற்ற காலப்பகுதிக்குப் பின், கல்வெட்டுப் பொறிக்கப்பட்ட காரணத்தை விளக்கும் பகுதி காணப்படும். இன்ன அரசன் இந்த இடத்தில் அமர்ந்து கொண்டு இந்தந்த அறங்களைச் செய்தான் என்றும் இந்த ஊர்ச் சபையார் இந்தக் கோயிலுக்கு இத்தகைய நிலங்களைத் தானமாகக் கொடுத்தனர் என்றும், இவை போன்ற பிற செய்திகளும் இப்பகுதியில் இடம்பெறும். இதனை, வீர உதைய மார்த்தாண்டவர்மா களக்காடு எனப்படும் சோழகுல வல்லிபுரத்தில் தங்கியிருந்த பொழுது சுசீந்திரத்தைச் சேர்ந்த ஆரியன் சொக்கன் பெரிய பெருமாள் எனப்படும் மாத்தாண்டம் பிரமாதராயன் என்பவரைத் தாழைக்குடி சேந்திச் சுரமுடைய நயினார் கோயிலுக்குச் சீபண்டாரக் கணக்கராக நியமித்து அவருக்குச் சோறும் உடையும் அளித்து வருவதற்கு ஆணை பிறப்பித்ததைக் கல்வெட்டு கொண்டு அறியலாம்.

## தேவதாசிகள் / தேவரடியார்கள்

ஆண்டவனுக்குத் தொண்டு செய்வதற்காக நியமனம் செய்யப்பட்டவர்களே தேவதாசிகள் என அழைக்கப்பட்டனர். தேவதாசிகள் என்றால் தெய்வங்களின் அடிமைகள். கோயிலுள்ள தெய்வத்திற்கு மாளிகையிலுள்ள அரசனைப்போலவே வாழ்க்கை வசதிகள் தேவைப்பட்டன என்று கருதியே பண்டையோர் கோயில் பணியாளர்களாகப் பல கணிகையரை நியமித்தனர். கோயிலில் மேற்கொண்டவர்கள் தேவதாசிகள் எனப்பட்டனர். இட்டப் பணிகளைச் செய்பவன் தாஸன் எனப்பட்டான். இச்சொல்லின் பெண்பால் தாசி எனப்பட்டது. கோயிலில் பணி செய்வதால் தேவதாசி என வழங்கப்பட்டாள் என்பர். கோயில் தொண்டு செய்வதற்குத் தானம் கொடுத்ததைக் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது.

நாஞ்சில்நாட்டுத் தோவாளையான எதிர்வல்லி சோழபுரத்துத் திருமலை அமரர்பதிகாத்த நயினார் கோயிலில் தேவகன்மிகளுக்கு இன்னாயினார் அமுதுபடிச் செலவுக்கு நிலம் தானம் வழங்கியதைக் கொண்டு, இறைவன் பூசைக்குத் தானம் வழங்கும்போது அங்கு இருக்கும் தேவகன்மிகளுக்குத் தானம் வழங்கியதைக் கல்வெட்டு உணர்த்துகிறது. இவர்களைத் தளிச்சேரிப் பெண்டுகள், நாடகக் கணிகையர், தேவரடியார், தேவகன்மிகள், பதியிலார் முதலான பெயர்களால் அழைப்பர். யாரையும் மணந்து கொள்ளாதவர்கள் என்ற பொருளில் பதியிலார் என்ற பெயர் இவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளது என்பதைக் காணமுடிகிறது.

ஆகமங்கள், இப்பெண்களை நர்த்தகிகள், கணிகைகள் (ருத்ர கணிகையர்) மற்றும் தாசிகள் என அழைக்கின்றன. **“கி.மு. நான்காம் நூற்றாண்டினரான கௌடில்யர், ‘ஆலயச் சேவையில்’ ஈடுபட்டிருந்த தேவதாசிகள் குறித்து எழுதியிருக்கிறார்”[111].**

**“அசோகரின் காலத்தைச் சேர்ந்ததாக இருக்கக் கூடுமென நம்பப்படுகிற ராம்கார் குகைக் கல்வெட்டில், கடவுளின் அடிமைப் பெண்ணான ஓர் இளம்பெண் ‘சுதனூகா’ பற்றிய குறிப்பு உள்ளது”[112].**

**“முதலாம் இராஜராஜ சோழன் காலத்திய சாசனமான தளிச்சேரிப் பெண்டுகள் தொடர்பான ஆவணம், அன்றைய கலைஞர்கட்கு வழங்கப்பட்ட மதிப்பூதியத்தின் தன்மை மற்றும் தொடர் விளைவாக அவர்கள் அடைந்திருந்த சமூக மதஞ்சார் அந்தஸ்து குறித்துப் பெரும் வெளிச்சம் பாய்ச்சுவதாக அமைந்திருக்கிறது”[113].** இவ்வாறாக கல்வெட்டுக்கள் தேவதாசிகள் / தேவரடியார்கள் குறித்து பதிவு செய்துள்ளதை அறிய முடிகிறது.

## ஆனந்தரங்கப் பிள்ளை நாட்குறிப்பு தரும் செய்திகள்

சோழர் காலம் முதல் சமூகத்தில் மதிப்பு வாய்ந்த சொல்லாக விளங்கிய தேவரடியார்கள் என்ற சொல் ஆனந்தரங்கர் காலத்தில் இழிநிலைச் சொல்லாக இருந்தது.

'தேவரடியாள்' என்றே அவர்களை குறிப்பிடுகின்றார். ஆடல் பாடல்களில் அவர்கள் பெற்றிருந்த இடத்தையும் குறிப்பிடுகின்றார். கோயிலுக்கு வேண்டிக் கொண்டு தங்கள் பெண்களை அன்பளிப்பாக விட்டு விடுவர். அதன் அடையாளமாக பெண்களின் நெற்றியில் பொட்டுக்கட்டி விடுவர்.

**"பின்னாளில் இவர்கள் இழி தொழில் செய்பவர்களாக மாறினர். பணமாகவோ பொருளாகவோ கூலி பெற்றுக் கொண்டு உடலுறவில் ஈடுபடுவது பரத்தமை என வரையறை கூறலாம். அவ்வகையில் ஆனந்தரங்கர் காலத்தில் பொருளாதார நிலை காரணமாக தேவரடியார் புனித மகளிர் என்ற நிலையினின்று தாழ்ந்துள்ளார். தேவடியாள் என்று கூறப்பட்டுள்ளனர்"**[114] என்று கூறுகின்றார். இவ்வாறாக ஆனந்தரங்கப் பிள்ளை பிரெஞ்சிந்தியாவில் நிலவிய பரத்தமை வாழ்க்கையைக் கூறியுள்ளார்.

## தொகுப்புரை

வரலாற்று நோக்கில் பரத்தையர்' என்னும் இம்முதல் இயலில் பரத்தை என்ற சொல்லிற்கான விளக்கங்கள் அகராதிகள், கலைக் களஞ்சியங்கள் வழி விளக்கப்பட்டுள்ளது. இலக்கண நூல்களில் பரத்தைப் பற்றிய பதிவுகள் தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை, இறையனார் களவியல் உரை, இளம்பூரணர் உரை, நச்சினார்க்கினியர் உரை முதலானவற்றின் மூலமாகவும் விளக்கப்பட்டுள்ளது.

சங்க கால இலக்கியங்களான எட்டுத்தொகை நூல்களில் பரத்தை என்ற சொல்லிற்கானப் பதிவுகள் எவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது என்றும் பரத்தைக்கான கூற்று அடிப்படையிலான விளக்கங்களும் ஆராயப்பட்டுள்ளது. மேலும், சங்கம் மருவிய கால இலக்கியங்களான திருக்குறள், நாலடியார், நான்மணிக்கடிகை, ஏலாதி முதலான பதினெட்டு நூல்களில் இடம்பெற்றுள்ள கருத்துக்களும் கூறப்பட்டுள்ளது. பரத்தை என்பவள் மிகவும் இழிந்த தன்மையில் பேசப்பட்டுள்ளதை இதன் மூலம் அறியமுடிகின்றது.

காப்பிய கால இலக்கியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி முதலானவற்றில் பரத்தை என்ற சொல்லானது கணிகையர் என்று கையாளப்பட்டுள்ளதையும், அவர்கள் ஆடல், பாடல் கலைகளில் சிறந்தவர்களாக இருந்தாலும் சமுதாயத்தில் அவர்களுக்கு இருந்த இழிநிலையையும் இவ்வியலில் கூறப்பட்டுள்ளது.

மேலும், கல்வெட்டுகள், நாட்குறிப்புகளில் பரத்தை பற்றிய பதிவுகளையும் இவ்வியல் விளக்குகின்றது. பிற்காலத்தில் பரத்தையர்கள் மிகவும் பின்னுக்குத் தள்ளப்பட்டு இழிநிலை அடைந்திருந்தமையை இவ்வியலின் மூலமாக அறிந்து கொள்ளமுடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. மாதையன், பெ., சங்க இலக்கியத்தில் குடும்பம், பக். 125.
2. தொல், பொருள்., நூ. 59.
3. மேலது, நூ. 109.
4. மேலது, நூ. 145.
5. மேலது, நூ. 145.
6. வைத்தியநாத தேசிகர், இலக்கண விளக்கம், நூ. 481.
7. மாதையன். பெ, சங்க இலக்கியத்தில் குடும்பம், பக். 129.
8. மேலது, பக். 130.
9. விஜயலட்சுமி.ர., தமிழக மகளிர், பக். 172.
10. வைத்தியநாத தேசிகர், இலக்கண விளக்கம், நூ. 482.
11. மேலது, நூ. 483.
12. தொல், பொருள். நூ. 10. பக்.179.
13. மேலது, பக். 189.
14. தொல். பொருள். நூ. 44.
15. மேலது, நூ. 44.
16. மேலது, நூ. 109.
17. மேலது, நூ. 144.
18. மேலது, நூ. 145.
19. மேலது, நூ. 148.
20. மேலது, நூ. 148.
21. மேலது, நூ. 148.
22. மேலது, நூ. 44.
23. மேலது, நூ. 109.
24. மேலது, நூ. 145.
25. மேலது, நூ. 156.

26. மேலது, நூ. 229.

27. மேலது, நூ. 185.

28. மேலது, நூ. 149.

29. மேலது, நூ. 156.

30. வைத்தியநாத தேசிகர், இலக்கண விளக்கம், நூ. 459.

31. தொல், பொருள். நூ. 185.

32. மேலது, நூ. 191.

33. மேலது, நூ. 491.

34. மேலது, நூ. 220.

35. மேலது, நூ. 229.

36. மேலது, நூ. 231.

37. மேலது, நூ. 499.

38. நக்கீரன், இறையனார் அகப்பொருள், நூ. 43.

39. நம்பியகப் பொருள், நூ. 22.

40. நம்பியகப் பொருள், நூ. 23.

41. ஐயனாரிதனார், புறப்பொருள் வெண்பாமாலை, நூ. 85.

42. மாறனகப் பொருள், நூ. 114.

43. வைத்தியநாத தேசிகர், இலக்கண விளக்கம், நூ. 482.

44. மேலது, நூ. 428.

45. மேலது, நூ. 429.

46. மேலது, நூ. 430.

47. மேலது, நூ. 431.

48. மேலது, நூ. 432.

49. மேலது, நூ. 433.

50. மேலது, நூ. 434.

51. மேலது, நூ. 446.

52. மேலது, நூ. 462.

53. மேலது, நூ. 474.

54. மேலது, நூ. 475.

55. தொல், பொருள், நூ. 148.

56. நர்மதா, தமிழகத்தில் தேவரடியார் மரபு, பக். 18.

57. நாமக்கல் இராமலிங்கமம் பிள்ளை., திருக்குறள்-புத்துரை, பக். 804-805.

58. மோகனராசு.கு., திருக்குறள்-புத்துரை, பக். 266.

59. மேலது, பக். 279-280.

60. சுப்பிரமணியன்.ச.வே, பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், நாலடியார்.பா. 87.

61. மேலது, பா. 83.

62. மேலது, பா. 85.

63. மேலது, பா. 84.

64. மேலது, பா. 371.

65. மேலது, பா. 375.

66. மேலது, பா. 379.

67. மேலது, திரிகடுகம், பா. 5.

68. மேலது, பா. 24.

69. மேலது, பா. 25.

70. மேலது, பா. 39.

71. மேலது, பா. 73.

72. மேலது, பா. 76.

73. மேலது, பா. 81.

74. மேலது, ஆசாரக்கோவை, பா. 51.

75. மேலது, பா. 55.

76. மேலது, பா. 82.

77. மேலது, சிறுபஞ்சமூலம், பா. 40.

78. மேலது, பா. 78.

79. மேலது, பா. 93.

80. மேலது, ஏலாதி, பா. 25.

81. நர்மதா, தமிழகத்தில் தேவரடியார் மரபு, பக். 44.

82. அரும்பதவுரையும், அடியார்க்கு நல்லார் உரையும், சிலப்பதிகாரம், அடைக்கலக் காதை, பா.வரி. 38-39.

83. மேலது, இந்திர விழா, பா.வரி. 50-51.

84. மேலது, ஊர்காண் காதை, பா.வரி. 154-167.

85. மேலது, கடல். பா.வரி. 69.

86. மேலது, அரங்க. பா.வரி. 8.

87. மேலது, கனா. பா. வரி. 69-71.

88. மணிமேகலை. பா.விரி. 15-16.

89. மணிமேகலை, உதய. பா.வரி. 103-109.

90. மேலது, பா. வரி. 86-87.

91. வளையாபதி, பா. 52.

92. மேலது, பா. 60.

93. நீலகேசி, பா. 163.

94. நர்மதா, தமிழகத்தில் தேவரடியார் மரபு, பக். 48.

95. சீவகசிந்தாமணி, நாமகள் இலம்பகம், பா. 98.

96. மேலது, பதுமையார், பா. 1212.

97. மேலது, நாமகள் இலம்பகம், பா. 107.

98. மேலது, பா. 372.

99. மேலது. பா. 97.

100. மேலது, பா. 98.

101. மேலது, பா. 99.

102. மேலது, பா. 107.

103. மேலது, பா. 108.

104. மேலது, பா. 109.

105. மேலது, பா. 110.

106. மேலது, பா. 111.

107. மேலது, பா. 112.

108. தொல்காப்பியம், பொருள். நூ. 60.

109. அகநானூறு, பா. 67.

110. புறநானூறு, பா. 264.

111. அர்த்தசாஸ்திரம். பக். 23.

112. இந்திய தொல்லியல் துறை ஆண்டறிக்கை, பக். 122.

113. தென்னிந்திய சாசனங்கள், தொகுதி-1, பகுதி-3, பக். 66.

114. வாசுகி இராஜாராம், இலக்கியங்களில் பெண்கள், பக். 27-28.

# இயல் இரண்டு

## சங்ககாலப் பெண் மாந்தர்கள்

சங்க இலக்கியங்களின் வழி அறியப்படும் பல்வேறு செய்திகளில் பெண்களின் நிலை பற்றி அறியும் தன்மையும் ஒன்று. குறிப்பாக ஆணாதிக்க சமூகத்தில், பெண்கள் எவ்வாறு தங்களை நிலைநிறுத்திக் கொண்டனர் என்பதை அறிய ஏதுவாகிறது. இலக்கியங்களில் பெண்கள் பற்றி பதிவு செய்கையில் அவர்களின் உடல் சார்ந்த வருணனைகள் வெகுவாக இடம் பெறுவதை அறியமுடிகிறது. ஆனால் இங்கு தோழியின் நிலைப்பாடு வேறானதாக அமைகிறது. குறிப்பாக மதியுணர்வு மிக்கவளாக தோழி அறியப்படுகிறாள். ஒன்றும் அறியாத பெண்ணாகத் தலைவி படைக்கப்பட்டாலும், அவளை வழி நடத்தும் தன்மையில் தோழி அறிவின் முதிர்வை வெளிப்படுத்துபவளாக அறியப்படுகிறாள்.

தலைவியானவள் அச்சம், மடம், நாணம் ஆகியவற்றின் பிறப்பிடமாக அறியப்பட்டாலும், அவளின் ஆற்றாமையைப் பல்வேறு சூழ்நிலைகளில் வெளிப்படுத்துபவளாக அறியப்படுகிறாள். தலைவனின் தவறான செயலை எள்ளி நகையாடும் தன்மையையும் அறியமுடிகிறது. மேலும் இங்கு குறிப்பிடும் படியான செயலைச் செய்யக் கூடியவளாக அறியப்படுபவள் பரத்தை. பரத்தையானவள் சமுதாயத்தால் இழித்துரைக்கப்பட்டாலும் அதற்காக அவள் ஒடுங்கி நடக்கும் தன்மையை இங்கு காண இயலாது. மாறாக எதிர் கேள்வி எழுப்பும் தன்மையை இங்கு அறியலாம். தன்னை வசைபாடுவோருக்கு சரிநிகராக வசைபாடும் தன்மையையும், எவரையும் எள்ளி நகையாடுவதும், சூள் உரைப்பதும், சினத்தை வெளிப்படுத்துதலையும் வெகுவாகக் காணமுடிகிறது. அதற்காகப் பெண்தன்மை அற்றவளாக இல்லை. தலைவிக்கு நிகராக அழகு பற்றிய வருணனையில் பெரிதும் அறியப்படுகிறாள். இவ்வாறாக, பரத்தையரோடு கூற்று நிகழ்த்துபவர்

என்னும் நிலையில் தலைவனோடு நேரடியாக தொடர்புகொண்ட மாந்தர்கள் மூவர். இதில் செவிலி மற்றும் நற்றாயின் கூற்றுகள் மருத நிலப் பாடல்களில் இடம்பெறவில்லை. பரத்தையர் குறித்த சொல்லாடலில் சங்ககாலப் பெண் மாந்தர்களின் பங்களிப்பைப் பற்றி அறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

**'சங்ககாலப் பெண் மாந்தர்கள்'** என்னும் இவ்வியலானது பின்வரும் மூன்று பகுப்புகளாகப் பிரிக்கப்பட்டு ஆராயப்படுகின்றது. அவை

1. தலைவியின் பண்புநலன்கள்
2. பரத்தையின் பண்புநலன்கள்
3. தோழியின் பண்புநலன்கள்.

## தொல்காப்பியத்தில் தலைவி

### அகத்திணை மாந்தர்கள்

அகத்திணை மரபில் மாந்தர்களின் பெயர்கள் சுட்டப்படுவதில்லை. மாறாக தலைவன், தலைவி, தோழி என பொதுப்பெயர்களால் சுட்டும் மரபு காணப்படுகிறது. இதனை,

> **“மக்கள் நுதலிய அகனைந் திணையும்**
> **சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்”[1]**

என்ற தொல்காப்பிய நூற்பா இதனை விளக்குகின்றது. அகமாந்தர்களில் தலைவன், தலைவி, தோழி ஆகியோர் முதன்மை பெறுகின்றனர். நற்றாய், தலைவியின் தந்தை, செவிலி, பாங்கன், பரத்தையர், கண்டோர், அறிவர், பாணன், பார்ப்பனர், விறலியர், கூத்தர், இளையோர், விருந்தினர், தேர்ப்பாகன் ஆகியோர் துணைமைப் பாத்திரங்களாக அகவிலக்கியங்களில் இடம் பெறுகின்றனர்.

**தலைவியின் இலக்கணம்**

> **"அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த**
>
> **நிச்சமும் பெண்பாற் குரிய என்ப"[2]**

என்னும் நூற்பாவில் அச்சமும், நாணமும், மடனும் பெண்டிருக்கு இயல்பாக இருக்க வேண்டியது என்று தொல்காப்பியர் கூறுகின்றார்.

**களவில் தலைவியின் இயல்பு**

> **"வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்**
>
> **ஆக்கஞ் செப்பல் நாணுவரை இறத்தல்**
>
> **நோக்குவ எல்லாம் அவையே போறல்**
>
> **மறத்தல் மயக்கஞ் சாக்காடு என்றிச்**
>
> **சிறப்புடை மரபினவை களவென மொழிப"[3]**

என்னும் நூற்பாவில் தொல்காப்பியர் தலைவியின் உள்ளத்து நிகழ்ச்சியும், இடைவிடாது நினைத்தலும், உண்ணாமையால் வரும் உடல் மெலிவும், உறங்காமையும் உருவ ஓதலும் முதலியன கூறுதலும், நாண் நீங்குதலும், தன்னாற் காணப்பட்டன எல்லாம், தான் கண்ட உறுப்புப் போல இருத்தலும், மோகித்தலும், சாதலும் தலைவியின் இயல்பாகக் கூறுகின்றார்.

**தலைவனைக் கண்ணுற்ற தலைவி இலக்கணம்**

> **"காமத் திணையிற் கண்நின்று வரூஉம்**
>
> **நாணும் மடனும் பெண்மைய ஆகலின்**
>
> **குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை**
>
> **நெறிப்பட வாரா அவள்வயின் ஆன"[4]**

தலைவி தலைவனை எதிர்ப்பட்டு முன்னிலையாக்கல் முதலாகத் தலைவன்மாட்டு நிகழ்ந்தமை போலத் தலைவிமாட்டு நிகழ்பவை உளவோ

வெனின், அவள்மாட்டுக் குறிப்பினனாதல், சொல்லுதற்குத் தக்க விடத்தினனாதல் தோற்றுவதல்லது, புலப்பட்டு நிகழா தென்றாலாறாயிற்று என்று கூறுகின்றார்.

**களவில் தலைவி கூற்று நிகழ்த்தும் இடங்கள்**

> **“மறைந்தவற் காண்டல் தற்காட் டுறுதல்**
>
> **நிறைந்த காதலின் சொல்லெதிர் மழுங்கல்**
>
> **…………………………………………**
>
> **அன்னவு முளவே ஓரிடத் தான”[5]**

இந்நூற்பாவில் தலைவியைத் தலைவன் காணாமல் இருக்கும் பொழுது தலைவி தலைவனைக் காணும் காட்சியும், தலைவி தலைவன் காணும்படி நிற்றலும், தலைவன் மீது தலைவி கொண்டுள்ள அதிக விருப்பத்தால் அவன் சொல் கேட்டு அவனை எதிர்த்து பேசாமல் பணிந்து இருத்தலும் என்னும் மூன்று இடங்களில் கூற்று நிகழாது. மறுத்தாங்கு மாறாது பின்னும் ஏற்றுக்கோடலும், குற்றந்தீர்ந்த முறுவல் சிறிது தோற்றுவித்தலும் ஆகிய இவை ஆறும் புணர்ச்சிக்கு முன் நிகழக்கூடியதாகும். தலைவன் கையகப்பட்ட பின்பு என் செய்தே மாயினேம் எனக் கலக்கமுறினும் தலைவிக்கு முன்புள்ள நாணத்தினும் மிக நாணம் வருவதும், தலைவன் தன்னை விட்டு பிரிந்து விடுவானோ என்று அஞ்சி இரக்கம் முறினும், தலைவன் வருவதற்குக் காவலாகிய அருமை செயல் செய்ததனால் அவனும் வருதலைத் தவிரினும் அன்றியும் புறத்து விளையாடுவதற்கு அருமை செய்ய மயக்கம் வரினும் தலைவன் வந்தவிடத்து அலராகும் என்று அஞ்சி இகழ்ந்த வழியும் மறையாது சொல்லி இரங்கினும் தலைவன் தெளிவித்த தெளிவை நொந்து, அதனை ஒழிப்பினும், தலைவன் வருவதற்கு இடையீடாக அச்சம் மிகுதியாவதும், தலைவன் பிரிந்த வழிக் கலக்கம் உறினும், தலைவனோடு கூட்டம் பெற்றவழி மகிழினும், தலைவன் வருவதற்கு இடையீடாகக் காவலர் கடுகுதலான் ஈண்டு

வருதல் அரிதெனத் தோழி தலைவிக்குச் சொல்லினும் தலைவி கூற்று நிகழ்த்துவாள்.

**தலைவி குறியிடம் கூறல்**

**"அவன்வரம் பிறத்த லறந்தனக் கின்மையின்**

**களஞ்சுட்டுக் கிளவி கிழவிய தாகுந்**

**தான்செலற் குரியவழி யாக லான"[6]**

என்னும் நூற்பாவில் தலைவன் இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த பின்பு தலைவன் எல்லையை மறுத்தல் தலைவிக்கு அறமாகல் இன்மையானே, குறியிடம் தலைவி கூறுவாள் என்று தொல்காப்பியர் கூறுகின்றார்.

**தலைவிக்கு உரியதோர் இயல்பு**

**"பன்னூறு வகையினுந் தன்வயின் வரூஉம்**

**நன்னய மருங்கின் நாட்டம் வேண்டலின்**

**துணைச்சுட்டுக் கிளவி கிழவிய தாகுந்**

**துணையோர் கரும மாத லான"[7]**

என்னும் நூற்பாவில் தொல்காப்பியர் தலைவி, தலைமகன் களவுக் காலத்துப் பாங்கற்கு உற்றதுரைத்த பின்பு பாங்கனைச் சுட்டி யாது செய்வான் எனக் கூறுவதாக எடுத்துரைக்கின்றார்.

**கற்பில் தலைவி கூற்று**

**"அவனறி வாற்ற அறியும் ஆகலின்**

**...................................................**

**கிழவோள் செப்பல் கிழவ தென்ப"[8]**

என்னும் நூற்பாவில் தலைவனது நினைவைத் தலைவி மிக அறியுமாகலின் அவனை உயர்த்திக் கூறுதற்கண்ணும், தலைவனது பண்பினைத் தோழி

கூறியவாற்றான், தான் நிறுத்துக் கூறுதற் கண்ணும், தலைவிக்கு உரிமையைக் கொடுத்த கிழவோனிடம் பெருமை திரியா அன்பின் கண்ணும் கூற்று நிகழும் என்பதனை அறிய முடிகின்றது. மேலும், மனங்கொள்ளாத காலத்தினும், புறத்து விளையாடுதல் ஒழிந்து மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்த வழித் தோழிக்குச் சூழ்தலமைந்த அரிய மறைப்பொருளைச் சொல்லுதலும், கைப்பட்டுக் கலங்கல் முதலாக கூறிய வாயில் கொள்ளாக் காலை ஈறாகச் சொல்லப்பட்ட பன்னிரு வகையும் தலைமகள் தோழிக்கு உரைக்கப்படும் நிகழ்வினையும் இதன் வாயிலாக அறியமுடிகின்றது.

## தலைவியிடம் சொல் நிகழ்தல்

**“வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்**

**வரையா நாளிடை வந்தோன் முட்டினும்**

**உரையெனத் தோழிக்கு உரைத்தற் கண்ணும்**

**தானே கூறுங் காலமும் உளவே”[9]**

இவற்றில் தலைவன் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்குகின்றான், இன்ன நாள் வரைந்து கொள்வேன் எனக் கூறித் தோழியிற் கூட்டத்திற்கு முயலாது தணந்தவழி அதனைத் தோழி ஐயப்படுங் குறிப்புத் தோன்றாமை மறைந்தொழுகிய தலைவி அவன் வருந்துணையும் ஆற்றாது வருத்தமுறினும் வரையாத நாளின்கண் மறந்தொழுகா நின்ற செவிலி முதலாயினாரை முட்டினவழியும் இவ்வொழுக்கத்தினை உன் தோழிக்கு உரையெனத் தலைவன் கூறிய வழியும் தலைவி தானே கூறும் காலமும் உண்டு என்று கூறுகின்றார்.

**தலைவிக்கு உரிய இயல்பு**

**"தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்தல்**

**எண்ணுங் காலைக் கிழத்திக் கில்லை**

**பிறநீர் மாக்களின் அறிய ஆயிடைப்**

**பெய்ந்நீர் போலும் உணர்விற் றென்ப"[10]**

என்னும் நூற்பாவில் தலைவி தனது விருப்பத்தைத் தலைவன் முன்பு சொல்லக்கூடிய கூற்று தலைவிக்கு இல்லை. அங்ஙனம் சொல்லாதவிடத்தும் புதுக்கலத்தின்கண் பெய்த நீர்போலப் புறம் பொசிந்து காட்டும் உணர்வினையு முடைத்தது அவ்வேட்கை என்று சுட்டுகின்றார்.

தலைவனைத் தலைவி நீங்கித் தனிமையுறுதல் பெரிதாகும் போதும் அலமரல் பெருகிய காமத்தின் மிகுதியினாலும் இவ்வாறாக மேற்கூறிய அனைத்து இடங்களிலும் தலைவி கூற்று நிகழும் என்பது இதன் வாயிலாக அறியமுடிகின்றது. மேலும்,

**"புணர்ந்துடன் போகிய கிழவோள் மனையிருந்து**

**இடைச்சுரத் திறைச்சியும் வினையும் சுட்டி**

**அன்புறு தக்க கிளத்தல் தானே**

**கிழவோன் செய்வினைக்கு அச்ச மாகும்"[11]**

இந்நூற்பாவும் தலைமகளின் இலக்கணத்தைச் சுட்டுகின்றது. களவிற் புணர்ந்து உடன்போகிய தலைவி கற்புக்கடன் பூண்டொழுகும் காலத்து மனையிலிருந்து தான் முன்னர் இடைச்சுரத்தில் தலைவனுடன் கண்ட கருப்பொருள் முதலியவற்றையும், அவற்றின் தொழிலையும் குறித்துக் கிழவன் அன்புறுதற்குத் தக்கவற்றைக் கூறுதலே தலைமகன் இயற்றுந் தொழிற்கு அஞ்சும் அச்சமாகும். எனவே புணர்ந்துடன் போகாத தலைவி,

அங்ஙனமிருந்து தலைவிக்கு அவன் செய்வினைக்கண் அச்சமாகாது என்று கூறுகின்றார்.

**தலைவிக்கு உரியதொரு மரபு**

**“அவன்குறிப் பறிதல் வேண்டியுங் கிழவி**

**அகமலி யூடல் அகற்சிக் கண்ணும்**

**வேற்றுமைக் கிளவி தோற்றவும் பெறுமே”[12]**

தலைவன் குறிப்பறிதல் வேண்டியும் தலைவி தனது அகமலிந்த ஊடல் நீங்கும் இடத்தினும் வேற்றுமைக் கிளவி தோற்றவும் பெறும் என்று கூறுகின்றார். மேலும்,

**“எண்ணரும் பாசறைப் பெண்ணொடும் புணரார்”[13]**

என்பதில் நினைத்தற்கரிய பாசறையிடத்து தனக்கு உரிமையான தலைமகளிரொடு புணரமாட்டார்கள் தலைவர்கள் என்பது புலப்படுகின்றது.

**“தற்புகழ் கிளவி கிழவன்முற் கிளத்தல்**

**எத்திறத் தானும் கிழத்திக் கில்லை**

**முற்பட வகுத்த இரண்டலங் கடையே”[14]**

அதாவது தலைவன் முன்னர்த் தன்னைப் புகழ்ந்து பேசுதல் தலைவிக்கு உரியது இல்லை என்று கூறுகின்றார். மேலும்,

**“யாறுங் குளனுங் காவும் ஆடிப்**

**பதிஇகந்து நுகர்தலும் உரிய என்ப”[15]**

என்னும் நூற்பாவில் கூடியாடி விளையாடும் விளையாட்டு தலைவற்கும் தலைவிக்கும் உரியதொரு மரபாகும் என்று கூறுகின்றார். மேலும், தலைவனுக்கேற்ற வாழ்க்கைத் துணைவியாகப் பெண் அமைகின்றாள். வாழ்க்கைத் துணைவிக்குரிய பெருங்குணங்களை,

**"கற்பும், காமமும், நற்பால் ஒழுக்கமும்**

**மெல் இயல் பொறையும், நிறையும் வல்லிதின்**

**விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்**

**பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்"[16]**

என்று தொல்காப்பியர் கூறுகின்றார்.

## தலைவியின் பண்புநலன்கள்

அகத்திணையில் தலைவியை மையமிட்டே எல்லாக் கூற்றுகளும் அமைகின்றன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணைகளின் உரிப்பொருள்களான புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் ஆகிய ஐவகை செயல் உணர்வுகளும் தலைவியை மையமாகக் கொண்டவையாகும். சங்க இலக்கியத்தில் தலைவி கூற்றாக 559 பாடல்கள் உள்ளன. தலைவி, தலைவனைப் பிரிந்து வாடும்போது நிகழ்த்தும் கூற்றுக்கள், அவள் தலைவன் மேல் கொண்ட காதலையும், ஈடுபாட்டினையும் புலப்படுத்துவனவாக உள்ளன.

## தலைவியின் அழகு பற்றிய வருணனைகள்

எட்டுத்தொகையில் குறிப்பாக அகநூல்களில் தலைவியின் பண்புநலன்கள் குறித்து ஆராயப்படுகின்றது. தலைவியின் அழகைப் புலவர்கள் எவ்வாறு கையாண்டுள்ளனர் என்பதைப் பின்வரும் பாடல்கள் மூலம் விளக்கப்படுகின்றது.

## தலைவியின் கண்கள்

மானின் மடப்பத்தினையும், செருக்கான பார்வையையும் கொண்டவள் தலைவி என்றும்,

**"………………………. மாவின்**

**மடங்கொங் மதைஇய நோக்கின்"**[17]

பெரிய கயல் மீன்கள் போன்று ஒன்றோடொன்று போரிடுகின்ற மையுண்ட கண்களையும் உடையவள். மேலும், "மான்நோக்கி" (கலி.87:11) என்று கூறும் பாடல் வரியில் மான் போன்ற நோக்கினையுடையவள் என்று தலைவி சுட்டப்படுகிறாள்.

**தலைவியின் வாய்**

**"..................... கிளியெனச்**

**சிறிய மிழற்றுஞ் செவ்வாய்"**[18]

என்னும் பாடலின் வழி கிளி போன்று மென்மையான சொற்கள் சிலவற்றையே கூறுகின்ற சிவந்த வாயினை உடையவள் தலைவி என்பது புலப்படுகின்றது.

**தலைவியின் நுதல்**

**"பிறைவனப்பு உற்ற மாசறு திருநுதல்"**[19]

என்னும் பாடலடி பிறை நிலவின் குற்றமற்று விளங்கும் தன்மை போன்று அழகுடைய நெற்றியைக் கொண்டவளாகத் தலைவி விளங்குகின்றாள் என்பதைப் புலப்படுத்துகின்றது.

**தலைவியின் விரல்கள்**

**"செவ்விரல் சிவந்த சேயரி மழைக்கட்"**[20]

தலைவி இயல்பாகவே மென்மைத் தன்மைக் கொண்டவள் என்றும், வயலைக் கொடியால் மாலைக் கட்டுவதால் விரல்கள், மேலும் சிவந்து காணப்பட்டது என்று தலைவியின் மென்மைப் பண்பு இங்கு வெளிப்படுகின்றது.

**தலைவியின் கூந்தல்**

தலைவியின் கூந்தலானது முல்லை மலரைப் போன்று மணக்கும் தன்மையைக் கொண்டதாக விளங்குகின்றது.

**"................... துயல்வருங் கூந்தற்"[21]**
**"............................. மனைமரத்**

**தெல்லுறு மௌவ னாறும்**

**பல்லிருங் கூந்தல்"[22]**

**"நாறிருங் கதுப்பின்எம் காதலி"[23]**

மேலும் நன்னனின் அழகிய பறம்பு மலையைப் போன்ற மின்னுகின்ற குளிர்ச்சியான கூந்தலை உடையவள் தலைவி என்று பறம்பு மலையுடன் தலைவி உவமையாக்கப் பட்டுள்ளமையை அறியமுடிகின்றது.

**தலைவியின் மேனி**

**"எழின்மா மேனி மகளிர்"[24]**

**"................... நம்மூர்ப்**

**பொய்கை யாம்ப னாருரி மென்கா**

**னிறத்து நிழற்றுதன் மன்னே"[25]**

அழகிய மாந்தளிரின் நிறம் போன்றும், பொய்கையில் வாழும் ஆம்பலின் நார் உரிக்கப்பட்ட தண்டு எவ்வாறு ஒளிவிடுமோ, அதனைக் காட்டிலும் பொலிவானதாகத் தலைவியின் மேனி காட்சியளிக்கின்றது என்றும் கூறுகின்றது.

**தலைவியின் அல்குல்**

**“வயன்மல ராம்பற் கயிலமை நுடங்குதழைத்**

**திதலை யல்குற்”[26]**

என்னும் பாடலில் கழனியில் மலர்ந்த ஆம்பல் மலரால் தொடுத்த மீட்டு வாயை உடைய அசையும் தழையினையும், தேமலால் அழகு பெற்ற அல்குலையும் கொண்டவளாக தலைவி இருக்கின்றாள். இவ்வாறு அழகு பற்றிய வருணனைகள் இடம்பெறுகின்றன.

**தலைவியின் ஆற்றாமைப் பண்பு**

தலைவன் தன்னைப் பிரிந்து சென்று விட்டான். கற்புடைய மகளிர் ஆடுகளத்திற்குச் செல்ல மாட்டார்கள். இவன் தன்னைத் தேட வைத்ததால் தன்னையும் இழிவாக ஆக்கிவிட்டான். அவனும் இழிவான தன்மையைப் பெற்றான் என்று தன்னுடைய ஆற்றாமையால் கலங்குகின்றாள்.

**“தொண்டி யன்னவென் னலந்தந்து**

**கொண்டனை சென்மோ மகிழ்நநின் சூளே”[27]**

தலைவனின் பரத்தமையைக் கண்டு தலைவி ஊடல் கொள்ளுகின்றாள். பரத்தையை அறியவில்லை என்று சூள் செய்கின்றான். சூள் செய்தவருக்கு தண்டனை வரும் என்று எண்ணுகின்றாள். தலைவனோடு கூடி மகிழ்வதற்கு பலர் இருக்கின்றனர். ஆனால் தலைவிக்கு தலைவன் அன்றி வேறு யாரும் இல்லை. ஆதலால் அவன் தன் ஆற்றாமையால் புலம்புகின்றாள்.

குப்பையில் மேய்ந்து கொண்டிருக்கும் கோழிகள் தாமே தனிமையில் நிகழ்த்தும் போரினைப் போல, அதுவே முடியும் காலத்தில் முடியும் அன்றி தன்னுடைய நோயைக் களைவார் யாரும் இல்லை என்று கூறுகின்றாள். தலைவன் வரைவுடன் வந்து என் வருத்தத்தை நீக்கவும் மாட்டார் என்று தன் ஆற்றாமையை வெளிப்படுத்துகின்றாள்.

தலைவன் தன்னுடைய இளமை கழிந்துவிட்டது என்றும் தன்னைப் புதல்வன் தாயே என்றும் கூறுகின்றான். தன்னுடைய இளமையழகு சென்றதால் தான், தலைவன் தன்னைப் பிரிந்து செல்கின்றான் என்று தலைவி எண்ணுகின்றாள். நீ பொய்யாக என்னிடம் வந்து பேசுவது எனக்கு இனிமை செய்யாது என்று தன் ஆற்றாமையை எண்ணி வருந்துகின்றாள்.

தலைவன் களவுக்காலத்தில் தன்னுடைய நலன்களைப் பாராட்டியும் உறுதிமொழிகளையும் கூறியவன், இப்பொழுது கற்புக்காலத்தில் எக்காரணம் பற்றி பிரிந்தானோ! என எண்ணுகின்றாள். தலைவன் பரத்தையரோடு உறவு கொண்டு இருக்கின்றான். என்னை அவன் மணந்து கொண்டான் என்ற வகையில் எனக்கு அவன் அருள் செய்யவில்லை என்று புலம்புகின்றாள் தலைவி.

**"மணந்தனை யருளா யாயினும் பைபயத்**

**தணந்தனை யாகி யும்மோ"[28]**

என்ற அடிகள் இதனை நிறுவுகின்றன.

பெரிய கொம்பினை உடைய எருமை தன் கயிற்றை அறுத்துக் கொண்டு சென்று நெடிய கதிரை உணவாகக் கொள்ளும். இரவுப் பொழுதிலே பரத்தையரை நுகர்ந்தவன் பகற்பொழுதில் வீட்டிற்கு வந்தான். ஆனால் இப்பொழுது அப்படியும் வருவதில்லை. இரவு பகல் என்று பாராமல் தனக்கு தலைவன் துன்பம் செய்கின்றான் என்று தன் ஆற்றாமையைக் கூறுகின்றாள்.

தலைவன் பரத்தையரோடு இருந்துவிட்டு தலைவியின் வீட்டிற்கு வருகின்றான். அவ்வாறு வரும்போது நீ பரத்தை வீட்டிற்கே சென்றுவிடு என்று தலைவி கூறுகின்றாள். பாகன் பூட்டிய தேரோடு நிற்கின்றான். அவர்களிடம் அன்பு கெட்டுவிடாமல் நிலைநிறுத்து என்று தன் ஆற்றாமை மிகுதியை வெளிப்படுத்துகின்றாள் தலைவி.

விளையாடச் சென்ற புதல்வன், இளமகளிராலும் வேற்றுத் தாயாராலும் இடையீடு பட்டுக் காலந் தாழ்த்தி வந்தான். தந்தையும் பரத்தையர் செய்த வடுவைக் காட்டி வந்தான். மகன் செய்ததை ஆற்றாதிருந்த நிலையில் தலைவன் இக்கோலத்துடன் வந்தது வேதனையையும் வெறுப்பையும் தந்தன. அது,

**"வெந்தபுண் வேலெறிந் தற்றால்"**[29]

போல் இருந்தது என்று தன் ஆற்றாமையை வெளிப்படுத்துகின்றாள்.

## தலைவியின் வருத்தம்

ஒரு செயலை இடனறிந்து செய்து பயன் கொள்ள அறியாமல், இடனில் பருவத்துச் செய்து வருந்துவது நாணமற்ற செயல் ஆகும். மழை பெய்தால் கரும்பின் பொறி அவிழும். அது போல தலைவனின் பிரிவு குறித்து ஊரார் உரைக்கும் கடுஞ்சொற்கள் தன்னைத் துன்புறுத்துகின்றன என்று தலைவி தன் துயரினை உரைக்கின்றாள். அவை,

**"கனைத்த கரும்பின் கூம்புபொதி யவிழ**
**நுண்ணுறை யழிதுளி தலைஇய**
**தண்வரல் வாடையும் பிரிந்திசினோர்க் கழலே"**[30]

என்னும் பாடலடி வழி புலப்படுகின்றது.

## தனிமைத் துன்பம்

**"இலங்குவளை நெகிழச் சாஅய்ப்**
**புலம்பணிந் தன்றவர் மணந்த தோளே"**[31]

தலைவன் தன்னைப் பிரிந்தமையால் (புறக்கணித்தமையால்) தோள்கள் மெலிந்தன, வளைகள் நெகிழ்ந்தன என்று தன் தனிமைத் துன்பத்தைக் கூறுகின்றாள் என்பது இவற்றின் மூலம் அறியமுடிகின்றது.

**வரைவு வருத்தம்**

> **“மீன்வலை மாப்பட் டாஅங்**
>
> **கிதுமற் றெவனோ நொதுமலர் தலையே”[32]**

என்னும் இப்பாடலில் மீனுக்கு இட்ட வலையில் மீன் சிக்காத வருத்தத்தோடு, நீர் நாய் சிக்கியதால் அதனை விடுவிக்கும் வருத்தமும் சேர்ந்து கொண்டது. இதில் தலைவன் வரைவு வேண்டுதல் தொடர்பாக தன்னை வந்து பெண் கேட்காத வருத்தமும், நொதுமலர் வரைவு வேண்டி வந்தவழி அவர்களை விலக்குவதற்கும் வருந்த வேண்டிய சூழ்நிலை உண்டாயிற்று என்னும் கூற்றை அறியமுடிகின்றது.

**சுடலை**

> **“ஏதி லாளர் சுடலை போலக்**
>
> **காணாக் கழிப மன்னே”[33]**

என்னும் பாடல் வரிகளில் தலைவனின் காமம் தன்னைவிட்டு பரத்தையிடம் சென்றது. தன் நிலை சுடலை போன்று காட்சியளிக்கின்றது. அறியார் பிணம் சுடலையில் எரியும் போது காணாது கழிவர், சுடலை அருகே செல்ல வேண்டிய காலங்களில் அன்றி மற்றைய காலங்களில் அதனைப் பற்றிய சிந்தனை வருவதில்லை. அதுபோலத் தன்னுடைய நிலை அவ்வாறு இருப்பதை எண்ணி வருந்துகின்றாள்.

தலைவிக்கு தலைவன் சொல்லும் பொய்யை மெய்யாக நம்புகின்ற பண்பு காணப்படுகின்றது. தலைவனின் தழுவுதலும் தனக்குப் பொய்யோ என நினைக்கத் தோன்றுகின்றது என்றும் அது தனக்குப் பின்னாள் நோயாகவும் இருக்கின்றது என்றும் கூறுகின்றாள்.

தலைவியின் பசலையானது பாசியின் தன்மையைப் போன்று இருக்கின்றது. தலைவன் தன்னைத் தொடும் போதெல்லாம் நீங்குவதாகவும்

தன்னை விட்டு நீங்கும் போதெல்லாம் உடலெங்கும் பரவுவதாகவும் கூறுகின்றாள். ஆதலால் விரைவில் தன்னைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று தன் வருத்த மிகுதியைக் கூறுகின்றாள்.

**“நலம்பெறு பணைத்தோள் நன்னுதல் அரிவையொடு**

**மணங்கமழ் தண்பொழில் அல்கி நெருநை**

**நீதற் பிழைத்தமை அறிந்து**

**கலுழ்ந்த கண்ணளெம் அணங்கன் னாளே”[34]**

என்னும் இப்பாடலடிகள், நீழல் என்னும் ஊரினைப் போன்ற, பேரழகு படைத்த பெருத்த தோளினையும், அழகிய நெற்றியினையும் உடைய பரத்தையோடு மணங்கமழும் சோலையில் தலைவன் தங்கியிருந்தான். அதனை அறிந்த தெய்வம் போன்ற தலைவி அழுத வண்ணம் இருக்கின்றாள்.

தலைவன் தன்னைப் பிரிந்ததை எண்ணி உறக்கமின்றி தலைவி இருக்கின்றாள். உறங்கத் தொடங்கிய சமயத்தில் பரத்தையர் இல்லத்திலிருந்து வந்த ஓசைகள், துணங்கை, அரவம் முதலானவை தூக்கத்தைக் கெடுக்கின்றன என்று கூறுகின்றாள். தலைவனின் பிரிவு அவளை மிகவும் வருந்தச் செய்கின்றது என்று கூறுகின்றாள்.

## தலைவியின் கோபப்பண்பு

**“யாண ரூரன் றன்னோடு வதிந்த**

**ஏம வின்றுயி லெடுப்பி யோயே”[35]**

என்னும் பாடலில், பொருள் முற்றித் தலைவன் தன் இல்லம் வந்தான். அவனுடன் கூடி மகிழ்ந்த தலைவி, இரவு புலர்ந்ததைக் கண்டு துயருற்றாள். விடியலின் வருகையை உணர்த்திய சேவலைக் கண்டு தன்னுடைய இனிய உறக்கத்தை எழுப்பிக் கூவியதாக எண்ணிக் கோபம் கொள்கின்றாள் தலைவி.

‘தண்டாப் பரத்தை’ என்று தலைவனைப் பற்றி கூறுகின்றாள். ஆற்றினின்னும் மிக்கும் சென்று வீழ்கின்ற நீரால் நிறையாத, மிகு கடல் போன்றது தலைவனின் பரத்தமை என்றும் உன்னோடு புலக்கும் பரத்தையரைத் தேற்றி மகிழச் செய்ய செல்வாயாக என்று கூறுகின்றாள். மேலும்,

**“தளர்நடைப் புதல்வனை யுள்ளிநின்**

**வளமனை வருதலும் வெளவி யோளே”[36]**

என்று தன்னுடைய மகனின் தளிர் நடையைக் காண வருவதைத் தடுத்து நிறுத்திய பெண் யார்? அந்தப் பெண்ணுக்கும் உனக்கும் உள்ள உறவு யாது? எனக் கோபம் கொண்டு வெகுண்டு கேட்கின்றாள் தலைவி.

**பரத்தை தீண்டியதால் வந்த கோபம்**

**“தொடுகலம் குறுக வாரல் தந்தை**

**கண்கவின் அழித்ததன் தப்பல் தெறுவர**

**ஒன்றுமொழிக் கோசர்க் கொன்றுமுரண் போகிய**

**கடுந்தேர்த் திதியன் அழுந்தைக் கொடுங்குழை**

**அன்னி மிஞிலியின் இயலும்**

**நின்னலத் தகுவியை முயங்கிய மார்பே”[37]**

என்னும் பாடலில் அன்னி மிஞிலி தந்தையின் கண்ணைக் களைந்து அழகினைக் கெடுத்தனர். அக்குற்றத்திற்காக மிஞிலி அவர்களைக் கொன்று குவித்தான். அந்த மிஞிலி போல பரத்தை தலைவனை அடைந்த களிப்பு மிகுதியால் இருக்கின்றாள். அவள் தழுவிய தலைவனின் மார்பைத் தீண்டமாட்டேன் என்றும், என் அருகே வராதே என்றும் கூறுகின்றாள் தலைவி. அந்த அளவிற்குக் கோபம் கொண்டவளாகக் காட்சியளிக்கின்றாள்.

**தலைவியின் எள்ளல் தன்மை**

தலைவன் ஒருநாள் தன்னுடைய இல்லத்திற்கு வந்தாலும் அவனைக் காதலிக்கும் பெண்டிர் தீயில்பட்ட மெழுகுபோல் உள்ளம் உருகி ஏழுநாள் வருந்துவார்கள் என்று கூறுகின்றாள். தலைவன் அயலோர் வீடுபோலத் தன் இல்லத்தைக் கருதியும், பரத்தையர் மனையே தன் மனையாகக் கருதியும் வாழ்கிறான் என்று அவனின் குணத்தை எள்ளுகின்றாள் தலைவி.

**"ஒருநா ணம்மில் வந்ததற் கெழுநா**

**ளமுய என்பவன் பெண்டிர்**

**தீயுறு மெழுகின் ஞெகிழ்வனர் விரைந்தே"[38]**

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடலடிகளால் தெளியலாம்.

**பாணனை எள்ளும் தன்மை**

பாணன் தெருவில் நடந்து செல்லும் போது கன்று ஈன்ற பசு தன்மேல் பாய்ந்தமையால் கலக்கமுற்று தன் கையில் இருந்த யாழினைக் கீழே போட்டு விட்டு வீட்டிற்குள் சென்றான். அங்கிருந்த தலைவி, பாணனே இது உன் மனையன்று என்று கூறிய போது அவன் தலைவியைத் தொழுதுநின்றான். இவனின் நிலையைப் பார்க்கும்போது நகை பிறக்கின்றது என்று கூறுகின்றாள் தலைவி.

**"பரிவொடு வரூஉம் பாணன் தெருவில்**

**புனிற்றயப் பாய்ந்தெனக் கலங்கி யாழிட்**

**டெம்மனைப் புகுதந் தோனே அதுகண்டு**

**மெய்ம்மலி உவகை மறையினென் எதிர்சென்**

**நிம்மனை அன்றஃ தும்மனை என்ற"[39]**

என்னும் பாடல் தலைவனுடைய தேர் பல நாட்கள் பரத்தைச் சேரிக்குச் செல்லவில்லை என்று கூறுகின்றான். என்னைப் போன்று உன்னுடைய

மொழியினை உண்மையென்று நம்புகின்ற பேதை அக்கூட்டத்தில் உள்ளனரோ என்று தலைவனின் பொய் கூறும் பண்பை எள்ளி நகையாடுகின்றாள் தலைவி என்பதை அறியமுடிகின்றது.

## தலைவியின் தன்னலம் பாராத தன்மை

மன்னன் வாழ வேண்டும் என்றும், நாட்டு வயல்களில் நெல்வளம் பொன்வளம் சிறக்க வேண்டும் என்றும், அந்தணர்கள் தன்னுடைய வேதத்தை ஓத வேண்டும் என்றும், பசியாகிய பிணி இல்லாது நீங்க வேண்டும் என்றும், ஏனை நோய்களும் சேய்மைக் கண்ணே நீங்க வேண்டும் என விரும்பி வாழ்ந்தாள் தலைவி.

**"வாழி யாதன் வாழி யவினி!**
**பசியில் லாகுக பிணிசே ணீங்குக"**[40]

என்னும் இவ்வரிகளில் மழைவளம் சிறக்க வேண்டும் என்றும் அதன் உதவியால் பல்வகைச் செல்வங்களும் பெருக வேண்டும் என்றும் விரும்பி வாழ்ந்தாள் தலைவி என்பது இதன் மூலம் உணரமுடிகின்றது.

## தலைவியின் அச்சப் பண்பு

**"குக்கூ வென்றது கோழி யதனெதிர்**
**துட்கென் றன்றென் றூயநெஞ்சம்"**[41]

என்னும் பாடலடிகள் மூலம் கோழி குக்கூ என்று கூவியதால், எனது காதலனைப் பிரியச் செய்யும் வைகறைப் பொழுது வந்தது. அதனால் தன்னுடைய நெஞ்சம் அச்சம் கொண்டது என்று தலைவி கூறுவது புலப்படுகின்றது.

**தலைவியின் ஏசல் தன்மை**

**பரத்தையை ஏசல்**

> **“பேணா ளோறின் பெண்டே**
>
> **யான்றன் னடங்கவுந் தானடங் கலளே”[42]**

எனும் பாடலடிகளில் தலைவனிடம் தலைவி நான் பாதுகாக்க வேண்டியவற்றை பாதுகாக்கத் தவறியவள் என்று, பரத்தை என்னைப் பற்றி ஊராருடன் புறம் பேசுகிறாள் என்று பரத்தையைத் தலைவி ஏசுவது இங்கு புலப்படுகின்றது.

> **“பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய்நொடித் தாங்கு**
>
> **வருந்தல்நின் வஞ்சம் உரைத்து”[43]**

என்னும் பாடலடிகளில் தலைவனைத் தலைவி பேய் என்று கூறுகின்றாள். பெரிய கட்டிடத்தில் கொற்றவைக்குப் பேய் நொடி சொல்வது போல, நின் வஞ்சக வார்த்தைகளை வீணாகச் சொல்லி வருந்தாதே என்று கூறுகின்றாள் தலைவி.

> **“தெவ்வர்த் தேய்த்த செவ்வேல் வயவன்**
>
> **மலிபுனல் வாயில் இருப்பை அன்னஎன்**
>
> **ஒலிபல் கூந்தல் நலம்பெறப் புனைந்த**
>
> **முகையவிழ் கோதை வாட்டிய**
>
> **பகைவன் மன்யான் மறந்தமை கலனே”[44]**

எருமை தாமரை மலரை உண்ணாது குவிந்த வெண்மணலில் படுத்துறங்கும். அத்தகைய இயல்பை உடையவன் தலைவன். இப்பொழுது அன்பு கொண்டு பலமுறை என்னைத் தழுவினான். ஆனால் நான் சூட்டிய மாலையை வாடச் செய்தவனும் அவனே என்று தலைவனின் தன்மையை

எடுத்துக் கூறுகின்றாள். இவ்வாறு தலைவியின் பண்புநலன்கள் ஆராயப்பட்டுள்ளன.

## தொல்காப்பியத்தில் தோழி பற்றிய பதிவுகள்

### தோழி கூற்று நிகழ்த்தும் இடங்கள்

**“நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்**

**………………………………………………**

**பாங்குற வந்த நாலெட்டு வகையினும்**

**தாங்கருஞ் சிறப்பின் தோழி மேன”[45]**

நாற்றம் முதலாக சொல்லப்பட்ட முப்பத்திரண்டு பொருளும் தலைவிக்கு இன்றியமையாத தோழியின் கூற்று நிகழுமிடங்கள் ஆகும். மேலும்,

**“தோழியின் முடியும் இடனுமார் உண்டே”[46]**

**“தோழி தானே செவிலி மகளே”[47]**

என்னும் நூற்பாக்களில் தோழியிடமும் குறியிடமும் கூறுதலும் உண்டு என்றும், களவுக்காலத்தில் இன்றியமையாதவளாகத் தலைவியால் வேண்டப்பட்டவள் செவிலியின் மகள் என்றும் எடுத்துரைகின்றார். தலைவி தோழி உறவு - இருதலைப் புள்ளின் ஓர் உயிராக இருப்பது புலப்படுகின்றது.

### தோழிக்கு உரிய இயல்பு

**“சூழ்தலும் உசாத்துணை நிலைமையிற் பொலிமே”[48]**

இந்நூற்பாவில் செவிலி மகள் என்னும் துணையாற் பொலிவு பெறாள் என்றும் தோழி என்பவள் செவிலி மகளாதலேயன்றிச் சூழவும் உசாத்துணையாகவும் வல்லள் ஆதல் வேண்டும் என்றும் கூறுகின்றார்.

**தோழியின் திறன்**

> **"குறையுற உணர்தல் முன்னுற உணர்தல்**
>
> **இருவரும் உள்வழி அவன்வர வுணர்தலென**
>
> **மதியுடம் படுதல் ஒருமூ வகைத்தே"[49]**

தலைவன் குறையுற வுணர்தலும் அவன் குறையாவழித் தலைவி குறிப்புக்கண்டு உணர்தலும் தானும் தலைவியுங் கூடியிருந்துழித் தலைவன் வந்தமைக் கண்டு உணர்தலும் என மூவகை இடத்தும் தோழி அறிவுடம்படுதல் நிகழ்கின்றது. மேலும்,

> **"அன்ன வகையான் உணர்ந்தபின் அல்லது**
>
> **பின்னிலை முயற்சி பெறாள்என மொழிப"[50]**

இதில் தலைவன் தலைவி இருவரின் அன்புடைமையை உணர்ந்தபின் அல்லது வழிபாட்டு நிலைமையாற் கூட்டத்திற்கு முயலப்பெறுபவள் தோழி. மேலும், தோழி வழிமொழிந்து முயலுங்காலத்து அவன் நினைவின்கட் படுந்திறன் ஆராய்ந்து புணர்த்தலைச் செய்வாள் என்பதனை,

> **"முயற்சிக் காலத் ததற்பட நாடிப்**
>
> **புணர்த்த லாற்றும் அவள்வயி னான"[51]**

என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

**கற்பில் தோழி கூற்று நிகழும் இடம்**

> **"பெறற்கரும் பெரும்பொருள் முடிந்தபின் வந்த**
>
> **தெறற்கரு மரபிற் சிறப்பின் கண்ணும்**
>
> **அற்றமழி வுரைப்பினும் அற்றம் இல்லாக்**
>
> **..................................................**
>
> **தோழிக் குரிய என்மனார் புலவர்"[52]**

இந்நூற்பாவில் பெறுதற்கு அரிய பெரும் பொருளை முடித்த பின்னர்த் தோன்றிய தெறுதற்கரிய மரபு காரணத்தால் தலைவனைச் சிறப்பித்துக் கூறுமிடத்தும் பிரியுங் காலத் தெதிர்நின்று சாற்றிய எதிரும் உளப்பட பிறவும் தோழிக்குரிய கூற்று நிகழும் இடங்கள் என்பதை அறியமுடிகின்றது. மேலும்,

**“புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்துஞ்**

**சொலத்தகு கிளவி தோழிக் குரிய”[53]**

என்னும் நூற்பாவில் தோழிக்குரிய மரபுகளைத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். மேலும்,

**“பரத்தை மறுத்தல் வேண்டியுங் கிழவி**

**மடத்தகு கிழமை உடைமை யானும்**

**அன்பிலை கொடியை என்றலும் உரியள்”[54]**

என்று தோழிக்கு உரிய இயல்புகளை இந்நூற்பாவில் கூறுகின்றார் தொல்காப்பியர்.

## தோழியின் பண்புநலன்கள்

அகத்திணை மாந்தர்களில் தோழிக்கென்று தனியான சிறப்பும், மதிப்பும் உண்டு. தலைவன், தலைவி ஆகிய இருவரையும் சேர்த்தும், தனித்தனியாகவும் கூற்றுக்கள் நிகழ்த்துபவளாகத் தோழி விளங்குகின்றாள். களவு, கற்பு என்னும் இருதிறப்பட்ட அக வாழ்க்கையிலும் தோழியின் பங்களிப்பு அதிகம் எனலாம். தலைவன் வரைவு நீட்டித்த இடத்து அவளை வரைவு கடாவுகின்ற போதும், தலைவியின் களவுக்காதல் வெளிப்பட்டு நிற்கும்போதும், அறத்தொடு நின்று முறைமைப்படுத்தும் போதும், உடன்போக்கிலும் தோழியின் செல்வாக்கு குறிப்பிடத்தக்கதாகும். கற்பில் தலைவி, தலைவனைப் பிரிந்து வாடுகின்ற போது, அவனைத் தேற்றுகின்ற பொறுப்பு தோழிக்குரியது. தலைவன் தலைவி ஆகிய இருவரது மனவோட்டங்களை நன்கறிந்து செயல்படும் மதிநுட்பம் நிறைந்தவளாகிய

தோழிக் கூற்றுப் பாடல்களே சங்க அக இலக்கியத்தில் மிகவும் அதிகமாகக் காணப்படுகின்றன. அகத்திணை மாந்தர்களை இணைத்து நிற்கும் இணைப்புப் பாலமாகத் தோழி விளங்குகின்றாள்.

**தோழியின் மதிநுட்பம்**

**"எக்கர் நண்ணிய வெம்மூர் வியன்றுறை**

**நேரிறை முன்கை பற்றிச்**

**சூரர மகளிரொ டுற்ற சூளே"[55]**

என்னும் இப்பாடலில் இல்லத்தின் முன் அரும்பு முதிர்ந்த புன்கமரத்தின் மலர்கள் உதிர்ந்து பரவிக் கிடக்கும் வெள்ளிய மணற்பரப்பு, வேலனால் அழகுப் பெற அமைக்கப்பட்ட வெறியாட்டு நிகழ்த்தப் பெறும் இடங்கள் தோறும், செந்நெல்லின் வெள்ளிய பொரியைச் சிதறினாற் போன்ற தோற்றத்தைத் தரும். ஊரில் உள்ள அகன்ற நீர்த்துறையில் கையின் முற்பகுதியைப் பற்றிக் கொண்டு தெய்வ மகளிரை முன்னிறுத்தி சூளுரைகள் செய்தாய். நீ செய்த சூளுரைகள் என்னை வருத்தின. சூளுரைத்த உன்னை வருத்தவில்லை. நீ களவு நீட்டித்தலை விரும்புகின்றாய் எனத் தலைவனுக்குக் குறிப்பால் தோழி புலப்படுத்துகின்றாள்.

**குறியிடம் கூறும் மதிநுட்பம்**

**"ஊர்க்கு மணித்தே பொய்கை பொய்கைக்குச்**

**சேய்த்து மன்றே சிறுகான் யாறே**

**இரைதேர் வெண்குரு கல்ல தியாவதும்**

**துன்னலபோ கின்றாற் பொழிலே யாமெம்**

**கூழைக் கெருமண் கொணர்கஞ் சேறும்**

**ஆண்டும் வருகுவள் பெரும்பே தையே"[56]**

என்னும் பாடலடிகளில் தலைவனுக்கு ஆற்றங்கரைப் பொழில் தலைவியைச் சந்திக்கும் குறியிடமாகக் கூறுகின்றாள் தலைவி. அக்குறியிடத்தில் இரையைத் தேடும் நாரையைத் தவிர, பிற எவ்வுயிரும் இல்லாததைக் காட்டி, அவர்தம் களவு ஒருவருக்கும் தெரியாது என்று கூறுகின்றாள் தோழி.

## தோழியின் அறிவுரை

**"பரத்தமை தாங்கலோ விலனென வறிதுநீ**

**புலத்தல் ஒல்லுமோ மனைகெழு மடந்தை"[57]**

என்ற பாடல் வரிகளின் மூலம், தலைவனின் பரத்தமையை வெறுத்து அவரோடு ஊடல் கொள்ளும் பெண்கள், தம்மிடம் திருமகள் விலகிச் செல்லவும், நொய் அரிசியை முறத்தால் புடைத்துத் தாமே சமைத்து உண்டு தனிமையை மேற்கொண்டவராகவும், இனிய மொழி பேசும் குழந்தைகள் பால் இன்றி உலர்ந்த முலையைச் சுவைத்துப் பார்த்தும் பெரிதும் வருந்தி இருப்பார்கள். ஆதலால் அதனை அறிந்து பரத்தமை குறித்து மாறுபாடு கொள்ளாமல் இருப்பவரே அறிவுடையவர்கள். மற்றவர்கள் அறிவில்லாதவரே என்று தோழி அறிவுரைக் கூறுகின்றாள்.

**"தஞ்ச மருளாய் நீயேநின்**

**னெஞ்சம் பெற்ற விவளுமா ரழுமே"[58]**

என்னும் பாடல் வழி, தலைவிக்குச் செல்வம் போன்ற ஆயத்தாரும், நாங்களும் வருந்துகின்றோம். உன்னைத் தன் நெஞ்சில் பெற்ற இவளும் அழுகின்றாள். எனவே நீ பரத்தமையை விலக்கி அருள் செய்வாயாக என்று தலைவனுக்கு அறிவுரை கூறுகின்றாள் தோழி. மேலும்,

**"கூதி ராயிற் றண்கலிழ் தந்து**

**வேனி லாயின் மணிநிறங் கொள்ளும்**

**யாறணிந் தன்றுநின் னூரே**

**பசப்பணிந் தனவான் மகிழ்நவென் கண்ணே”[59]**

என்னும் பாடல் வரிகளில் தோழி, தலைவனிடம் உன் ஊர் மழைப் பெய்யும் காலமாயினும், மழையில்லாக் கோடையாயினும் அணியுடன் திகழ்கின்றது. ஆனால் உன்னை மணந்த தலைவி எப்பொழுதும் பசலையுடன் இருக்கின்றாள் என்று அவனின் தீயொழுக்கத்தினைச் சுட்டி அறிவுரை கூறுகின்றாள் தோழி.

**தோழியின் எள்ளல் தன்மை**

தலைவனின் பரத்தமையால் தலைவி இன்னாதவள் ஆயினாள். இளமையுடைய தலைவி வேம்பின் காயினைத் தந்தாலும் தலைவனுக்கு கருப்புக்கட்டி போன்று இருந்தது. ஆனால் அவளுக்கு முதுமை அடைந்ததும் குளிர்ச்சியையுடைய சுனையில் உள்ள தெளிந்த நீரைத் தந்தாலும் வெம்மையாய் விளங்குகின்றது. தலைவனின் அன்பு இவ்வாறு காட்சியளிக்கின்றது என்று தோழி எள்ளி நகையாடுகின்றாள். அவை,

**“வேம்பின் பைங்காயென் றோழி தரினே**

**தேம்பூங் கட்டி யென்றனி ரினியே**

**பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்**

**தைஇத் திங்கட் டண்ணிய தரினும்**

**வெய்ய வுவர்க்கு மென்றனிர்**

**ஐய வற்றா லன்பின் பாலே”[60]**

என்னும் குறுந்தொகைப் பாடலால் அறியலாம்.

**பரத்தையை எள்ளும் விதம்**

**“இவணலம் புலம்பப் பிரிய**

**வனைநல முடையளோ மகிழ்நநின் பெண்டே”[61]**

என்னும் இப்பாடலில் தேனூர் நகரைப் போன்ற அழகுடைய தலைவியின் பெண்மை நலம் தனிமையால் கெட்டொழியுமாறு நீ பிரிவதற்குக் காரணமாக விளங்கிய உன்னால் விரும்பப்பட்ட பரத்தை அத்துணைப் பேரழகியோ? என்று பரத்தையை இகழ்ந்துக் கூறுகின்றாள் தோழி.

**தோழியின் ஆற்றாமை**

**"இருபெரு வேந்தர் பொருகளத் தொழித்த**

**புன்னை விழுமம் போல**

**என்னோடு கழியுமிவ் இருவரது இகலே"[62]**

என்னும் இப்பாடலில் தலைவன் தலைவியின் ஊடல் முடியவில்லை. அன்னி என்பவனும், தேரழுந்தூரினுள்ள திதியன் என்பவனும் குறுக்கை என்னும் இடத்தில் நடைபெற்ற போரில் அன்னியால் வெட்டிச் சாய்க்கப்பட்ட பூவும் மலரும் கொண்ட புன்னைமரம் சாய்ந்தது. அப்பொழுது வேந்தர் இருவரின் பகையும் முடிந்தது. தலைவனுக்கும் தலைவிக்கும் இடையிலுள்ள நான் இறந்துவிட்டால் அவ்விருவரும் ஒன்று கூடுவர் என்று தன் ஆற்றாமையைக் கூறுகின்றாள் தோழி.

**தன்னலம் பாரா தன்மை**

தலைவியின் நிலையைத் தன் நிலையாக எண்ணும் தன்மை தோழியிடம் காணப்படுகின்றது. அது,

**"புதுவறங் கூர்ந்த செறுவில் தண்ணென**

**மலிபுனல் பரத்தந் தாஅங்கு**

**இனிதே தெய்யநின் காணுங் காலே"[63]**

அதாவது, புதிய நீர்ப்பெருக்கு வறட்சியற்ற பகுதியில் வாழ்பவருக்கு மகிழ்ச்சி தருவது போல தலைவிக்கு தலைவனின் தோற்றம் பெரிதும் இன்பம் செய்யும். அவன் வரமாட்டான் என்று ஏங்கிய போது அவன் வந்ததே முயக்கத்தினும்

சிறந்ததாக அமைந்தது என்று தலைவியின் எண்ணத்தைத் தன்னுடையதாக நினைத்து ஏங்குகின்றாள் தோழி.

தலைவியின் நட்பு பிறவிதொறும் தொடர வேண்டும் என்றும் தலைவனின் பரத்தமைப் பண்பினால் தலைவியின் மீது இருந்த நட்பு நாளும் குறைவதைக் கண்டு அது மீண்டும் தொடர வேண்டும் என்று விரும்பியிருந்தேன் என்று கூறுகின்றாள் தோழி. இதனை,

**"தண்டுறை யூரன் கேண்மை**
**வழிவழிச் சிறக்க வெனவேட் டேமே"[64]**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது. மேலும்,

**"மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத்**
**தண்டுறை யூரன் வரைக**
**எந்தையும் கொடுக்க வெனவேட் டேமே"[65]**

என்னும் பாடலில் தலைவியின் வாழ்வே தன் வாழ்வு, ஆதலால் இவளை விரைவில் வரைந்து கொள்ள வேண்டும் என்றும் அவ்வாறு வரும் போது எம் தந்தையும் மனம்மகிழ்ந்து பெண் தர வேண்டும் என்றும் விரும்பி இருந்தோம் என்று நினைக்கின்றாள் தோழி. இவ்வாறு தன்னலம் பாரா தன்மையைக் கொண்டவளாக இருக்கின்றாள் தோழி.

**பரத்தையை இகழும் தன்மை**

**"யாணர் ஊரநின் மாணிழை மகளிரை**
**எம்மனைத் தந்துநீ தழீஇயினும் அவர்தம்**
**புண்மனத்து உண்மையோ அரிதே அவரும்**
**பைந்தொடி மகளிரொடு சிறுவர்ப் புயந்து**
**நன்றி சான்ற கற்போடு**

**எம்பா டாதல் அதனினும் அரிதே"[66]**

என்னும் இப்பாடலில் தலைவன் குலமகளிரைப் போலப் பரத்தையைத் தழுவிக் கிடந்தாலும், நன்மையுடன் விளங்கும் கற்புப் பொருந்திய என்னுடைய மகளிரை ஒத்து அமைதல் இயலாத ஒன்று என்று பரத்தையை இகழ்கின்றாள் தோழி. மேலும்,

**"அந்தர மகளிர்க்குத் தெய்வமும் போன்றே"[67]**

என்னும் இப்பாடலில் பைஞ்சாய்க் கோரை போன்ற நீண்ட கூந்தலையும், பசிய மலர் போன்ற அழகிய தேமலையும், ஒள்ளிய வளையல்களையும் கொண்ட பரத்தை உன்னுடன் நீராடியதனால் அவள் வானுலகப் பெண்கட்குத் தெய்வம் போன்ற சிறப்பு எய்தி விட்டாளோ என்று பரத்தையை இகழ்கின்றாள் தோழி.

## தோழியின் நகைப்பு

பழையன் மாறன் இறந்தது கண்டு கோதை மார்பன் மகிழ்ந்தான். அம் மகிழ்ச்சியைவிடத் தலைவன் நமது இல்லத்திற்கு வராமல் பரத்தையின் வீட்டிற்குச் சென்று விடுகின்றான். ஆதலால் பரத்தை மிகவும் மகிழ்ச்சி அடைகின்றாள். நாம் அதனை ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ளவில்லை. இப்படிச் செய்து விட்டு, நீ யாரையும் அறியவில்லை என்று கூறுவது எனக்கு நகைப்பை அளிக்கின்றது என்று கூறுகின்றாள் தோழி. இதனை,

**"கிள்ளி வளவன் நல்லமர் சாஅய்க்**
**கடும்பரிப் புரவியொடு களிறுபல வவ்வி**
**ஏதில் மன்னர் ஊர்கொளக்**
**கோதை மார்பன் உவகையிற் பெரிதே"[68]**

என்பதால் அறியமுடிகின்றது.

## தோழியின் நாணம்

**"மையீர் ஓதி மடவோய் யானுநின்**

**சேரி யேனே அயலி லாட்டியேன்**

**நுங்கை யாகுவென் நினக்கெனத் தன்கைத்**

**தொடுமணி மெல்விரல் தண்ணெனத் தைவர**

**நுதலும் கூந்தலும் நீவிப்**

**பகல்வந்து பெயர்ந்த வாணுதற் கண்டே"[69]**

என்னும் இப்பாடலில் பாணன் என்பவன் மற்போர் புரிவதில் வல்லவன். ஆரியப் பொருநன் அவனை எதிர்த்துப் போரிட்டான். பொருநனின் முழவு போன்ற தோள்கள் உடையவன் பாணனின் கையகப்பட்டு இறந்து விடுகின்றான். இறந்த அவனது உடலைக் கண்டு போரில் வல்ல கணையன் நாணியது போன்று, தோழியாகிய நானும் பகற்பொழுதில் வந்த பரத்தையைக் கண்டு நாணமடைந்தேன் என்றும் கூறுகின்றாள் தோழி.

## தோழி அறத்தொடு நிற்றல்

**"கொண்டொடி நெகிழச் சாஅய்**

**மென்றோள் பசப்ப தெவன்கொ லன்னாய்"[70]**

என்னும் பாடலடிகளில், தலைவியின் அணங்குக்குக் காரணமும் வளை நெகிழ்விற்குக் காரணமும் ஊரன் ஒருவன் மேல் கொண்ட காதலே எனச் சொல்லி தலைவியின் கற்பினைக் காக்கும் பொருட்டு செவிலிக்கு உண்மையை வெளிப்படுத்துகின்றாள் தோழி.

தலைவன் மார்பை இடையறாது தழுவி அவள் இன்புறும் வண்ணம் அத்தலைவனுக்கே அவளை மணம் முடித்துத் தர வேண்டும் என்று அறத்தொடு நிற்கின்றாள் தோழி.

**வரைவு கடாதல்**

**“யுளைப்பூ மருதத்துக் கிளைக்குரு கிருக்குந்**

**தண்டுறை யூரன் றன்னூர்க்**

**கொண்டனன் செல்க வெனவேட் டேமே”[71]**

என்னும் பாடல் வழி, பூக்களை மிகுதியாகக் கொண்ட மருத மரத்தில் குருகுகள் தம் இனம் சூழ, குழுமி இருக்கும் தண்ணிய துறையினை உடைய தலைவன், அவன் தன்னுடைய ஊருக்குக் கொண்டு சென்று மணந்து வாழ வேண்டும் என்றும் கூறுகின்றாள் தோழி. ஊரில் உள்ளவருக்குத் தெரிந்தால் அலர் ஏற்படும் என்றும் அதனால் விரைவில் தலைவியைத் தன்னூர்க்குக் கொண்டு சென்று வரைந்து கொள்ள வேண்டும் என்று விரும்பியிருந்தாள் தோழி.

தலைவியின் அன்னை அவளின் பசலைக்குக் காரணம் யாது என்று பூசை செய்கின்றார். ஆம்பல் மலரோடு கூடிய பசிய தழையைத் தலையிலே செருகிக் கொண்டு, கதிரவன் காயாத காலைப் பொழுதில் உன்னோடு நகைத்துப் பேசி பிழை செய்தமையால் உண்டான தவறே காரணம் என்று கூறி அவனைத் திருமணம் செய்யும்படி, கூறுகின்றாள் தோழி.

**தோழியின் கோபம்**

**“பிண்ட நெல்லின் அள்ளூ ரன்னஎன்**

**ஒண்தொடி நெகிழினும் நெகிழ்க**

**சென்றீ பெருமநின் தகைக்குநர் யாரோ?[72]**

என்னும் பாடலில், தலைவன் பரத்தையை திருமணம் செய்தான் என்று கூறுகின்றனர்.

அள்ளூர் என்னும் ஊரை ஒத்த எனது ஒளி பொருந்திய வளையலை அணிந்துள்ளவள் நெகிழ்ந்து வீழ்ந்தாலும் வீழட்டும், நீ கருதிய இடத்திற்கு

செல்வாயாக என்றும் உன்னை தடுப்பவர்கள் யாரும் இல்லை என்றும் கோபம் கொள்ளுகின்றாள் தோழி.

**"மதியேர் ஒண்ணுதல் வயங்கிழை யொருத்தி**

**இகழ்ந்த சொல்லுஞ் சொல்லிச் சிவந்த**

**ஆயிதழ் மழைக்கண் நோயுற நோக்கித்**

**தண்ணுறுங் கமழ்தார் பரீஇயினள் நும்மொடு**

**ஊடினள் சிறுதுனி செய்தெம்**

**மணன்மலி மறுகினி இறந்திசி னோளே"**[73]

என்னும் பாடலில், தலைவியின் ஊடலைத் தீர்க்க இயலாமல் தோழியிடம் வந்தான் தலைவன். பரத்தையருள் ஒருத்தி உன்னை இகழ்ந்து பேசினாள், மணம்கமழும் மாலையை அறுத்தெறிந்தாள். இவையெல்லாம் நடந்த பிறகு நீ என்னிடம் வந்து என்னைப் புகழ்தலை விட்டுவிட்டு இந்த இடத்தைவிட்டுச் செல்க என்று கோபம் கொண்டு கூறுகின்றாள் தோழி.

**வாயில் மறுக்கும் தன்மை**

**"அந்தண் பொய்கை யெந்தை யெம்மூர்க்**

**கடும்பாம்பு வழங்குந் தெருவில்**

**நடுங்கஞு ரெவ்வங் களைந்த வெம்மே"**[74]

என்னும் பாடலில், தலைவன் தேன் போன்று இனியவளான தலைவியைப் பிரிந்து பரத்தையரை இழைந்தான். அப்படிப்பட்டவன் ஒருநாள் பாம்பினால் உண்டாகும் துன்பத்திலிருந்து எங்களைக் காத்தவன், அவன் எங்களைப் பிரிய வேண்டும் என்று நினைத்தால் பிறந்த வீட்டிற்கு அழைத்துச் சென்று விடுவாயாக என்று கூறி வாயில் மறுக்கின்றாள் தோழி.

**"இருபெரு வேந்தரும் பொருதுகளத் தொழிய**

**ஒளிறுவாள் நல்லமர்க் கடந்த ஞான்றைக்**

**களிறுகவர் கம்பலை போல**

**அலரா கின்றது பலர்வாய்ப் பட்டே”[75]**

என்னும் பாடலின் வழி, தலைவன் பரத்தையர் கூட்டத்துள் ஒரு இளைய நங்கையை மணம் செய்து கொண்டான் என்று ஊரார் கூறுகின்றனர். அது அஃதை என்பவனின் தந்தை, இருபெரும் வேந்தரும் களத்திலேயே இறந்துபடப் போரிட்டான். அவ்வேந்தர்களின் களிறுகளைக் கவர்ந்த பொழுது எழுந்த ஆரவாரம் போல பலராலும் பேசப்பட்டு அலராக எழுந்தது என்று கூறி வாயில் மறுக்கின்றாள் தோழி. மேலும்,

**“............... நின் காதலி எம்போல்**

**புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து**

**நெல்லுடை நெடுநகர் நின்இன்று உறைய**

**என்ன கடத்தளோ மற்றே”[76]**

என்னும் பாடலில் தோழி தலைவனிடம் உன் காதலியான பரத்தைக்குப் புல்லிய உளை போன்ற தலைமயிரையுடைய மகனைப் பெற்று தரும் தன்மை இல்லை என்று கூறி வாயில் மறுக்கின்றாள். இவ்வாறான பண்புநலன்களைப் பெற்று விளங்குகின்றாள் தோழி.

## தொல்காப்பியத்தில் பரத்தையர் குறித்த பதிவுகள்

**“புல்லுதல் மயக்கும் புலவிக் கண்ணும்**

**இல்லோர் செய்வினை இகழ்ச்சிக் கண்ணும்**

**..............................................**

**கண்ணிய காமக் கிழத்தியர் மேன”[77]**

அதாவது காமக்கிழத்தியர் மூன்று வகைப்படுவர். அவை, 1. ஒத்த கிழத்தியர். 2. இழிந்த கிழத்தியர். 3. வரையப்பட்டார்.

**1. ஒத்த கிழத்தியர் - குலத்தால் ஒத்த கிழத்தியர்**

ஒத்த கிழத்தியர் என்பவர் முந்துற்ற மனையாளன்றிக் காமம் பொருளாகப் பின்னுந் தன் குலத்துள்ளாள் ஒருத்தியை வரைதல்.

**2. இழிந்த கிழத்தியர் - குலத்தால் தலைவன் குலத்தினும் இழிந்த கிழத்தியர்**

அந்தணர்க்கு அரசகுலத்தினும் வணிக குலத்தினும் வேளாண் குலத்தினும் கொடுக்கப்பட்டாரும், அரசர்க்கு ஏனையிரண்டு குலத்தினும் கொடுக்கப்பட்டாரும் என்று கூறுவர்.

**3. வரையப்பட்டார் - கணிகையருள் மணந்து கொள்ளப்பட்டவர்**

செல்வராயினார் கணிகைக் குலத்தினுள்ளார்க்கும் இற்கிழமை கொடுத்து வரைந்து கோடல். அவர் கன்னியில் வரையப்பட்டாரும் அதன் பின்பு வரையப்பட்டாரும் என இருவகைப்பட்டவர். அவ்விருவரும் உரிமை பூண்டமையாற் காமக்கிழத்தியர் பாற்பட்டனர் ஆவர்.

புல்லுதலைக் கலக்கும் புலவிமாட்டும் அதாவது முதிராத புலவிமாத்திரமாகிய புணர்ச்சியையுடன் பட்ட நெஞ்சத்தாதலும், மனையகத்தோர் செய்த வினையை இகழ்ந்து கூறுதற்கண்ணும், பலவகைப் புதல்வரைக் கண்டு மிகவும் உவந்து கூறியவழியும், களவில் வருகின்ற மனையோர் செய்வினை பொறையின்றிப் பெருகிய துன்பத்தின் இடத்தும், காதற் சோர்வினாலும் ஒப்புரவுடைமை யானும் தாய் போற் கழறிப் பொருத்தப்பட்ட மனைவியைக் காய்தலின்றித் தலைமகனிடத்து பொருத்தற்கண்ணும், இனிய நகையையுடைய புதல்வனைத் தழீஇ இழையணிந்து பின்னை வந்த வாயிலின் கண்ணும், தான் மனையாளை ஒத்தலாற் தன் போல்வார் தலைவற்கு மிகையெனக் குறித்த கோளின் கண்ணும் எண்ணப்பட்ட விளையாட்டு என்று சொல்லப்பட்ட

இவற்றோடொடு பிறவும் காமக்கிழத்தியருக்கான கூற்று நிகழும் இடங்கள் ஆகும்.

மேலும், **“நச்சினார்க்கினியர் காமக்கிழத்தியரின் கூற்றுகளைப் பின்வருமாறு விளக்குகின்றார். காமக்கிழத்தியர் என்று கூறப்படுபவர் கடனறியும் வாழ்க்கையுடையராகிக் காமக்கிழமை பூண்டு இல்லறம் நிகழ்த்தும் பரத்தையர் என்றும் அவர் பலராதலிற் பன்மையாற் கூறினார். அவர் தலைவனது இளமைப் பருவத்திற்கூடி முதிர்ந்தோரும் அவன் தலை நின்று ஒழுகப்படும் இளமைப் பருவத்தோரும் இடைநிலைப் பருவத்தோரும் காமஞ்சாலா இளமையோருமெனப் பல பகுதியார், இவரைக் கண்ணிய காமக்கிழத்திய ரெனவே கண்ணாத காமக்கிழத்தியரும் உளராயிற்று என்று கூறுகின்றார். அவர் கூத்தும் பாட்டும் உடையராகி வருஞ் சேரிப்பரத்தையருங் குலத்தின்கண் இழிந்தோரும் அடியரும் வினைவல பாங்கினரும் பிறருமாம். இனிக் காமக்கிழத்தியரைப் பார்ப்பார்க்கும் பார்ப்பனியை ஒழிந்த மூவரும், அனையோர்க்குத் தன் குலத்தல்லாதோரும் வரைந்து கொள்ளும் பரத்தையருமென்று பொருளுரைப்பாரும் உளர். அவர் சிறப்புடைத் தலைவியரொடு பரத்தையரையுங் கூட்டிக் காமக்கிழத்தியர் என்று ஆசிரியர் சூத்திரஞ் செய்யின் மயங்கக் கூறலென்னும் குற்றம் தங்குமாதலின் அன்றியுஞ் சான்றோர் பலரும் காமக்கிழத்தியரைப் பரத்தையராகத் தோற்றுவாய் செய்தும் கூறுவர்”**[78] என்று விளக்குகின்றார்.

தொல்காப்பியர் ஆண்மக்களுடைய இல்லத்தை விட்டுப் பிரிதல் நிகழ்ச்சியில் ‘பரத்தையர் பிரிவு’ ஒன்று என்றும்,

**“பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே”**[79]

என்று கூறுகின்றார்.

**பரத்தையர் வாழ்க்கை**

**“பரத்தையர் ஏழிசை யாழை வாசிக்கும் இன்னிசைக் கலையில் சிறந்திருந்தனர். அவர்கள் தன் கூந்தலின் வெண்ணிறப் பூக்களை அணிந்து கொள்வர். வெளியூர் மற்றும் உள்ளூரில் இருப்பவரும் தம் அழகை விரும்பி வருபவருடன் சேர்ந்து இருப்பர். அவ்வாறு இருக்கும்போது (புணர்ந்த புணர்ச்சியால்) குலைந்த ஒப்பனையைச் சீர்செய்து கொள்வர். தம்மை அடுத்தவரும் செல்வரை வஞ்சனையுடைய பொய் வார்த்தையால் முதலிற் கூட்டிக் கொண்டு, நுண்ணிய பூண்கேளாடு கூடிய அவர்தம் மார்பைத் தம் மார்பிலே வடுப்படும் படியாகத் தழுவிக் கொள்வர். வண்டு பூவில் தேனை உண்டு நீங்குவது போல் பொருள் பெற்ற பின் அவரைத் திருப்பிப் பாரார். பழுத்த மரத்தைத் தேடி அலையும் பறவைபோல, மேலும் பொருள் தரும் பிறரை நாடித் தம்முயிரைப் பாதுகாக்கின்ற பரத்தமை வாழ்க்கையிலே திளைத்து நின்றனர். தம்மைக் கண்டாரை நெஞ்சக் காமத்தால் வருத்த முறச் செய்வித்து அவர்பால் உள்ள பொருள்களைக் கொள்ளை கொள்ளுதலின் இவரை ‘நெஞ்சு நடுக்குறூப கொண்டி மகளிர்”[80]** என்று சுட்டப்படுகிறது.

**பரத்தையின் பண்புநலன்கள்**

**“மன்னர்களால் போரில் சிறைப்பிடிக்கப்பட்ட பெண்கள் மன்னர்களின் ஆடம்பரப் பொருட்களாகக் கொள்ளப்பட்டனர். இத்தகைய பெண்கள் ஆணாதிக்கச் சமுதாயத்தில், அவர்களுடைய பல்வேறு தேவைகளை நிறைவேற்றப் பயன்படுத்தப்பட்டனர். சில நேரங்களில் இவர்களில் ஒருபகுதிப் பெண்கள் ஆண்களின் பாலியல் தேவைகளை நிறைவேற்றப் பரத்தையர்களாக வாழ்ந்தனர். குலமகளிரைப் பாதுகாக்கப் பரத்தையர் என்ற ஒரு பிரிவுப் பெண்கள் சமுதாயத்திற்கு வேண்டியவர்களாக இருந்தார்கள்”[81]** எனச் சில சமூகவியலாளர்கள் கருதுகின்றனர். அதாவது மனைவியாகவும், தாயாகவும், கற்பைப் பாதுகாத்துக் குல மகளிராக விளங்க, ஆணினுடைய

பாலியற் தேவைகளை நிறைவேற்றப் பரத்தையர் வாழ்ந்தனர். இத்தகைய பரத்தையர்கள் பற்றிய செய்திகளும், அவர்களிடம் ஆடவர்கள் சென்றதால் அவர்கள் மனைவியர் இல்லற வாழ்க்கையில் அடைந்த ஈடில்லாத் துன்ப நிலைகளும் சங்கப் பாடல்கள் பலவற்றின் பாடுபொருள்களாக ஆகியுள்ளன.

மிக உயர்ந்த வாழ்வறங்களைப் பேசுகின்ற சங்க இலக்கியத்தில் பரத்தையின் ஊடாட்டம் களங்கமாகவும், குறையாகவும் உள்ளது. இலக்கியக் கவர்ச்சிக்காகப் படைக்கப்பட்ட பாத்திரமே பரத்தை என்பர். வாழ்க்கையில் இல்லாத ஒன்று இலக்கியத்தில் இடம் பெற முடியாது என்றும் கூறலாம்.

பரத்தையர்கள் பல்வேறு பெயர்களில் அழைக்கப்பட்டனர். கொண்டி மகளிர் என்ற பெயர் ஒன்றும் உண்டு. போரில் தோல்வியுற்ற பகைவர் மனையோராய்ப் பிடித்து வரப்பட்ட மகளிர் என்று உரையாசிரியர் நச்சினார்க்கினியர் இதற்குச் சான்றளிக்கிறார். அப்பெண்கள் சமையல்காரிகளாகவும், சலவைக்காரிகளாகவும், நெல் குற்றுவோராகவும் பணியமர்த்தப்பட்டனர். இம்மகளிருள் இளமையும் அழகும் உடையார் அரசர் மற்றும் செல்வர்களின் ஆசை நாயகிகளாக ஆக்கப்பட்டனர். இதனை,

**“மழையென மருளும் மகிழ்செய் மாடத்து**

**இழையணி வரப்பினின்கை மகளிர் பல்கால்**

**போக்கில் பொலங்கல நிறையப் வாக்குபுதரத்தர”**[82]

இழையணிந்த அழகினையுடைய பாட்டாலும் கூத்தாலும் வார்த்தையாலும் அரசனுக்கு இனிய மகிழ்ச்சியைச் செய்யும் கள்ளை, மழையென்னும்படி மாடத்திடத்தே பலகாலும் ஓட்டமற்ற பொன்னாற் செய்த வட்டில்கள் நிறையத் தந்து உண்பித்தனர் என்று பொருநராற்றுப்படை அறிவிக்கிறது.

பகைவர் மனையோராய்ப் பிடித்துவரப்பட்ட இப்பெண்கள் கொண்டி மகளிர் எனப்பட்டனர். இக்கொண்டி மகளிர் பரத்தையர் ஆக்கப்பட்ட

அவலமும் நிகழ்ந்தது. 'கொண்டி மகளிர்' என்ற தொடர் பரத்தையர் என்ற பொருளில் 'பயன்பல வாங்கி வண்டிற்றுறக்கும் கொண்டி மகளிர் என்று மணிமேகலையிலும் மதுரைக்காஞ்சியிலும் கூறப்படும் செய்தி மேற்குறித்த கூற்றுக்கு அரண் செய்கிறது என்று கூறலாம்.

**பரத்தையர் குறித்த வருணனைகள்**

**கண்கள்**

**"பேர் அமர்க் கண்"**[83]

**"மைஎழில் உண்கண் மடந்தையொடு"**[84]

என்னும் பாடலடிகளில் பரத்தையின் கண்கள் வருணிக்கப்பட்டுள்ளது. பரத்தை பெரிதும் அமர்ந்த கண்களைக் கொண்டவள் என்றும் மைதீட்டப் பெற்ற ஆளை விழுங்கும் அழகிய கண்களை உடையவள் என்றும் கூறுகின்றனர்.

**தோள்கள்**

**"உழுந்துடைக் கழுந்திற் கரும்புடைப் பணைத்தோள்"**[85]

என்னும் பாடலடியில் உழுத்தங்காயை அடித்தற்குப் பயன்படும் தடியின் நுனிப்பகுதி போல இருக்கின்ற, கரும்பினைத் தொய்யிலாக எழுதப் பெற்ற பருத்தத் தோள்கள் போன்று பரத்தையின் தோள்கள் இருந்தமை புலப்படுகின்றது.

**அணிகலன்களின் தன்மை**

**"வாலிழை மகளிர்"**[86]

என்னும் பாடல் வரியில், தூய அணிகலன்களையுடைய பரத்தையர்கள் என்று அவர்களின் அணியும் அணிகலன்களின் தன்மையைக் கூறுகின்றது.

**கூந்தலின் தன்மை**

**"நெடும்பல் கூந்தல்"[87]**

**"தேம்பாய் மராஅங் கமழுங் கூந்தல்"[88]**

**"நரந்தம் நாறுங் குவையிருங் கூந்தல்"[89]**

என்னும் பாடலடிகளில், நெடிய பலவாகிய கூந்தல், வண்டுகள் பாயும் வெண் கடம்பின் பூங்கொத்துகள் கமழும் கூந்தல், நரந்தம் பூவின் மணம் கமழ்கின்ற தொகுதியாகிய கரிய கூந்தல் என்று பரத்தையின் கூந்தல் பற்றி வருணிக்கப்பட்டுள்ளது.

**பரத்தையின் துகில்**

**"அயவெள் ளாம்ப லம்பகை நெறித்தழை**

**தித்திக் குறங்கி னூழ்மா றலைப்ப**

**வருமே சேயிழை"[90]**

எனும் வரியில், நீர் நிலையில் உண்டாகிய வெள்ளிய ஆம்பலின், அழகிய மாறுபட்ட, நெறித்தலையுடைய தழையால் ஆகிய ஆடையைத் தன்னுடைய தேமல் படர்ந்த தொடையில் முறையே மாறிமாறி அசைய பரத்தை நடந்து வருகின்றாள் என்றும் தழை அலங்காரத்தால் பொலிவு பெற்றது பரத்தையரின் ஆடை என்றும் கூறுகின்றது.

**"உடுத்தும் தொடுத்தும் பூண்டுஞ் செரீஇயும்**

**தழையணிப் பொலிந்த"[91]**

என்னும் குறுந்தொகை வரிகள் கூந்தலை உடையாக உடுத்திக் கொண்டும், மாலையாகக் கோத்து அணிந்து கொண்டும், குழை முதலிய அணிகலங்களாய்ப் பூண்டும் கூந்தலின் செருகியும் பல படித்தாகத் தழை அலங்காரம் கொண்டவள் பரத்தையர் என்று கூறுகின்றது.

**நுண்ணிய அழகு**

நெற்பொறி போலப் புன்கம்பூ மலரும் அகன்ற நீர்த்துறை அழகுறும் வண்ணம், ஒளிபொருந்திய நெற்றியினையும், மலர் அணிதற்கு தகுந்த படி குறிய பலவாய கூந்தலினையும் செருக்குடன் கூடிய பார்வை கொண்ட கண்ணினையும், முத்துவடம் அசைந்தாடும் அழகிய முலையினையும், நுண்ணிய அழகு நலத்தினையும் உடையவள் பரத்தை.

**"ஐதகல் அல்குல்"**[92]

என்று பரத்தையின் அல்குலைப் பற்றி அழகுபடக் கூறப்பட்டுள்ளதை மேற்கண்ட பாடல் வரியினால் அறியமுடிகின்றது.

**பரத்தையின் கவலை**

**"மார்புதலைக் கொண்ட மாணிழை மகளிர்**

**கவலே முற்ற வெய்துவீ ழரிப்பனி"**[93]

தலைவன் பிரிவினால் பரத்தையர் பலரும் கவலை மிகுந்து வெம்மையாகக் கண்ணீர் வடிக்கின்றனர்.

**"தண்டளிர் வெளவு மேனி**

**யொண்டொடி முன்கை யாமழப் பிரிந்தே"**[94]

என்னும் பாடல் வரிகளில், தலைவன் தன்னுடைய மாந்தளிர் அழகினைக் கவர்ந்து கொண்ட மேனியையும் ஒள்ளிய தொடியணிந்த முன்கையையும் உடைய பரத்தை அழும்படியாக தலைவன் பிரிந்து சென்றான் என்பது புலப்படுகின்றது.

**பரத்தையின் இளமைத் தோற்றம்**

**"தண்புனல் வண்ட லுய்த்தென**

**வுண்கண் சிவப்ப வழுது நின்றோளே"[95]**

என்னும் பாடல் வரிகள், பலரும் இறங்கி நீராடுகின்ற பெரிய துறையில் மலரைச் சுமந்து வந்த குளிர்ந்த நீர் அதனோடு வண்டல் மண்ணால் செய்த தன் பாவையை அடித்துச் சென்றது பார்த்து, தன் மைபூசிய கண்கள் சிவப்புறும் வண்ணம் அழுது நின்றவள் என்று பரத்தையின் பெதும்பைப் பருவத்தைப் பற்றிக் கூறுகின்றன.

**பரத்தையின் சூள்**

**"ஆதி மந்தி பேதுற் றினையச்**

**சிறைபறைந் துரைஇச் செங்குணக் கொழுகும்**

**அந்தண் காவிரி போலக்**

**கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின் யானே"[96]**

என்னும் பாடலடிகள், ஆட்டனத்தி ஆடல் கலையில் வல்லவன். அவனைக் காவிரியாறு தன் திரைக் கையால் கவர்ந்து கொண்டது போல நானும் சூளினை மேற்கொண்டு தலைவனைக் கைப்பற்றிக் கொள்ளுதலை எண்ணியுள்ளேன் என்றும், தலைவனின் பெண்டிர் காணும்படி அவனின் மாலையைப் பற்றுவேன் என்றும், கூந்தலாகிய கயிற்றினால் கட்டி அவன் மார்பினைச் சிறைப்படுத்துவேன் என்றும் கூறுகின்றாள். அவ்வாறு செய்யவில்லையெனில் ஈட்டி என்பவனின் பொருள் பிறரால் அறியப்படாது அழிதல் போல என்னுடைய அழகும் துன்புற்று அழியட்டும் என்றும் கூறுகின்றாள் பரத்தை.

**"தண்பெரும் பவ்வ மணங்குக தோழி"[97]**

என்னும் பாடல் வரியில், வாளை மீனின் தலையீற்றுப் பெடை ஆதலின் அதனால் இரை தேட இயலவில்லை. அதற்கு இரை இருக்கும் இடத்திலேயே கிடைத்தது. அதுபோல தலைவனும் தானே வலியச் சென்ற எங்களை நுகர்ந்தானேயன்றி நாங்கள் அவனை மனையாட்டியிடமிருந்து பிரிக்கவில்லை. அப்படி எங்கள் மீது தவறு இருந்தால் தெய்வம் தண்டிக்கட்டும் என்று சூள் உரைக்கின்றாள் பரத்தை.

**தலைவியை எள்ளுதல்**

**"ஒளிறுவாட் டானைக் கொற்றச் செழியன்**

**வெளிறில் கற்பின் மாண்டமர் அடுதொறும்**

**களிறுபெறு வல்சிப் பாணன் எறியும்**

**தண்ணுமைக் கண்ணின் அலைஇயர் தன்வயிறே"[98]**

என்னும் பாடலில் தலைவி தன்னைப் பழி கூறியதனால், வெற்றி பொருந்திய பாண்டியன் தன்னுடைய வெற்றியின் காரணமாகப் பாணனுக்கு பரிசில் அளிப்பான். அத்தகு பரிசில் பெறும் பாணனின் அடிக்கும் மத்தளத்தினைப் போல், அவள் தன் வயிற்றிலே அறைந்து கொள்ளுமாறு, அவள் வாழும் மனையருகே சென்று வளையல்கள் ஒலிக்க, கைகளை வீசி உலாவிவிட்டு வருவேன் என்று கூறுகின்றாள். மேலும்,

**"யாண ரூரநின்மனையோள்**

**யாரையும் புலக்கு மெம்மைமற் றெவனோ"[99]**

தலைவி எத்தகையோரையும் வெறுத்துக் கூறும் இயல்புடையவள் என்று கேட்டுள்ளேன். அவ்வாறிருக்க எம்மைப் புலத்தலில் வியப்பில்லை என்று தலைவியை எள்ளுகின்றாள் பரத்தை.

**“சீர்கெழு மடந்தை ஈரிமை பொருந்த**

**நள்ளென் கங்குற் கள்வன் போல**

**அகன்துறை யூரனும் வந்தனன்”[100]**

என்னும் பாடலில், தலைவிக்கு மகன் பிறந்ததனால் அவனைக் காணும் நோக்கத்தில் அகன்ற நீர்த்துறையையுடைய ஊரன் இடையாமத்து இருளிலே கள்வனைப் போன்று சென்றான் என்று எள்ளி நகையாடுகின்றாள் பரத்தை.

## பரத்தையின் கட்டளை

தலைவனிடம் நான் உன்னோடு புனலாட விழைந்தேன். அவ்வாறு புனல் ஆட வேண்டுமெனில் நீ உன் மனைக்குச் செல்வதைத் தவிர்க்க வேண்டும் என்றும், உன் தலைவியோடு புனல் ஆடுதலைத் தவிர்க்க வேண்டும் என்றும் பரத்தை கட்டளை இடுகின்றாள்.

**“நின்னொடு தண்புன லாடுது**

**மெம்மொடு சென்மோ செல்லனின் மனையே”[101]**

என்னும் வரிகள் அவளின் கட்டளையிடும் தன்மையை விளக்குகின்றன.

## பரத்தையின் ஊடல் தன்மை

தான் கூறுவதைத் தலைவன் பொய் என்று கூறுகின்றான். அவன் செய்த சூளும் பொய்யாகவே இருக்கும் என்று எண்ணி அவனைப் போ என்று கூறுகின்றாள். பின்பு தலைவனுடைய பணிமொழிகளால் உள்ளம் நெகிழ்ந்தவளாய் ஊடல் தீர்கின்றாள்.

**“ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்**

**தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து**

**வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்**

**வஞ்சி அன்னவென் நலந்தந்து சென்மே"[102]**

என்னும் பாடலில் மனையோள் உன்னை கவர்ந்து சென்று விடுவாளோ என்று அஞ்சுகின்றேன். ஆரிய மன்னர்கள் அலறும்படி அவர்களைத் தாக்கி பழைமைச் சிறப்பும், பெரும்புகழும் கொண்ட இமயமலையின் மீது விற்கொடியைப் பொறித்து, வஞ்சினப் பெருவேந்தரைப் பிணித்துக் கொண்டு வந்த சேரனது வஞ்சிமா நகரைப் போன்ற வளமான என் மேனி நலத்தினை என்னிடம் தந்து விட்டு போ என்று ஊடல் கொள்ளுகின்றாள் பரத்தை என்பதை இதன் மூலம் அறியமுடிகின்றது.

## பரத்தையின் நம்பிக்கை உணர்வு

தலைவன் தன் விரும்பத்தக்க முலைகளைத் தன் மார்போடு நன்கு பொருந்துமாறு அணைத்துப் பின் தம்மிடமிருந்து பிரிந்து சென்றான். தன் பருத்த தோள்கள் மெலியுமாறு பிரிந்து சென்றான். அவன் பிரிந்தவன் அல்லன். மீண்டும் நம்மை வந்து சேர்வான். தன்மீது கொண்ட இன்பத்தினை அவனால் எளிதில் மறக்க முடியாது. ஆதலால் மீண்டும் வருவான் என்று கூறுகின்றாள் பரத்தை.

**"திருந்திழைப் பணைத்தோண் நெகிழப்**

**பிரிந்தன னாயினும் பிரியலன் மன்னே"[103]**

என்ற வரிகள் இதற்கு சான்றாக அமைகின்றன. மேலும்,

தலைவன் உலகியல் பற்றியே தன் இல்லத்திற்குச் சென்றுள்ளான். கெண்டை மீன்கள் தம்மீது பாய்தலினால் மலர்ந்து வண்டுகளைப் பிணித்துக் கொள்ளும் ஆம்பல் மலர்கள் நிறைந்த நாட்டின் தலைவன். ஆதலால் மீண்டும் என்னுடைய மனைக்குத் தலைவன் வருவான் என்று கூறுகின்றாள் பரத்தை.

**பரத்தை தலைவனை எள்ளுதல்**

> **“என்னை நயந்தனெ னென்றிநின்**
>
> **மனையோள் கேட்கின் வருந்துவள் பெரிதே”[104]**

என்னும் பாடலடிகள், பரத்தை தலைவனிடம் நீ என்னை விரும்புவதாகக் கூறுகின்றாய். அவ்வாறு நீ கூறுவதனைத் தலைவி கேட்டால் பெரிதும் வருந்துவாள் என்று பரத்தை கூறுகின்றாள். இவ்வாறு தலைவனை எள்ளி நகையாடுகின்றாள் பரத்தை.

**பரத்தையின் கோபம்**

தலைவனை இழிவான சொற்கள் கொண்டு இகழ்ந்து பேசினாள்.. தன் சிவந்த அழகிய இதழினையுடைய குளிர்ச்சி பொருந்திய கண்கள் துன்புறுமாறு சினந்து பார்த்தாள். பார்த்து மணம்கமழும் குளிர்ந்த மாலையை அறுத்தெறிந்து தன் கோபத்தை வெளிக்காட்டினாள்.

> **“..........................வரினே**
>
> **சுடரொடு திரிதரு நெருஞ்சி போல**
>
> **என்னொடு திரியேன் ஆயின் வென்வேல்**
>
> **மாரி யம்பின் மழைத்தோற் சோழர்**
>
> **வில்லீண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை”[105]**

குரவை ஆடும் விழாக் காலத்து நான் சென்றால் ஞாயிறு செல்லும் திசை நோக்கியே செல்லும் நெருஞ்சிப் பூப்போல நான் செல்லும் இடமெல்லாம் என்னையே சுற்றிச் சுழலுமாறு செய்வேன் என்று கூறுகின்றாள். அவ்வாறு செய்யவில்லை என்றால் வல்லம் ஊரின் ஆரியரது படை தோற்றுச் சிதறி ஓடியது போன்று, சந்தினையுடைய எனது முன்கையில் உள்ள செறிந்த வளையல்கள் உடைந்து சிதறட்டும் என்று வெகுண்டு கூறுகின்றாள் பரத்தை.

இவ்வாறாக பரத்தையின் பண்புநலன்கள் மேற்கண்ட சான்றுகளின் வழி விளக்கப்பட்டது.

## தொகுப்புரை

**'சங்ககாலப் பெண் மாந்தர்கள்'** என்னும் இவ்இரண்டாம் இயலில் பெண் மாந்தர்களான தலைவி, தோழி, பரத்தை ஆகியவர்களின் பண்புநலன்கள் ஆராயப்பட்டுள்ளது.

தொல்காப்பியத்தில் தலைவியின் இலக்கணங்களையும் அவளின் இயல்புகளையும், அவள் கூற்று நிகழ்த்தும் இடங்களையும் களவியலிலும் கற்பியலிலும் கூறுகின்றார்.

தலைவியின் பண்புநலன்களில் அழகு பற்றிய வருணனைகளில் கண், வாய், நுதல், கூந்தல், மேனி, அல்குல் ஆகியவைகளும் இடம்பெறுகின்றன. மேலும், அவளின் ஆற்றாமைப் பண்பும், அவளின் வருத்தமும், தனிமைத் துன்பமும், வரைவு வருத்தமும் கூறப்பட்டுள்ளது.

'தலைவியின் கோபப் பண்பில்' தலைவன் பொருள் முற்றி வரும்போது அவனுடன் கூடி மகிழ்ந்த சமயத்தில் விடியலின் வருகையை உணர்த்திய சேவலிடம் கோபம் கொள்கின்றாள்.

தலைவனைத் 'தண்டாப் பரத்தை' என்று கூறி அவளின் பரத்தமையைக் கண்டு கோபம் கொள்கின்றாள். தலைவியின் எள்ளல் தன்மையில் பாணனை எள்ளி நகையாடும் தன்மை இடம்பெறுகின்றது. தலைவியின் ஏசல் தன்மையில் அவள் பரத்தையை ஏசும் தன்மையும், தலைவனை ஏசும் தன்மையும் இடம்பெறுகின்றதே ஒழிய பரத்தமை ஒழுகலாரைத் தடை செய்ய முடியவில்லை.

தலைவி தன்னலம் பாராத தன்மையை, நாட்டில் அனைத்து வளங்களும் பெருக வேண்டும் என்றும் நோய்கள் நீங்க வேண்டும் என்றும் விரும்பி வாழ்வதிலிருந்து அறிந்து கொள்ள முடிகின்றது.

தலைவி, தலைவன் தன்னை விட்டுப் பிரிந்து சென்று விடுவானோ என்ற அச்சம் கொண்டவளாக விளங்குகின்றாள். மேலும், தோழியின் பண்புநலன்களில் தோழி மதிநுட்பம் கொண்டவளாகவும், தலைவனின் பரத்தமை தன்மையை எடுத்துக் கூறி அவனை வழிப்படுத்தும் விதமாக அறிவுரை கூறுபவளாகவும் விளங்குகின்றாள்.

தோழி தலைவனின் பரத்தமை பண்பினை எள்ளி நகையாடுவதும், பரத்தையை எள்ளும் விதத்தையும் காண்கிறோம்.

தலைவியின் நிலையைத் தன் நிலையாகக் கருதும் தன்னலம் பாரா தன்மையையும் தோழியின் பண்பாக விளங்குகின்றது. தலைவனையும் தலைவியையும் தன்னால் சேர்க்க முடியவில்லையே என்று ஆற்றாமைப் பண்பும் தோழியிடம் காணப்படுகின்றது.

தலைவன் பரத்தையிடம் சென்று விட்டு மீண்டும் வந்து தலைவியிடம் சேர நினைக்கும் போது வாயில் மறுக்கும் தன்மையையும், தலைவியின் களவு வாழ்க்கையைப் பெற்றோருக்கு எடுத்துக் கூறும் அறத்தொடு நிற்றல் நிலையும், தலைவனிடம் தலைவியை விரைவில் வரைந்து கொள்ள வேண்டும் என்று கூறும் வரைவு கடாதல் நிலையும் தோழியின் பண்புநலனாக விளங்குகின்றது.

பரத்தையின் பண்பு நலன்களாக அவளின் அழகு பற்றிய வருணனைகளும், தலைவனின் பிரிவினால் தலைவியைப் போன்று பரத்தையும் கவலைக் கொள்ளும் விதமும் இடம் பெறுகின்றது.

பரத்தை மிகவும் இளமைத் தன்மை கொண்டவளாகவும் விளங்குகின்றாள். தலைவி தன்னை பழிக் கூறினாள் என்று கேள்விப்பட்டதும் தன்னை தெய்வம் தண்டிக்கட்டும் என்று சூள் செய்யும் தன்மையையும், கோபத் தன்மையையும் கொண்டவளாக விளங்குகின்றாள்.

பரத்தை, தலைவன் மற்றும் தலைவியை எள்ளும் தன்மையும் காண்கிறோம். பரத்தை தலைவனிடம் என்னோடு புனலாட வேண்டுமென்றால் தலைவி மனைக்குச் செல்ல வேண்டாம் என்று கட்டளையிடும் தன்மையைக் காண முடிகின்றது. தலைவனைக் கட்டுப்படுத்த இயலாத நிலையில் பரத்தைத் தன் இனத்தை வெளிப்படுத்தத் தயங்காத நிலையையும் அறியமுடிகின்றது.

பரத்தை தலைவனுடன் ஊடல் தன்மைக் கொண்டவளாகவும் தலைவன் மீண்டும் தன்னிடம் வருவான் என்ற நம்பிக்கை உணர்வு கொண்டவளாகவும் விளங்குகின்றாள்.

இவ்வாறாக 'சங்ககால பெண் மாந்தர்கள்' என்னும் இரண்டாம் இயல் தலைவி, தோழி, பரத்தை ஆகிய மூவர்களின் பண்பு நலன்களையும், தலைவி, தோழி சொல்லாடல்களில் பரத்தமை குறித்த பங்களிப்பையும் அறியமுடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியம், பொருள். நூ. 57.
2. மேலது, நூ. 96.
3. மேலது, நூ. 97.
4. மேலது, நூ. 106.
5. மேலது, நூ. 109.
6. மேலது, நூ. 118.
7. மேலது, நூ. 121.
8. மேலது, நூ. 145.
9. மேலது, நூ. 110.
10. மேலது, நூ. 116.
11. மேலது, நூ. 146.
12. மேலது, நூ. 157.
13. மேலது, நூ. 173.
14. மேலது, நூ. 178.
15. மேலது, நூ. 189.
16. மேலது, நூ. 150.
17. அகநானூறு, பா. 86.
18. மேலது, பா. 126.
19. நற்றிணை, பா. 250.
20. ஐங்குறுநூறு, பா. 52.
21. மேலது, பா. 72.
22. குறுந்தொகை, பா. 19.
23. நற்றிணை, பா. 250.
24. மேலது, பா. 320.
25. ஐங்குறுநூறு, பா. 35.

26. மேலது, பா. 72.

27. குறுந்தொகை, பா. 238.

28. ஐங்குறுநூறு, பா. 83.

29. கலித்தொகை, பா. 83.

30. குறுந்தொகை, பா. 35.

31. மேலது, பா. 50.

32. மேலது, பா. 171.

33. மேலது, பா. 231.

34. அகநானூறு, பா. 366.

35. குறுந்தொகை, பா. 107.

36. ஐங்குறுநூறு, பா. 66.

37. அகநானூறு, பா. 196.

38. ஐங்குறுநூறு, பா. 32.

39. அகநானூறு, பா. 56.

40. ஐங்குறுநூறு, பா. 5.

41. மேலது, பா. 157.

42. மேலது, பா. 68.

43. கலித்தொகை, பா. 89.

44. அகநானூறு, பா. 260.

45. தொல்காப்பியம், பொருள். நூ. 112.

46. மேலது, நூ. 119.

47. மேலது, நூ. 123.

48. மேலது, நூ. 124.

49. மேலது, நூ. 125.

50. மேலது, நூ. 126.

51. மேலது, நூ. 127.

52. மேலது, நூ. 148.

53. மேலது, நூ. 155.
54. மேலது, நூ. 156.
55. குறுந்தொகை, பா. 53.
56. மேலது, பா. 113.
57. அகநானூறு, பா. 316.
58. ஐங்குறுநூறு, பா. 50.
59. மேலது, பா. 45.
60. குறுந்தொகை, பா. 196.
61. ஐங்குறுநூறு, பா. 57.
62. நற்றிணை, பா. 180.
63. மேலது, பா. 230.
64. ஐங்குறுநூறு, பா. 2.
65. மேலது, பா. 6.
66. நற்றிணை, பா. 330.
67. ஐங்குறுநூறு, பா. 76.
68. அகநானூறு, பா. 346.
69. மேலது, பா. 386.
70. ஐங்குறுநூறு, பா. 28.
71. மேலது, பா. 7.
72. அகநானூறு, பா. 46.
73. மேலது, பா. 306.
74. குறுந்தொகை, பா. 354.
75. அகநானூறு, பா. 96.
76. மேலது, பா. 176.
77. தொல்காப்பியம், பொருள். நூ. 149.
78. மேலது, கற்பியல்.உரை.பக்.189.
79. மேலது, நூ. 220.

80. மதுரைக்காஞ்சி, பக்.559-560.

81. விஜயலட்சுமி.ர., தமிழக மகளிர். பக். 155.

82. பெருமாள் சாமி.வெ., சங்ககாலத் தமிழகத்தின் சமூக நிலை. பக். 77-78.

83. கலித்தொகை, பா. 74.

84. அகநானூறு, பா. 256.

85. குறுந்தொகை, பா. 384.

86. மேலது, பா. 45.

87. மேலது, பா. 384.

88. நற்றிணை, பா. 20.

89. அகநானூறு, பா. 266.

90. குறுந்தொகை, பா. 293.

91. மேலது, பா.295

92. நற்றிணை, பா. 390.

93. மேலது, பா. 30.

94. ஐங்குறுநூறு, பா. 38.

95. மேலது, பா. 69.

96. அகநானூறு, பா. 76.

97. குறுந்தொகை, பா. 164.

98. அகநானூறு, பா. 106.

99. ஐங்குறுநூறு, பா. 87.

100. நற்றிணை, பா. 40.

101. ஐங்குறுநூறு, பா. 77.

102. அகநானூறு, பா. 396

103. ஐங்குறுநூறு, பா. 39.

104. மேலது, பா. 81.

105. அகநானூறு. பா. 336.

# இயல் மூன்று

## சங்ககாலப் பரத்தமையும் பரத்தையரும்

**‘சங்ககாலப் பரத்தமையும் பரத்தையரும்’** என்னும் இவ்வியல் தலைவனின் பரத்தமை ஒழுகலாறும் பரத்தையின் செயல்பாடுகளும் என்னும் இரண்டு பகுதிகளைக் கொண்டு விளங்குகின்றது. சங்ககாலச் சமூகம் பரத்தமையை ஒரு தொழிலாக அங்கீகரித்த தன்மையைப் பார்க்க முடிகின்றது. பாலின வேற்றுமையில் பரத்தன், பரத்தையர் குறித்த நிலைப்பாட்டைக் கருத்தில் கொண்டு, இவ்வியல் பின்வரும் பகுப்புகளாகப் பிரிக்கப்பட்டு ஆராயப்படுகின்றது. அவை,

1. தலைவனின் பண்புநலன்கள்
2. தலைவனின் பரத்தமை ஒழுகலாறு
3. பரத்தையரும் திருமண உரிமையும்
4. சமூகத்தில் பரத்தையர் மதிப்பீடுகள்
5. சமூகத்தில் தலைவன் மற்றும் பரத்தையின் நிலைப்பாடு

அக்காலச் சமூகத்தில் ‘ஆண்’ என்பவன் சமூகப் படிநிலையில் உயர் நிலையிலே இருந்தான். போர்ச் சமூகமாக உருப்பெற்றிருந்த சங்கம் மற்றும் அதற்கு முன் இருந்த சமூகத்தில் ஆண் பிறப்பு உயர, உயர பெண் நிலை தாழ்வடைந்தது. அத்தாழ்வின் பெரும் வெளிப்பாடே பரத்தையர் நிலை. பரத்தையர் எனும் சொல் இல்லற வட்டத்துக்கு வெளியே இருக்கும் பெண் என்று பொருள்படும். கணவன், மனைவி, குழந்தைகள் ஒரு வட்டம் என்றால், அவ்வட்டத்துக்கு வெளியே இருக்கின்றாள் பரத்தை. நிலத்தை ஐந்து வகையாகப் பிரித்த இலக்கணக்காரர்கள், மருத நிலத்துக்கான ஒழுக்கங்களில் ஒன்றாக இந்தப் பரத்தமையைக் குறிப்பிட்டுள்ளார்கள். மேலும், ஒருதார மணமுறையானது சமுதாயத்தால் அங்கீகரிக்கப்பட்ட போது, புணர்ச்சி சுதந்திரமானது தடை செய்யப்படுகிறது. இந்நிலையில் கட்டற்ற புணர்ச்சி

சுதந்திரத்திற்குக் கட்டுப்பாடு வரும் நிலையில், அதை தன் சுய தேவைக்காக மாற்றிக் கொள்ளும் தன்மை ஆண்களிடம் வெளிப்பட்டது. தன் கழிபடர் காமவிழைவானது தடை செய்யப்படுவதை விரும்பாத ஆண்மையச் சமூகம், தன் விருப்பத்திற்கு ஏற்றவாறு சமூகத்தை உருவாக்க எண்ணியது. இதன் விளைவாக சமுதாயத்தால் ஏற்றுக்கொள்ளப்படும் வகையில் உருவானதே பரத்தையர் சமூகம். ஆண்கள் பரத்தையை நாடிச் சென்று தன் காமவேட்கையை நிறைவு செய்யும் நிலையில், எந்த விதத்திலும் தன் மனைவியால் தண்டனைக்குள்ளாவது இல்லை. மாறாக ஊடல் என்று பாசாங்கு செய்துவிட்டு, பிறகு கணவனை ஏற்றுக் கொள்ளும் தன்மையைச் சங்க இலக்கியங்களின் வழி அறியமுடிகிறது. சான்றாக,

**“இம்மை மாறி மறுமை யாயினும்**

**நீயா கியரென் கணவனை**

**யானா கியர்நின் னெஞ்சுநேர் பவளே”[1]**

தலைவனிடம் தலைவி இப்பிறப்பு மாறி, மறுபிறப்பு வருவதாயினும் நீயே என் கணவன் ஆக வேண்டும் என்றும், உன் மனம் ஒத்தவளாக நான் ஆகுவேன் என்றும் கூறுகின்றாள்.

## தொல்காப்பியத்தில் தலைவன் பற்றிய பதிவுகள்

### தலைமகன் இலக்கணம்

**“பெருமையும் உரனும் ஆடூஉ மேன”[2]**

பழிக்கும் பாவத்திற்கும் அஞ்சுதலும், வலிமையும் அறிவும் ஆண்மகனுக்கு இயல்பு என்று கூறுகின்றார் தொல்காப்பியர்.

**களவில் தலைவன் கூற்று**

**"மெய்தொட்டுப் பயிறல் பொய்பா ராட்டல்**
**இடம்பெற்றுத் தழாஅல் இடையூறு கிளத்தல்**
**நீடுநினைத் திரங்கல் கூடுத லுறுதல்**
**சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழித்**
**தீராத் தோற்றம் உளப்பட தொகைஇப்**
**பேராச் சிறப்பின் இருநான்கு கிளவியும்**
**மடல்மா கூறும் இடனுமா ருண்டே"**[3]

பெருமையும் உரனுமுடைய தலைமகன் தெளிவகப்படுத்தியது காரணமாகக் காதல் வெள்ளம் புரண்டோடத் தலைவியின் மெய்யைத் தீண்டிப் பயிறலும் தலைவியின் ஐம்பால் முதலிய கடை குழன்று சிதைவின்றேனும் அஃதுற்றதாக மருங்கு சென்று தொட்டான் என்று ஒரு காரணம் பொய்யாகப் படைத்து உரைத்துப் பாராட்டலும் பொய்பாராட்டல் காரணமாகத் தலைவியிடம் அணிமையிடம் பெற்றுத் தழுவுதலும் முதலானவை களவின்கண் தலைவன் கூற்று நிகழுமிடங்கள் ஆகும்.

**"பண்பிற் பெயர்ப்பினும் பரிவுற்று மெலியினும்**
**அன்புற்று நகினும் அவட்பெற்று மலியினும்**
**ஆற்றிடை யுறுதலும் அவ்வினைக் கியல்பே"**[4]

தலைமகளின் இளமைப்பண்பு கூறிப் பெயர்த்த வழித் தலைவன் கூறியதும், அன்பு தோன்றும் உள்ளத்துடன் நக்ககாலும், தோழி உடம்பாட்டினைப் பெற்று மகிழலும், இரட்டுற மொழிதலான் தலைமகளை இருவகைக் குறியினும் பெற்று மகிழ்தலும், தான் சேறும் ஆற்றின்கண் வருத்தமுற்றுக் கூறுதலும் தலைவன் கூற்று நிகழும் இடங்களாகும்.

**“மறைந்த ஒழுக்கத் தோரையும் நாளுந்**

**துறந்த ஒழுக்கங் கிழவற் கில்லை”[5]**

களவொழுக்கத்து முகூர்த்தமும் நாளும் துறந்தொழுகும் ஒழுக்கமும் தலைவனுக்கு இல்லை என்று கூறுகின்றார்.

**“ஆறின தருமையும் அழிதலும் அச்சமும்**

**ஊறும் உளப்பட அதனோ ரற்றே”[6]**

நெறியினது அருமையும் மனன் அழிவும் அஞ்சுதலும் இடையூறும் தலைவனிடத்து நிகழாது என்கிறார்.

## தலைவற்கு உரியதோர் இயல்பு

**“வெளிப்படை தானே கற்பினோ டொப்பினும்**

**ஞாங்கர்க் கிளந்த மூன்றுபொரு ளாக**

**வரையாது பிரிதல் கிழவோற் கில்லை”[7]**

களவு வெளிப்படுதல் கற்பினோடொப்பினும் மேற்சொல்லப்பட்ட மூன்று பொருளாக வரையாது பிரிதல் கிழவோற்கு இல்லை என்று கூறுகின்றார் தொல்காப்பியர்.

## கற்பியலில் தலைவன் பற்றிய பதிவுகள்

## தலைவன் கூற்று நிகழுமிடங்கள்

**“கரணத்தின் அமைந்து முடிந்த காலை**

**நெஞ்சுதளை அவிழ்ந்த புணர்ச்சிக் கண்ணும்**

**எஞ்சா மகிழ்ச்சி இறந்துவரு பருவத்தும்**

**அஞ்ச வந்த உரிமைக் கண்ணும்**

**நன்னெறிப் படருந் தொன்னலப் பொருளினும்**

**பெற்ற தேஎத்துப் பெருமையின் நிலைஇக்**

**குற்றஞ் சான்ற பொருளெடுத் துரைப்பினும்**

**…………………………………………………**

**பண்ணமை பகுதிமுப் பதினொரு மூன்றும்**

**எண்ணருஞ் சிறப்பிற் கிழவோன் மேன"[8]**

ஆசான் புணர்த்த காரணத்தினால் வதுவை முடிந்த பின்னும், தலைவியைத் தலைவன் கண்ணுற்றஞான்று தலைவனிடத்து உளதாகிய பெருமையும் உரனும் தலைவியிடம் உளதாகிய அச்சமும் நாணமும், மடனும் ஏதுவாக இயற்கைப் புணர்ச்சி இடையீடு பட்டுழி வேட்கை தணியாது வரைந்தெய்தும் இடத்தும் இருவரிடமும் கட்டுண்டு நின்ற நெஞ்சம் கட்டுவிடப்படுதலும். இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைவன் அலரறிவுறுக்கப்பட்டு நீங்கி வரைந் தெய்துங்காறும் புணர்ச்சி வேட்கையாற் செல்கின்ற நெஞ்சினை இருவரும் வேட்கை தேற்றாமல் தளைக்கப்பட்டதனைத் தளை என்று தலைவன் கூறலும் உண்டு. இவையல்லாத ஒழியாத மகிழ்ச்சிக்கு வருங்காலத்தும் ஏனைய தலைவனிடம் வாயிலோர் எதிரொடு கூடிப் பண்ணுதலமைந்த பகுதியினையுடைய முப்பத்தி மூன்றிடத்தும் கூற்று நிகழும் என்று கூறுகின்றார் தொல்காப்பியர்.

**தலைவனுக்கு உரியதொரு மரபு**

**"காமக் கடப்பினுள் பணிந்த கிளவி**

**காணுங் காலைக் கிழவோற் குரித்தே**

**வழிபடு கிழமை அவட்கிய லான"[9]**

மேலும்,

**"பின்முறை ஆகிய பெரும்பொருள் வதுவைத்**

**தொன்முறை மனைவி எதிர்ப்பா டாயினும்**

**இன்னிழைப் புதல்வனை வாயில்கொண்டு புகினும்**

**இறந்த துணைய கிழவோன் ஆங்கட்**

**கலங்கலு முரியன் என்மனார் புலவர்"[10]**

என்னும் நூற்பாவும் தலைவனுக்கு உரியதொரு பண்பினைக் கூறுகின்றது.

**தலைவனுக்கு உரியதொரு கிளவி**

**"தாய்போற் கழறித் தழீஇக் கோடல்**

**ஆய்மகனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப**

**கவவொடு மயங்கிய காலை யான"[11]**

இதுவுமது,

**"அவன்சோர்வு காத்தல் கடனெனப் படுதலின்**

**மகன்தா யுயர்ந் தன்னுயர் பாகுஞ்**

**செல்வன் பணிமொழி இயல்பாக லான"[12]**

தலைமகனின் சோர்வு காத்தல் தலைமகட்குக் கடனாதலால் தன் மகனுக்குத் தாயாகிய காமக்கிழத்தி உயர்வும் தன்னுயர்பாகும் என்றும், இருவருந் தலைமகன் பணிந்த மொழிகோடல் இயல்பாகும் என்றும் கூறுகின்றார்.

**தலைவனுக்கு உரியதொரு மரபு**

**"கிழவி முன்னர்த் தற்புகழ் கிளவி**

**கிழவோன் வினைவயின் உரிய என்ப"[13]**

தலைவி முன்னர் தலைவன் தன்னைப் புகழுங் கூற்று வினைவயிற் பிரியும் போது நிகழும் என்று கூறுகின்றார்.

**"துன்புறு பொழுதினும் எல்லாங் கிழவன்**

**வன்புறுத் தல்லது சேறல் இல்லை"[14]**

துன்புறு பொழுதினும் எல்லாப் பிரிவிலும் தலைவன் தலைவியை வற்புறுத்தியல்லது சேறலில்லை என்று கூறுகின்றார். மேலும்,

**“செலவிடை அழுங்கல் செல்லாமை அன்றே**

**வன்புறை குறித்தல் தவிர்ச்சி யாகும்”[15]**

தலைவன் போகக் கருதித் தவிர்தல் போகாமையன்று தலைவியை வற்புறுத்துதலைக் குறித்துத் தவிர்ந்த தவிர்ச்சியாகும் என்று கூறுகின்றார். மேலும்,

**“கிழவி நிலையே வினையிடத் துரையார்**

**வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்”[16]**

உருவு வெளிப்பாடு அதன் வினை நிகழுமிடத்து உரைக்கமாட்டார், தலைமக்கள் தமது வினை முடிந்த காலத்து விளங்கித் தோன்றும் என்று கூறுகின்றார். மேலும்,

**“பூப்பின் பிறப்பா டீராறு நாளும்**

**நீத்தகன் றுறையார் என்மனார் புலவர்**

**பரத்தையிற் பிரிந்த காலை யான”[17]**

பரத்தையர் சேரியானாலும் பூத்தோன்றி மூன்றுநாள் கழித்த பின்பு பன்னிரண்டு நாளும் நீங்குதல் அறமன்று என்று கூறுகின்றார்.

## வினைமுற்றி மீண்ட தலைவற்கு உரியதொரு மரபு

**“வினைவயின் பிரிந்தோன் மீண்டுவரு காலை**

**இடைச்சுர மருங்கில் தவிர்தல் இல்லை**

**உள்ளம் போல உற்றுழி உதவும்**

**புள்ளியற் கலிமா உடைமை யான”[18]**

என்னும் நூற்பா வினைமுற்றி மீண்ட தலைவனுக்கு உரிய மரபைக் கூறுகின்றது. இவ்வாறாகத் தொல்காப்பியத்தில் தலைவனின் பண்புகளும் ஒழுகலாறுகளும் பதிவு செய்யப்பட்டுள்ளதை அறியலாம்.

**சங்க அகப்பாடல்களில் தலைவனின் பரத்தமை ஒழுகலாறு**

**தலைவனின் காமம்**

**“நல்லறி விழந்த காமம்**

**வில்லுமிழ் கணையிற் சென்றுசேட் படவே”[19]**

வில்லாளி, குறி வைத்து எய்வதற்கு முன், வில்லின் நாணை வளைப்பான். பின் அதில் அம்பை வைத்து, வலித்து இழுப்பதற்கு முன், நாணின் விசையில், சில காலங்களில் அம்பு குறிபிழைத்து வழுவிச் சென்று விடுதலும் உண்டு. அதுபோலத் தலைவன் காமமும், தன்னுடைய நாணத்தை வீழ்த்திச் சென்றுவிட்டது என்று கூறுகின்றாள். அம்பு, மீண்டு வராத ஓர் இடத்திற்குச் சேய்மையில் சென்றது போலத் தலைவன் காமமும், பரத்தையரிடம் சென்றது என்றும் கூறுகின்றாள்.

**“மிவ்வூர் மங்கையர்த் தொகுத்தினி**

**யெவ்வூர் நின்றன்று மகிழ்நநின் றேரே”[20]**

இந்திர விழாவில் ஆடல் பாடல்களை நிகழ்த்த மங்கையர்களைத் தொகுப்பது போன்று காமம் நுகர்தல் பொருட்டு மங்கையர்களைத் தொகுத்தான். அது போதாதது என்று மேலும் மங்கையரைத் தொகுக்க தலைவனின் தேர் எவ்வூரில் நிற்கின்றது என்று கேட்கின்றாள். இது தலைவன் கட்டுப்பாடற்ற முறையில் பரத்தையர் பலரையும் நாடி, தேடி அலைந்தான் என்று கூறுகின்றது இப்பாடல். இதன் மூலம் தலைவனின் காமத்தன்மையை அறியலாம்.

**வண்டு போன்ற தலைவன்**

**"மகிழ்நன் மாண்குணம் வண்டுகொண் டனகொல்**

**வண்டின் மாண்குணம் மகிழ்நன்கொண் டான்கொல்"[21]**

வளம் நிறைந்த போது மலரை நாடிச் சென்று அதன் தேனை உறிஞ்சி அஃது தேனற்ற போது அதனை விடுத்துப் பிற மலர்களை நாடிச் செல்லும் அவ்வண்டுகள் போல தலைவனும் தான் விரும்பிய மகளிரிடம் காமம் நுகர்ந்து மேலும் பலரையும் நாடிச் செல்லும் தன்மையைக் கொண்டவனாக விளங்குகின்றான். மேலும்,

**"நெடுநீர்ப் பொய்கை நடுநாள் எய்தித்**

**தண்கமழ் புதுமலர் ஊதும்**

**வண்டென மொழிப மகனென் னாரே"[22]**

தலைவன் நள்ளிரவிலே புதிய பரத்தையரை விரும்பித் துய்ப்பவன். வண்டானது ஒரு மலரில் மட்டும் தேனை உண்ணும் இயல்புடையது அன்று. அதுபோல தலைவனும் தலைவியை மட்டுமில்லாது பிற பரத்தையருடனும் இன்பம் துய்ப்பவனாக விளங்குகின்றான் என்று கூறுகின்றாள். இவ்வாறு வண்டு போன்று விளங்குகின்றான் தலைவன்.

**தலைவனின் புனலாட்டம்**

**"ஐயவி யன்ன சிறுவீ ஞாழல்**

**செவ்வீ மருதின் செம்மலொடு தாஅய்த்**

**துறையணிந் தன்றவ ரூரே"[23]**

ஞாழலும், மருத மலர்களும் நீர் நிலையில் பரவிக்கிடப்பன கண்டு, நீர்த் துறையில் தலைவன் பரத்தையோடு புனலாடிய செயல் பலராலும் அறியப்பட்டது. மேலும்,

**“அம்ம வாழி தோழி மகிழ்நன்**

**மருதுயர்ந் தோங்கிய விரிபூம் பெருந்துறைப்**

**பெண்டிரோ டாடு மென்பதன்**

**தண்டா ரகலம் கொளவோ”[24]**

தலைவன் மருத மரங்கள் ஓங்கி வளர்ந்துள்ள பூக்கள் நிரம்பிய பெரிய துறையில் தனக்கு விருப்பமான பெண்டிரொடு புனலாடி மகிழ்வதாகப் பலர் கூறுகின்றனர். அப்போது, அவனுடைய குளிர்ந்த மாலைகள் அணிந்த மார்பை ஒவ்வொருவரும் தழுவிக் கொண்டதாகவும் கூறுகின்றனர். இவ்வாறு தலைவனின் புனலாட்டம் பற்றிக் குறிப்பிடுகின்றது.

**“அலமர லாயமோ டமர்துணை தழீஇ**

**நலமிகு புதுப்புன லாடக் கண்டோ**

**ரொருவரு மிருவரு மல்லர்**

**பலரே தெய்யவெம் மறையா தீமே”[25]**

சுழன்று திரியும் மகளிர் கூட்டத்தின் நடுவே தலைவனால் விழையப்பட்டவராய் தலைவனுக்குப் புணர் துணையாய் அமைந்த பரத்தையோடு அழகுடைய புதுப்புனலில் ஆடித் திளைத்தாய். அதனைப் பார்த்தவர் ஒருவரோ இருவரோ அல்லர் மிகப்பலர் என்று கூறுகின்றாள்.

**“கழைநிலை பெறாஅக் காவிரி நீத்தங்**

**குழைமாண் ஒள்ளிழை நீவெய் யோளொடு**

**வேழை வெண்புணை தழீஇப் பூழியர்**

**கயநா டியானையின் முகனமர்ந் தாஅங்**

**கேந்தெழில் ஆகத்துப் பூந்தார்க் குழைய**

**நெருநல் ஆடினை புனலே”[26]**

உறையூரில், ஓடக் கோலும் நிலை பெறாத காவிரியாற்றின் நீர்ப்பெருக்கில், குழை முதலான மாட்சிமையுடைய ஒளிபொருந்திய அணிகளையுடைய அவன் விரும்பின பரத்தையோடு, பூமி நாட்டாரது குளத்தினை நாடிச் சென்று நீர் விளையாடும் களிறும் பிடியும் போல முகம் இனியனாய் மிக அழகினைக் கொண்ட மார்பகத்துப் பூமாலை பொலிவழிய, நேற்று, வேழக் கரும்பாலாகிய வெண்மையான புணை தழுவிப் புனல் ஆடினான் என்று கூறுகின்றாள்.

**"கோடுற நிவந்த நீடிரும் பரப்பின்**

**அந்தீம் பாஅய்ப் புதுப்புனல் நெருநை**

**மைந்துமலி களிற்றின் தலைப்புனை தழீஇ**

**நரந்தம் நாறுங் குவையிருங் கூந்தல்**

**இளந்துணை மகளிரோடு ஈரணிக் கலைஇ**

**நீர்ப்பெயர்ந்து ஆடிய ஏந்தெழின் மழைக்கண்**

**காமங் கைம்மிகச் சிறத்தலின் நாணிழந்து**

**ஆடினை என்ப மகிழ்ந"**[27]

தலைவனே! கரையின் உச்சியைத் தொடுமளவு உயர்ச்சியையும், நீண்டு அகன்ற பெரிய பரப்பினையும், பரந்தொழுகும் அழகினையும் உடைய புதுநீர்ப் பெருக்கில், வலிமை மிகுந்த யானையைப் போல், தெப்பத்தின் தலைப்பக்கத்தைத் தழுவிக் கொண்டாய், நரந்தம் பூவின் மணம் கமழ்கின்ற தொகுதியாகிய கரிய கூந்தலையும், அழகு தங்கப் பெற்ற குளிர்ச்சி பொருந்திய கண்களையும் உடைய உனக்குத் துணையாகிய இளையமகளிருடன் நீராடுதற்குரிய அணிகளை அணிந்து கொண்டு, நீரின்கண் புடைபெயர்ந்து விளையாடிய பொழுது அவர் நின்னைப் பார்க்குந்தொறும் பார்க்குந்தொறும் நீ அவர்பால் பெருவிருப்பு கொண்டாய், மனத்தால் அடக்க முடியாத காமநோய் பெருகி மிகுந்தமையால் நாணத்தை

இழந்த நீ அம்மகளிரோடு நேற்று நீராடி மகிழ்ந்தாய் என்றும் பலரும் கூறுகின்றனர் என்று கூறுகின்றாள்.

**“இணர்ததை தண்காவின் இயன்றநின் குறிவந்தான்**

**புணர்வினிற் புகன்றாங்கே புனலாடப் பண்ணியாய்”[28]**

பூங்கொத்துக்கள் நிறைந்த குளிர்ந்த பொழிலிலே, தலைவன் செய்த குறியிடத்திற்கு வந்த பரத்தையோடு புணர்ச்சியைக் கொண்டாடி, அங்கேயே புனலாடும்படி செய்தாய் என்று காமக்கிழத்தி கூறுகின்றாள். இவ்வாறு தலைவனின் புனலாட்டம் அமைகின்றது.

**தலைவனின் பரத்தமைப் பண்பு**

**“காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி**

**வாலிழை மகளிர்த் தழீஇய சென்ற**

**மல்ல லூர னெல்லினன் பெரிதென”[29]**

வளம் பொருந்திய ஊரின் தலைவன், விரைந்து செல்வதற்கு உரிய தேரினை ஒப்பனை செய்து அதில் ஏறி, தூய அணிகலன்களையுடைய பரத்தையர்களைத் தழுவச் சென்றான். அப்பரத்தையர் சேர்க்கையை விட்டு விடியலில் துயிலெழுந்தான். அம்மகளிர்த் துய்த்த அடையாளங்கள் தன் உடம்பில் வெளிப்பட்டுத் தோன்றும்படி தன் இல்லத்தை அடைந்தான் தலைவன்.

**நாள்தோறும் புதிய புதிய பரத்தையரை விரும்புபவன்**

**“விசும்பாடு குருகிற் றோன்று மூரன்**

**புதுவோர் மேவல னாகலின்”[30]**

தலைவன் நாள்தோறும் புதிய பரத்தையரைத் தேடிச்சென்று அவர்களை நுகர்பவனாக விளங்குகின்றான்.

**“யாண ரூரநின் மாணிழை யரிவை”**[31]

நாள்தோறும் புதுப்புது வருவாயினை உடைய வளமிக்க ஊரின் தலைவன் என்று தலைவனின் பரத்தமைப் பண்பு கூறப்படுகின்றது.

**“நல்லோர் நல்லோர் நாடி**

**வதுவை யயர விரும்புதி நீயே”**[32]

அழகுடைய நல்லோர் பரத்தையர் பலரையும் நாடிச் சென்று திருமணம் செய்து கொள்வதை வழக்கமாகக் கொண்டவனாகத் தலைவன் விளங்குகின்றான்.

நாள்தோறும் புதிய புதிய பரத்தையரை விரும்பும் இயல்பினை உடையவன், பகற்பொழுது எல்லாம் பரத்தையர் மனையிலே தங்கி இருக்கின்றான் என்பதை பின்வரும் பாடல் வரிகள் விளக்குகின்றன.

**“பகலாண் டல்கினை பரத்த”**[33]

மேலும்,

**“தேர்தர வந்த தெரியிழை நெகிழ்தோள்**

**ஊர்கொள் கல்லா மகளிர் தரத்தரப்**

**பரத்தைமை தாங்கலோ விலனென வறிதுநீ”**[34]

ஆராய்ந்து அணிந்த அணிகலன்களையும், நெகிழ்ந்த தோள்களையும் உடைய ஊரே கொள்ளாத அளவுக்கு நிறைந்த பரத்தையரை ஏவலாளர் கொண்டு வந்து விடவிட, அப்பரத்தையரும் பரத்தமை ஒழுக்கத்தை நம் தலைவன்பால் மேன்மேலும் மிகுவிக்க, அவன் (தலைவன்) அதனைத் தாங்க இயலாதவனாய் உள்ளான் என தலைவனின் பண்புக் கூறப்படுகின்றது.

**“தண்துறை ஊரன் தண்டாப் பரத்தமை”**[35]

என்னும் பாடல் வரியில் தண்ணிய துறைகளை உடைய ஊரன் குறைவில்லாத பரத்தமைப் பண்பைக் கொண்டவனாக விளங்குகின்றான் என்பது புலப்படுகின்றது.

**“முழவுமுகம் புலர்ந்து முறையின் ஆடிய**
**விழவொழி களத்த பாவை போல**
**நெருநைப் புணர்ந்தோர் புதுநலம் வெளவி**
**இன்றுதரு மகளிர் மென்தோள் பெறீஇயர்**
**சென்றீ பெரும சிறக்கநின் பரத்தை”**[36]

மத்தளம் ஒலிக்கும் முறையே கூத்தை நிகழ்த்துபவளைப் போல அழகுடைய பரத்தையை நேற்றைய பொழுது புணர்ந்தான். இன்று இம்மனையில் துயில வந்திருக்கின்றான். ஆதலால் பாணன் கொணரும் புதிய பரத்தையின் தோளை அணைக்கச் செல் என்றும் உன்னோடு உன் பரத்தமையும் சிறந்து வாழட்டும் என்று கூறுகின்றாள்.

**“வயல்வெள் ஆம்பல் உருவ நெறித்தழை**
**ஐதகல் அல்குல் அணிபெறத் தைஇ**
**விழவிற் செலீஇயர் வேண்டும் மன்னோ**
**யாணர் ஊரன் காணுநன் ஆயின்**
**வரையா மையோ அரிதே வரையின்”**[37]

ஆம்பலின் அழகிய நெறிப்புடைய தழையை மென்மையாய் அகன்ற அல்குலிடத்து அழகுற உடுத்திக் கொண்டு விழாக்களத்திற்கு செல்வர். விழாக்களத்தில் புதிய பரத்தையருள் ஒருத்தி, தோற்றப் பொலிவுடன் செல்லுதலைப் புதிய வருவாயையுடைய ஊரன் கண்டால் ஏனையோரைக் காணாது இவளையே மணம் புரிவான். அன்றி அவளை விடுதலும் அவனுக்கு அரிதான ஒன்றாக இருக்கும். பரத்தையரின் தோற்றப் பொலிவும், பரத்தமை

செயல்பாடுகளும் தலைவனை ஈர்க்கவல்ல முதற்காரணியாகத் திகழ்வதை இப்பாடல் சுட்டுகின்றது. இவ்வாறாகத் தலைவனின் பரத்தமைப் பண்பு விளங்குகின்றது.

**பரத்தமை ஒழுகலாறும் தலைவியைப் புறக்கணிக்கும் பண்பும்**

**“கரைசேர் வேழம் கரும்பிற் பூக்கும்**

**துறைகே ழுரன் கொடுமை நன்று”[38]**

வேழம் கரும்புப் போல காட்சி அளிக்கும். அதுபோல தலைவன் அகத்தே அன்பும் இனிமையும் அற்றவராய் பொய்ம்மையை உடையவரும், பயனற்றவருமாகிய பரத்தையரின் புறத் தோற்றத்தால் மயங்கி தலைவியைப் புறக்கணிக்கும் தன்மைக் கொண்டவனாக விளங்குகின்றான்.

**“ஓங்குபூ வேழத்துத் தூம்புடைத் திரறகாற்**

**சிறுதொழு மகளிர் அஞ்சனம் பெய்யும்”[39]**

சிறந்த அஞ்சனத்தைப் பொற் செப்பிற் பெய்யாது இழிந்த வேழத்தண்டில் பெய்யும் சிறு தொழு மகளிர் போன்று, தலைவனும் உயர்ந்த குலமகளிரிடம் வைக்க வேண்டிய அன்பினை இழிந்த பரத்தையரிடம் வைக்கும் தன்மையை உடையவனாக விளங்குகின்றான்.

**பழிச்சொல்லுக்கு அஞ்சாதவன்**

**“அள்ள லாடிய புள்ளிக் கள்வன்**

**முள்ளி வேரளைச் செல்லு மூரன்”[40]**

சேற்றில் அளைந்த புள்ளிகளையுடைய நண்டு, வளையில் சென்று உறையும். தீயொழுக்கம் பற்றி ஊரார் சொல்லும் பழிச்சொல் பற்றிச் சிறிதும் கவலையில்லாமல் பரத்தையர் மனைக்குச் செல்பவனாக இருக்கின்றான் தலைவன் என்று தலைவனின் பண்பினை விளக்குகின்றது.

**தலைவனின் கொடுமைக் குணம்**

**"தாய்சாப் பிறக்கும் புள்ளிக் கள்வனோடு**

**பிள்ளை தின்னு முதலைத் தவனூர்**

**எய்தின னாகின்று கொல்லோ மகிழ்நன்**

**பொலந்தொடி தெளிர்ப்ப முயங்கியவர்**

**கலங்கொண்டு துறப்ப தெவன்கொ லன்னாய்"[41]**

ஓட்டின்மேல் புள்ளிகளைக் கொண்ட நண்டு, தான் பிறந்தவுடனே தன்னை ஈன்ற தாய் இறக்கும்படி செய்யும் கொடுமையை உடையது. தான் ஈன்ற பார்ப்பினையே தின்னும் பண்புடையது முதலை. அதுபோலத் தலைவனும் கொடிய பண்பினைக் கொண்டவனாக விளங்குகின்றான். தலைவன், மகளிரின் பெண்மை நலத்தை நுகர்ந்து பின் அம்மகளிரைத் துறந்து வேறு மகளிரை நாடிச் செல்லுகின்றான்.

**பண்பாடற்ற தன்மை**

**"கரந்தையஞ் செறுவிற் றுணைதுறந்து கள்வன்**

**வள்ளை மென்கா லறுக்கு மூரன்**

**எம்மும் பிறரு மறியான்"[42]**

தலைவன் நம்முடைய துன்பத்தினையும் அறியமாட்டான். அவ்வாறே பிற மகளிர் துயரத்தையும் உணராதவனாய் பண்பாடற்ற தன்னலம் ஒன்றே குறிக்கோளாகக் கொண்டவனாக விளங்குகின்றான் தலைவன்.

**அன்பில்லாத தன்மை**

**"தன்பார்ப்புத் தின்னு மன்பின் முதலையொடு**

**வெண்பூம் பொய்கைத் தவனூரென்ப"[43]**

தான் ஈன்றெடுத்த பார்ப்பினைத் தானே உண்டு பசிதீரும் அன்புணர்ச்சியற்ற முதலையையும், வெண்ணிறப் பூக்களைக் கொண்ட பொய்கைகளையும் கொண்டது தலைவனுடைய ஊர். அதனால் அவ்வூரின் தலைவனும் தன் சொல்லை மெய்யென்று தெளிந்திருப்போர் மேனியில், தன் பிரிவினால் பொன்னிறம் கொண்ட பசலையூரச் செய்பவனாக இருக்கின்றான் என்று கூறுகின்றாள்.

**தலைவனின் பரத்தமை வெளிப்பாடு**

**"காஞ்சி யூரன் கொடுமை**

**கரந்தன ளாகலி னாணிய வருமே"[44]**

உழவுத்தொழில் முடித்து மீளும்போது, காஞ்சியின் துகள்கள் தம்மீது படிந்தமை தோன்ற தம் மனைக்கண் புகுவது போலத் தலைவனும் பரத்தையர் மனையிலிருந்து இன்பம் நுகர்ந்து தம் மனைக்குத் திரும்பும்போது, அவர்களோடு புணர்ந்த அடையாளங்கள் தம் உடலில் தோன்ற வருகின்றான் தலைவன்.

**"நலத்தகை யெழிலுண்கண் நல்லார்தங் கோதையால்**

**அலைத்தபுண் வடுக்காட்டி அன்பின்றி வரினெல்லா"[45]**

**"கோடெழி லகலல்குற் கொடியன்னார் முலைமூழ்கிப்**

**பாடழி சாந்தினன் பண்பின்றி வரினெல்லா"[46]**

நலம் செறிந்த அழகிய மையுண்ட கண்ணினை உடைய பரத்தையர், தம் கோதையால் அடித்த நலத்தகையையும், நகத்தாலும், எயிற்றாலும் ஏற்படுத்திய புண்களையும், பூண்கள் பொறித்த வடுக்களையும் காட்டி வருவான். அதேபோன்று அவர்கள் முலைகளிடையே மூழ்கிக்கிடந்து, பூசின பாடழிந்த சந்தனத்தையும், பற்கள் பதிந்த சிவந்த வடுக்களையும் காட்டிக் கொண்டு வருவான் தலைவன்.

**“களிபட்டார் கமழ்கோதை கயம்பட்ட உருவின்மேற்**

**குறிபெற்றார் குரற்கூந்தற் கோடுளர்ந்த துகளினை”[47]**

உன்னோடு தலைவன் கூடிக் களித்தோர் தம் கோதை, முயக்கத்தான் மேன்மைப் பட்டு, உன் மேல் காணப்படுகின்ற கோதையையும் அதன்பின் நீ குறித்த இடத்திற்கு வந்து கூடியோருடைய கூந்தலை வாரி முடிக்க அதனால் வீழ்ந்த துகள்களையும் என்னிடம் வந்து காட்டுக என்று கூறுகின்றாள்.

**“முதிர்பூண் முலைபொருத ஏதிலாள் முச்சி**

**உதிர்துகள் உக்கநின் ஆடை யொலிப்ப**

**எதிர்வளி நின்றாய்நீ செல்”[48]**

பூணினை உடைய பரத்தையர், தம்முலை பொருந்த உன்னைத் தழுவினர். அவர்தம் உச்சியிலிருந்து படிந்த துகள்கள் உன் ஆடையிலே சிந்திக் கிடக்கின்றன. அந்தத் துகளைக் காட்டுவதற்கு எதிர்க் காற்றிலே எம்முன் வந்து நின்றான் என்று கூறுகின்றாள்.

**“செறிதொடி யுற்ற வடுவுங் குறிபொய்த்தார்**

**கூருகிர் சாடிய மார்புங் குழைந்தநின்**

**தாருந் ததர்பட்ட சாந்தமுஞ் சேரி**

**அரிமத ருண்கண்ணார் ஆராக் கவவின்**

**பரிசழிந் தியாழநின் மேனிகண் டியானுஞ்**

**செரு வொழிந்தேன் சென்றீ யினி”[49]**

புதிய பரத்தையரின் செறியுற்ற தொடிகள் அழுத்தின வடுக்களும், அவர் முயக்கத்தால் குழைத்த உன் மார்பின் மாலையும், உன்னுடைய குறியிடத்தால் பொய்க்கப்பட்ட பரத்தையர் சினந்து தம் கூரிய நகங்களால் தாம் விரும்பியாங்குச் சாடிய உன் மார்பும், கலைந்து போயிருக்கும் உன் மார்புச் சாந்தமும், சேரியிலிருந்த செவ்வரியினையும், செருக்கையும் உடைய

மையுண்ட கண்ணினை உடையாருடைய நிறையாத முயக்கத்தாலே தம் நிலைமை அழிந்து போயிருக்கும் உன் வடிவைக் கண்டேன் என்று கூறுகின்றாள். இவ்வாறாகத் தலைவனின் பரத்தமைத் தன்மை வெளிப்படுகின்றது.

**பரத்தமையின் தோற்றம்**

**"பரத்தமையின் தோற்றம் குறித்த தெளிவான செய்திகள் இன்று நமக்குக் கிடைக்கவில்லை. இந்தியாவில் பரத்தைமை பண்டைக் காலந்தொட்டு நிலவினும் அதனைப் பல்வேறு கோணங்களிலும் நோக்கி விரிவாக எழுதிய நூல்கள் மிகக் குறைவே. உலகிலேயே முதன் முதலில் பரத்தைமை குறித்து ஆய்வு செய்து நூல் எழுதியவர் பரங் டுசாலலே. இவர் பாரிஸில் 1836 ஆம் ஆண்டு டெலா புரொஸ்டிடியுசன் டலா விலா டே பாரி என்ற நூலை வெளியிட்டார்"**[50]. இவர் உளவியல், சமூகவியல், அரசியல், பொருளாதாரம் ஆகிய நோக்கில் ஆய்வு செய்து இந்நூலை எழுதியுள்ளார். **"தொடக்கக் காலத்தில் திருமணக் கட்டுப்பாடுகள் சமுதாயத்தில் நிலவாத ஒரு சூழ்நிலையில் மனிதன், எண்ணம் போனவழியில் தனக்கு ஏற்பட்ட பாலுணர்வுத் தேவைகளைத் தீர்த்துக் கொண்டான். திருமணமென்ற கட்டுப்பாடு வந்ததும், ஆடவர்களின் வேண்டிய நேரத்துப் பாலியற் தேவைகளைத் தீர்த்துக் கொள்ள என ஒரு குழுவினர் தோன்றினர்"**[51] எனலாம்.

தொடக்கத்தில் பொருளுக்காகத் தம் உடலின்பத்தை ஆடவர்களுக்கு அளித்த பரத்தையர்கள் பிற்காலத்தில் ஒரு குலமாகவே மாறிவிட்ட பின்னர், அக்குலத்தில் பிறந்தோர் அனைவரும் பரத்தையர் என்ற பெயரால் அழைக்கப்படலாயினர். பொதுமகளிர், விலை மகளிர், வரைவில் மகளிர்,பதியிலார், வேசியர் என்று பல பெயராலும் அழைக்கப்பட்டனர்.

**பரத்தையரும் திருமண உரிமையும்**

சங்க இலக்கியப் பாடல்களை உற்று நோக்கும் பொழுது உரையாசிரியர்கள் பலவகையான பரத்தையர்களைக் காட்டுவது புலப்படுகின்றது. காமக்கிழத்தி, காதற்பரத்தை, இற்பரத்தை, சேரிப்பரத்தை என பலரைக் காட்டுகின்றனர். ஆனால், இப்பரத்தையரைப் பற்றிய குறிப்பு, பாடல் வரிகளில் இடம் பெறவில்லை என்பது இங்கு நோக்கத்தக்கது. உரையாசிரியர்கள் பாடலை விளக்கும் பொழுது, தலைமகன் பல பரத்தையரை நாடிச் செல்கின்றான் என்பதனையும், அவர்களுக்குள் இருக்கும் வேறுபாட்டினையும் எடுத்துக் காட்டுகின்றனர். அதிலிருந்து காமக்கிழத்தி, காதற்பரத்தை, இற்பரத்தை இவர்கள் அனைவரையும் ஒரு வகையினராகவும், சேரிப்பரத்தை மற்றொரு வகையினராகவும் காட்டியுள்ளனர் என்று கூறலாம்.

**“காதற்பரத்தையர், சேரிப்பரத்தையர் போன்று பொதுமகள் ஆகாமல், ஒருவனுக்கே உரிமை பூண்டொழுகும் காமக்கிழத்தி என்க”**[52] என்று ஐங்குறுநூற்றில் பொ.வே.சோமசுந்தரனார், காதற்பரத்தைக்கு விளக்கம் கொடுக்கிறார். இதிலிருந்து, இக்காதற்பரத்தையர் மற்றவர்களைப் போல் இல்லாமல், ஒரு ஆணை மட்டும் சார்ந்து வாழும் இயல்புடையவர்கள் என்பது புலப்படுகிறது. ஒரு ஆணை மட்டும் சார்ந்து வாழ்வதால் இவர்கள் அவளையே திருமணம் செய்து கொள்ளவும் நேரிடுகிறது.

**“நறும்பல் கூந்தற் குறுந்தொடி மடந்தையொடு**
**வதுவை அயர்ந்தனை யென்ப அலரே”**[53]

என்ற அகநானூற்றுப் பாடலிலிருந்து, காதற்பரத்தையரைத் தலைவன் திருமணம் செய்து கொண்ட செய்தி அலராக எழுந்தது என்பதனை அறியமுடிகின்றது. மேலும், ஒரு அகநானூற்றுப் பாடல்,

**“ஒண்தொடி யாயத் துள்ளுநீ நயந்து**

**கொண்டனை யென்பவோர் குறுமகள் அதுவே”[54]**

பரத்தையருள் இளைய மகளை விரும்பித் தலைமகன் மணம் செய்து கொண்டதனை ஊரார் கூறுகின்றனர் என்றும் கூறப்படுகின்றது.

**“.................. தாழிருங் கூந்தல்**

**பிறரும் ஒருத்தியை நம்மனைத் தந்து**

**வதுவை அயர்ந்தனை யென்ப .......”[55]**

என்ற பாடலிலிருந்து பரத்தையரை வீட்டிற்கு அழைத்து வந்து திருமணம் செய்து கொள்வதும் உண்டு என்பது புலப்படுகின்றது. நற்றிணையில் வரும் ஒரு பாடலும் இதனை விளக்குவதாக அமைகின்றது.

**“......................................................**

**யாணர் ஊரநின் மாணிழை மகளிரை**

**எம்மனைத் தந்துநீ தழீஇயினும் அவர்தம்**

**புன்மனத்து உண்மையோ அரிதே அவரும்**

**பைந்தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்து**

**நன்றி சான்ற கற்போடு**

**எம்பா டாதல் அதனினும் அரிதே”[56]**

பரத்தையரை வீட்டிற்கு அழைத்து வந்து திருமணம் செய்து கொண்டாலும், அவர்கள் தலைவியைப் போல், உண்மை அன்பு காட்ட மாட்டார்கள் என்பதனை மேற்காட்டப்பட்ட நற்றிணைப் பாடல் விளக்குகின்றது.

**“........................................................**

**செறுநரும் விழையுஞ் செயிர்தீர்க் காட்சிச்**

**சிறுவர்ப் பயந்த செம்ம லோரெனப்**

**பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்**

**வாயே யாகுதல் வாய்த்தனம் தோழி**

**நிரைதார் மார்பன் நெருநல் ஒருத்தியொடு**

**வதுவை அயர்தல் வேண்டிப் புதுவதின்**

**இயன்ற அணியன் இத்தெரு இறப்போன்"**[57]

பரத்தையைத் திருமணம் செய்து கொள்வதற்குத் தம் இல்லம் வழிச் செல்லும் தலைவன், புதல்வனைக் கண்டு தயங்கி, போகாமல் நிற்கின்றான் என்ற தலைவியின் கூற்றிலிருந்து புதல்வன் பிறந்த பிறகும், பரத்தையைத் திருமணம் செய்து கொள்வதுண்டு என்பதனை உணர முடிகின்றது.

ஒரு பரத்தையை மட்டும் திருமணம் செய்து கொள்ளாமல், பல பரத்தையரைத் தலைவன் திருமணம் செய்து கொள்வதும் உண்டு என்பதனைப் பின்வரும் ஐங்குறுநூறு பாடலின் வழி அறியலாம்.

**"நறுவடி மாஅத்து விளைந்துகு தீம்பழ**

**நெடுநீர்ப் பொய்கைத் துடுமென வீழுஉம்**

**கைவண் மத்தி கழாஅ ரன்ன**

**நல்லோர் நல்லோர் நாடி**

**வதுவை யயர விரும்புதி நீயே"**[58]

என்ற பாடலிலிருந்து திருமணம் செய்து கொண்ட பரத்தையை விட்டு விட்டுப் புதிய பரத்தையைத் தலைவன் மணந்து கொண்டதை அறிய முடிகின்றது.

மேற்கூறப்பட்ட செய்தியிலிருந்து தலைவன் பரத்தையரை வதுவை அயர்தல் ஈன்ற நிலையில் திருமணம் செய்து கொள்வதுண்டு என்பதனைச் சங்க இலக்கியப் பாடல்களின் வழி அறியமுடிகின்றது. மேலும், பரத்தையர்கள் பொருளுக்காகப் பலரை நாடிச் செல்லாமல், ஒருவரோடு மட்டும் சார்ந்து வாழக் கூடிய இயல்புடையவர்களாகவும் இருந்திருக்கின்றனர் என்பதனையும் அறிய முடிகின்றது.

## சமூகத்தில் பரத்தையர் மதிப்பீடுகள்

**“ஒரு பெண்ணைச் சுட்டி அவள் பரத்தை அல்லது விபச்சாரி என்று சமூகம் நிந்திக்குமானால், அந்தப் பெண்ணின் மீது இரண்டாயிரம் ஆண்டுகளாகப் பழி, பாவம் சுமத்தப்படுகிறது என்று பொருளாகும். சமூகத்தின் அனைத்துக் கோணல்களுக்கும், வானத்தின் கீழ் நிகழும் அனைத்துக் குற்றங்களுக்கும் அவளே பொறுப்பாளியாகி விடுகிறாள். கட்டமைக்கப்பட்ட சகல ஒழுக்க வரையறைகளுக்கும் புனித ஒழுக்கலாறுகளுக்கும் எதிரான யுத்தம் தொடுக்கிற துர்தேவதையாகி விடுகிறாள். மிக நேராகவும், ஒரு ஒழுங்காகவும் சென்று கொண்டிருக்கும் சமூகத்தைத் திசை திருப்பி விடுகிறவளாகப் பரத்தை சித்திரிக்கப்படுகிறாள். இறைவனால் ஆசிர்வதிக்கப்பட்ட குடும்பம் என்கிற புனித நிறுவனத்தைக் குலைத்து பத்தினிமார்களுக்கும் பதற்றத்தையும் இடையறாது ஒழுகும் கண்ணீர் மடையைத் திறந்து விடுகிறவளாகவும் ஆகிவிடுகிறாள். அவள் பெண்ணாகி வந்த மாயப் பிசாசு, தேடி வருகிறவர்களின் பொருள்களை மாய முயக்கினால் கொண்டு செல்பவள். ஆகையால் தமிழ் இலக்கியம் அவளை மிக அதிகமான கடுஞ்சொற்களால் விமர்சித்திருக்கிறது. பொதுவாக பெண்ணை மிக அதிகமாகக் கண்டித்தவர்கள், எதிர்மறையாகவே அதிகமாக விமர்சித்தவர்கள் தமிழ் பக்தி இலக்கியப் பரப்பில் வந்த ஞானிகளே”[59]** ஆவர். குறிப்பாக சித்தர் இலக்கியங்களில் இதற்கு எண்ணற்ற சான்றாதாரங்கள் உள்ளன.

பரத்தையர் சந்தித்த பிரச்சினைகள் பல நமக்குக் கிடைக்கின்றன. பரத்தையர் பற்றிப் பரிபாடலில் சொல்லப்பட்ட கருத்தே மிக முக்கியமாகக் காணத்தக்கது. தோழிக் கூற்றாக வரும் அப்பாடல் கருத்து,

**“காமத்தை வஞ்சத்தொடும், பொய்களோடும் சேர்த்துத் தன்னை நாடும் காமுகர்களுக்கு விற்கும் விலை மகளே. எல்லோரும் கூடுவதால் தனி**

**மனிதரால் நேசிக்கப்படும் தன்மையை இழந்தவளே, பன்றிகளாகிய காமுகர்கள் நுகரும் இரண்டு உதடுகளை கொண்ட காமத் தொட்டியே பழைய படைச்சாலே எல்லோரும் பயன்படுத்தும் பொதுத்துறையே"**[60] என்று தோழி பரத்தையை இழித்துரைக்கும் தன்மை குறிப்பிடத்தக்கது.

## சமூகத்தில் தலைவன் மற்றும் பரத்தையின் நிலைப்பாடு

தலைவன், தலைவியை மட்டும் அல்லாது பல பெண்களுடன் இன்பம் துய்க்கும் தன்மையைக் கொண்டவன். தன் காம விழைவிற்காகப் பல பரத்தையருடன் தொடர்பு கொள்ளும் இயல்பினன். இத்தகைய தலைவனைச் சமூகமானது கண்டித்தது இல்லை என்று கூறலாம். பரத்தையிடம் இருந்து பிரிந்து, தலைவியை நாடிவரும் தலைவனை ஏற்றுக் கொள்ளும் நிலையைப் பெரும்பாலும் காண முடிகிறது. ஆனால் பரத்தையை மட்டும் கண்டிக்கும் நிலைமை இங்கு காணத்தக்கது. பரத்தையைத் தேடிச் சென்று இன்பம் நுகர்ந்து நீங்கிய பிறகு, பிற பரத்தையர்கள் நாடும் தலைவனை இச்சமுதாயம் ஏற்றுக் கொள்கிறது. ஆனால் இதே நிலையில் காணப்படும் பரத்தையை மட்டும் இச்சமுதாயம் இழித்துரைக்கிறது. பல்வேறு சூழ்நிலைகளில், பல்வேறு சங்கப் பாடல்களின் வழி இக்கருத்தானது பரத்தை கூற்றாகவே வெளிப்படுகிறது.

தலைவன் தான், என்னை தேடி வந்தானே தவிர நான் தலைவனை தேடிச் சென்றதில்லை எனவும், என்னை நாடிவருபவரை வரவேற்று இன்பம் நல்குவது எங்களுடைய இயல்பு எனவும் கூறுகிறாள். சமுதாயத்தில் ஆண் என்பதால் ஒரு நீதியும் பெண் என்பதால் ஒரு நீதியும் வழங்குவதைத் தெளிவாக அறியமுடிகிறது. அதிலும் பரத்தை என்றால் நீதி என்று ஒன்று இல்லாமல் அநீதி மட்டுமே நீதியாக வழங்கப்படுவதையும் அறியமுடிகிறது. இதுவே பரத்தையர் தர்மம் என்பதையும் நிலை நாட்டுகின்றது.

## தொகுப்புரை

**'சங்க காலப் பரத்தமையும் பரத்தையரும்'** என்னும் இம்மூன்றாவது இயல் தலைவனின் பண்பு நலன்கள் தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ளமை குறித்து விளக்குகின்றது.

தலைவனுக்கு இருந்த சமூக அங்கீகாரம் பற்றி ஆராயப்பட்டது. அவன் பரத்தையிடம் சென்று விட்டு வந்தாலும் அவனை ஏற்று கொள்ளும் தன்மையை நாம் காண்கிறோம். பரத்தமை ஒழுக்கம் சமூக அங்கீகாரம் பெற்றுள்ளதை உணர்ந்து கொள்ள முடிகின்றது.

தலைவனின் பரத்தமை ஒழுகலாறு என்னும் பகுதியில் தலைவனின் காமமானது வில்லிலிருந்து சென்ற அம்பு மீண்டும் வராத ஓர் இடத்திற்குச் சென்றது போன்று பரத்தையரிடம் சென்றது என்றும், அவன் தன்னுடைய தேரை எடுத்துக் கொண்டு புணர்ச்சியில் ஈடுபட மங்கையரைத் தொகுக்க செல்கின்றான் என்றும் கட்டற்ற காமம் கொண்டவனாக விளங்குவதையும் அறியமுடிகின்றது.

வண்டு போன்று ஒரு மலரை விட்டு வேறு மலரைத் தேடுபவனாகவும் நாளும் புதிய புதிய பரத்தையரை விரும்புவனாகவும் தலைவன் செயல்படுவதை விளக்குகின்றது.

தலைவனின் பரத்தமை காரணமாகத் தலைவியைப் புறக்கணிக்கும் தன்மையும் அன்பில்லாத தன்மை கொண்டவனாகவும், பழிச்சொல்லுக்கு அஞ்சாதவனாகவும் கொடுமைக் குணம் கொண்டவனாகவும் விளங்குவதை அறியமுடிகின்றது.

தலைவனின் பரத்தமைத் தன்மை வெளிப்படுமாறு பரத்தையோடு இருந்த போது அவனால் ஏற்பட்ட நகக் குறிகளோடு இல்லத்திற்கு வருகின்றான்.

பரத்தையரும் திருமண உரிமையும் என்ற பகுதியில் தலைவன் பரத்தையரைத் திருமணம் செய்து கொண்டான் என்பதும் அவன் ஒரு பரத்தையரை விடுத்து வேறொரு பரத்தையரைத் திருமணம் செய்து கொள்வதும் விளக்கப்பட்டுள்ளது.

சமூகத்தில் இருந்த பரத்தையரின் மதிப்பீடுகள் ஆராயப்பட்டுள்ளது. அவர்கள் பத்தினிமார்களுக்கு இடையறாது துன்பத்தைத் தருபவளாகவும், பெண்ணாகிய மாய பிசாசு என்றும் பல்வேறு ஞானிகளால் இழிவுப் படுத்தப்பட்டவர்களாகவும் விளங்கினார்கள் என்றும் கூறப்பட்டது.

பழி ஓரிடம், பாவம் ஓரிடம் எனும் நிலையில் தலைவனும் பரத்தையும் சித்திரிக்கப்பட்டுள்ளமை சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. சமூகத்தில் தலைவன் மற்றும் பரத்தையின் நிலைப்பாட்டில் தலைவன் எத்தகைய தவறைச் செய்தாலும் அவனை ஏற்றுக் கொள்ளுகின்ற தன்மையையும் ஒரு பெண் என்ற காரணத்தினால் அவள் செய்வது தவறு என்று கூறும் தன்மையையும் இவ்வியல் விளக்குகின்றது.

இவ்வாறாக பெண் என்ற பாலின அடிப்படையிலும் சங்ககாலப் பரத்தமையும் பரத்தையரும் என்ற இயலானது ஆராயப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. குறுந்தொகை, பா. 49.
2. தொல்காப்பியம், பொருள். நூ. 95
3. மேலது, நூ. 99.
4. மேலது, நூ. 100.
5. மேலது, நூ. 133.
6. மேலது, நூ. 134.
7. மேலது, நூ. 139.
8. மேலது, நூ. 144.
9. மேலது, நூ. 158.
10. மேலது, நூ. 170.
11. மேலது, நூ. 171.
12. மேலது, நூ. 172.
13. மேலது, நூ. 179.
14. மேலது, நூ. 182.
15. மேலது, நூ. 183.
16. மேலது, நூ. 184.
17. மேலது, நூ. 185.
18. மேலது, நூ. 192.
19. குறுந்தொகை, பா. 231.
20. ஐங்குறுநூறு, பா. 62.
21. மேலது, பா. 90.
22. நற்றிணை, பா. 290.
23. குறுந்தொகை, பா. 50.
24. ஐங்குறுநூறு, பா. 33.
25. மேலது, பா. 64.

26. அகநானூறு, பா. 6.

27. மேலது, பா. 266.

28. கலித்தொகை, பா. 69

29. குறுந்தொகை, பா. 45.

30. ஐங்குறுநூறு, பா. 17.

31. மேலது, பா. 42.

32. மேலது, பா. 61.

33. கலித்தொகை, பா. 75.

34. அகநானூறு, பா. 316.

35. நற்றிணை, பா. 280.

36. மேலது, பா. 360.

37. மேலது, பா. 390.

38. ஐங்குறுநூறு, பா. 12.

39. மேலது, பா. 16.

40. மேலது, பா. 22.

41. மேலது, பா. 24.

42. மேலது, பா. 26.

43. மேலது, பா. 41.

44. குறுந்தொகை, பா. 10.

45. கலித்தொகை, பா. 67.

46. மேலது, பா. 67.

47. மேலது, பா. 72.

48. மேலது, பா. 81.

49. மேலது, பா. 91.

50. விஜயலட்சுமி.ர., தமிழக மகளிர், பக். 156.

51. மேலது, பக். 157.

52. சோமசுந்தரனார் உரை, ஐங்குறுநூறு, பா. (4:55-59)

53. அகநானூறு, பா. 36.

54. மேலது, பா. 96.

55. மேலது, பா. 46.

56. நற்றிணை, பா. 330

57. அகநானூறு, பா. 66.

58. ஐங்குறுநூறு, பா. 61.

59. பிரபஞ்சன், தாழப் பறக்காத பரத்தையர் கொடி, பக். 157.

60. மேலது, பக். 162.

# இயல் நான்கு

# பெண்ணிய நோக்கில் பரத்தமை

## பெண்ணியம் ஓர் அறிமுகம்

பெண்ணியம் என்ற தத்துவமானது, ஆண் மேலாதிக்கத்தின் வழி வழியாய் வந்த பண்பாட்டின் அடிப்படையில், பெண்கள் தனித்துவம் பெறாமல் வாழ்ந்து கொண்டிருப்பதையும், ஆண்களின் பாலியல் தேவைக்குப் பயன்படு பொருளாகத் தள்ளப்பட்ட விதத்தையும், ஆண்களைச் சார்ந்து, அவர்களின் நலன் பேணுவதையே வாழ்வாகக் கொண்டுள்ள நிலையையும் எடுத்துரைக்கின்றது.

**“பெண்ணியம் என்ற இயக்கமானது, பெண்கள் தாமாக முடிவெடுத்து, அவர்களின் விருப்பப்படி வாழ்க்கையை நடத்திச் செல்லும் ஒரு சமூகத்தை உருவாக்குவதாகும். பெண்களிடையே பல மாற்றங்களை ஏற்படுத்தி, அவர்களின் மேற்கூறிய இலக்கை அடைய உதவும் புரட்சிகரமான செயற்பாடு உடையதாகும்”[1].**

பெண்ணியம் என்ற கோட்பாடானது, ஆண்கள் எந்த அளவு சமூக அமைப்பிலும், பொருளாதாரத்திலும், அரசியலிலும் ஈடுபட்டு உரிமை கொண்டாடுகிறார்களோ அந்த அளவுக்குப் பெண்களுக்கும் மேற்கூறிய துறைகளில் அனைத்து உரிமைகளும் வழங்கப்பட வேண்டும் என்று கூறுவதோடு, அதன் அடிப்படையில் நன்கு வரையறுக்கப்பட்ட சமூக அமைப்பை உருவாக்கித் தரவும் முயலுகிறது.

**‘பெண்ணியம்’ என்பது பெண்களின் எல்லாச் சிக்கல்களையும் புரிந்து கொண்டு, அவற்றை நீக்க முயல்வதாகும். அதன் மூலம், உலகளவில் அரசியலிலும், பண்பாட்டிலும் பொருளாதாரத்திலும் ஆன்மீகத்திலும் பெருத்த மாற்றத்தை ஏற்படுத்த முடியும் என்கிறார் சார்லட் பன்ச் (Charlotte Bunch)”[2].**

## பெண்ணிய வகைகள்

பெண்ணியக் கோட்பாடு தாம் கொண்ட கொள்கை பிடிப்பிற்கேற்ப பல்வேறு வகைகளைக் கொண்டுள்ளது. மிதவாதப் பெண்ணியம் (Liberal Feminism), தீவிரவாதப் பெண்ணியம் (Radical Feminism), சமதர்மப் பெண்ணியம் (Socialist Feminism) என்பனவற்றை அடிப்படைப் பிரிவுகளாகச் சுட்டலாம். நம் நாட்டுச் சூழலுக்கு ஏற்ப வளர்ந்த பெண்ணியக் கோட்பாடு 'இந்தியப் பெண்ணியம்' (Indian Feminism) என்று சொல்லப்படுகின்றது.

## மிதவாதப் பெண்ணியம்

பகுத்தறிவின் அடிப்படையில் தோற்றம் பெற்றது இவ்வகை. 'கடவுளுக்கு முன் எல்லா மனிதரும் சமம்' என்ற கொள்கையின் அடிப்படையில் பெண்ணுக்கும் ஆணைப் போல எல்லா நிலைகளிலும் சமத்துவம் வேண்டும் என்ற கருத்தை முன்வைத்தது மிதவாதப் பெண்ணியம். இதன் அடிப்படையில் பெண் விடுதலை, பெண் சுதந்திரம், சரிநிகர் சமானம் என்பனவற்றை இவ்வகை வற்புறுத்தியது.

**"பெண்ணை 'வீட்டைவிட்டு வெளியே வா' என்று இவ்வகைப் பெண்ணியம் கூறவில்லை. மாறாக, ஆண், பெண் உறவாடும் குடும்ப அமைப்பை இவர்கள் வரவேற்றனர். ஆனால் அக்குடும்ப அமைப்பில் பெண்ணை, 'அடிமையாக இராதே', 'சம உரிமை பெறு' என்று வற்புறுத்துகிறது. குடும்ப நிலையில் சுய சிந்தனை, சுயமுடிவெடுப்பு, சுய தேர்வு இவற்றைப் பெற்று பரஸ்பர மரியாதையுடன் தனித்துவம் உடையவளாகப் பெண் செயல்பட வற்புறுத்துகிறது[3].**

**"கணவனையே முழுவதும் சார்ந்திராமல் அவனுக்குச் சமமான உரிமைகள், பொறுப்புகள் ஆகியவற்றைப் பெறவேண்டுமென வாதாடியவர் மேரிவுல்ஸ்டன் கிராப்ட்"[4].** சொத்துரிமை அவளுக்கு வேண்டும், வாழ்வில்

திருமணம் மட்டுமே பெண்ணுக்குக் கிடைக்கக்கூடிய சுதந்திரம் என்று நினைத்துக் கொள்ளும் நிலை இருத்தல் கூடாது என்றெல்லாம் மேரிவுல்ஸ்டன் கிராப்ட் சுதந்திரச் சிந்தனையாளராய் பெண்ணுரிமைக்கான கோரிக்கைகளை ‘A Vindication of the rights of Women’ என்ற நூலின் வழி முன்வைத்தார். 1872 இல் வெளியானபோது அந்நூல் பெண்களின் உரிமைக்கான ஒரு வாதமாகவும் விமர்சனமாகவும் கருதப்பட்டது.

மிதவாதப் பெண்ணியலார் சமூக அமைப்பு முறையை குடும்ப அமைப்பை அப்படியே ஏற்றுக்கொண்டு சமூகப் பழக்க வழக்கங்களில் மாறுதல்களைக் கொண்டுவர விரும்பினர். சமூக நிறுவனங்கள், சட்டம், மனப்போக்கு, சமூக அமைப்பு ஆகியவற்றைக் குறிப்பாக குடும்ப அமைப்புப் பற்றி ஏதும் சிந்திக்கவில்லை. சட்டங்களின் தொகுதி சமூகத்தை மாற்றிவிடும் என நம்பினர். அதனால் அடிப்படையான மாற்றம் தேவையென்று உணரவில்லை.

**தீவிரவாதப் பெண்ணியம்**

‘Radical’ என்ற ஆங்கிலச் சொல்லுக்கு ‘வேர்’ (Root) என்பது பொருள். இச்சொல் லத்தின் மொழியிலிருந்து உருவான சொல்லாகும். சமுதாயத்தில் உள்ள பிரச்சனைகளின் காரணங்களை வேரிலிருந்து ஆராய்வது என்பதைக் கருத்தில் கொண்டே ‘Radical’ என்ற சொல்லைப் பெண்ணியவாதிகள் பயன்படுத்தினர். தமிழில் இதைத் ‘தீவிரவாதம்’ என்று மொழிபெயர்த்துள்ளனர். இஃது மேற்கூறிய பொருளை உணர்த்தவில்லை என்றாலும், Radical என்பதன் நேரடியான மொழிபெயர்ப்பாக அமைந்துள்ளது.

தாராளப் பெண்ணியத்திலிருந்து விலகி வந்த அமைப்பே தீவிரவாதப் பெண்ணியம். ஆணாதிக்கத்தின் பிடியிலிருந்து பல பெண் அமைப்புகளிலிருந்து பிரிந்து வந்த தீவிரவாதப் பெண்கள் அறுபதுகளில்

தங்களுக்கென்று சில அமைப்புகளைத் தோற்றுவித்துப் பெண்களின் பிரச்சனைகளை ஆராய்ந்தனர். பெண்கள் அடிமைகளாக அன்றி ஓர் உயிரியாகக் கருதப்பட வேண்டும் என்ற கருத்து அவர்களிடையே உருவானது. இக்கருத்து வலுப்பெற்று, ஆண் ஒதுக்கப்பட வேண்டியவர்கள் என்ற கருத்தாக்கம் நிலைப் பெற்றது. அதுவே தீவிரவாதப் பெண்ணியத்தின் வலுவான கொள்கையானது.

தீவிரப் பெண்ணியக்கம் தொடக்கத்தில் பெண்களின் ஒடுக்கு முறைக்கான காரணத்தையும், அதன் வேரையும் கண்டறிந்து அதை வேரறுப்பதை முக்கிய கொள்கையாகக் கொண்டிருந்தது. இவ்வியக்கத்தைச் சார்ந்த பெண்ணியவாதிகள் பெண்களுக்குப் பாலுறவில் உள்ள பங்கை எடுத்துக்காட்டிக் கண்டனம் செய்தனர். நடைமுறையில் உள்ள பால் பேதம் (Gender Discrimination) பற்றியும் ஆராயத் தொடங்கினர். மேலும் மனித சமுதாயத்தின் மறு உற்பத்திக்குக் காரணமான திருமணம் மற்றும் கட்டாயக் குடும்ப அமைப்பு, தாய்மைப் பேறு போன்றவற்றை ஆராய்ந்து இவையே பெண்களின் அடிமைத்தனத்திற்கு வித்திட்டது என்று கண்டறிந்தனர். எனவே, பாரம்பரிய திருமண முறையை, குடும்ப அமைப்பை அடியோடு ஒழிக்க வேண்டும் என்று குரல் கொடுக்கத் தொடங்கினர். இதையே தங்கள் இயக்கத்தின் மையப் பிரச்சாரமாக எடுத்துக் கொண்டு புதிய சமுதாயத்தை உருவாக்க முனைந்தனர்.

இவர்கள் மகளிருடைய துன்பங்களுக்கெல்லாம் ஆண்களே மூல காரணமானவர் என நம்பினர். அதனால் ஆணாதிக்கத்தை எதிர்ப்பதிலேயே தீவிரம் காட்டினர். ஆணின் மேலாண்மை, பெண்மை மீதான பலாத்காரம், பெண்கள் ஆண்களைச் சார்ந்திருக்கும் நிலை, பெண்களின் படங்களைக் கண்டு மகிழும் வக்ரபுத்தி ஆகிய அத்தனை வேடங்களையும் புறக்கணிக்க வேண்டுமென்று கூறியதோடு, உடனே அவர்களுக்குப் பாடம் கற்பிக்க வேண்டுமென்ற தீவிரப் போக்குடையவர்கள்.

## சமதர்மப் பெண்ணியம்

சமதர்மப் பெண்ணியம் என்பது இனம் மற்றும் பால் வேறுபாட்டை (Class and Gender discrimination) ஒழிப்பதை அடிப்படை நோக்காகக் கொண்ட இயக்கமாகும். சமதர்மத்தைச் சமுதாயத்தில் கொண்டுவர விரும்பியவர்களும், கம்யூனிசவாதிகளும், மனித உரிமை கோரும் மார்க்சியவாதிகளும், உழைப்பாளிகளும் சமதர்மப் பெண்ணியத்தின் தோற்றத்திற்கு வித்திட்டவர்களாவார்கள். எனவே இப்பெண்ணியத்தின் போக்கில் கம்யூனிச மார்க்சிய கொள்கைகளை அடையாளம் காண இயலும். பெண் விடுதலைக் கொள்கையாகவும், சமூகத்தில் வேரூன்றி உள்ள தந்தை வழிச் சமூகத்தின் மூலத்தைத் தூக்கி எறிவதைக் குறிக்கோளாகவும், தன்னலவாதிகளின் தன்னலத்தையும், ஆண், பெண் என்று பாகுபடுத்துவோரின் கொள்கைகளையும் சமூக நெறியில் ஒழிப்பதைச் செயல்பாடாகவும் கொண்டுள்ளது சமதர்மப் பெண்ணியம்.

பெண்ணியம் ஒடுக்கு முறைக்கு முதலாளித்துவமும் பொருளாதார அமைப்புமே காரணம் என்று சமதர்ம பெண்ணியவாதிகள் நம்புகின்றனர். எனவே, பொருளாதாரப் பண்பாட்டு அடிப்படையிலான முதலாளித்துவப் போக்கை இப்பெண்ணியவாதிகள் கண்டனம் செய்கின்றனர்.

சமதர்மப் பெண்ணியத்திற்கு, ப்ரெட்ரிக் எங்கல்ஸ்னுடைய ‘குடும்பம், தனிச் சொத்து ஆகியவற்றின் தோற்றம், (1884) என்ற நூல் மூலாதாரமாக விளங்குகிறது. இந்நூல் ‘ஆண் பெண் ஆகியோருக்கிடையே உள்ள உழைப்பின் அடிப்படையிலான வேறுபாடே பெண்களை அடிமைப்படுத்துகிறது என்கிறது. எங்கல்ஸ், இந்த வேறுபாட்டிற்கு முதலாளித்துவ அமைப்பும், மரபு வழிவந்த குடும்ப அமைப்பும் காரணம் என்று விளக்கியுள்ளார். அதாவது ஒருவனுக்கு ஒருத்தி என்ற திருமண அமைப்பு குடும்ப அளவிலும், முதலாளி, தொழிலாளி என்ற அமைப்பு சமூக

அளவிலும் பெண்களை அடிமைப்படுத்தியுள்ளது என்கிறார். குடும்ப அமைப்பில் பெண்கள் அடிமைகளாகவும், பிள்ளைப் பெறும் இயந்திரங்களாகவும், உரிமையற்ற நிலையில் வாழும் நிலையையும் சுட்டிக்காட்டியுள்ளார். சமதர்மப் பெண்ணியவாதிகள் பாலியலை அடிப்படையாகக் கொண்ட சமூக அமைப்பைப் பொருளாதாரப் புரட்சியின் மூலம் மாற்ற முடியும் என்று நம்புகின்றனர்.

**பெண்ணியம்**

இன்று பெரும்பான்மையோர் கையிலெடுக்கும் தலைப்புகளில் ஒன்று பெண்ணியம். ஆணுக்கு பெண் சரிநிகர் சமம் என்ற இன்றைய சூழ்நிலையிலும் கூட பெண்களைத் தாழ்வாக என்னும் நிலை உள்ளது. ஆணுக்கு நிகராக எல்லாத் துறைகளிலும் போட்டியிடும் பெண்களின் நிலையானது இன்றளவில் அதிகரித்த நிலையிலும், சில இடங்களில் ஆண்களால், பெண்கள் அடிமைப்படுத்தப்படும் தன்மையானது காணப்படுகிறது. குறிப்பாக குடும்பங்களில் பெண்களின் சமஉரிமையானது கேள்விக்குறியாகவே உள்ளது.

பெண்களின் கல்வியறிவானது மிகுந்துள்ள இந்தக் காலகட்டத்திலே இப்படி என்றால், முழுக்க ஆணின் துணையை மட்டும் நம்பி வாழ்ந்த சங்க காலத்தில் பெண்களின் நிலையானது எவ்வாறு அமைந்திருக்கும் என்பது இங்கு எண்ணத்தக்கதாகும். அதிலும் சமுதாயத்தில் இழிந்த நிலையில் காணப்பட்ட பரத்தையர்களின் நிலையை சொல்லத் தேவையே இல்லை. ஆனாலும் சங்க இலக்கியங்களின் வழி பரத்தையர்களின் வாழ்வியலை அறியும்போது, குலமகளிரைக் காட்டிலும் பரத்தையர்கள் ஒருபடி மேலானவர்களாக அறியப்படுகின்றனர். குறிப்பாக, கல்வி மற்றும் கலைகளில் சிறந்தவர்களாகத் திகழ்ந்திருக்கின்றனர். ஆணின் நலத்தையே தன்னலமாகக் கொண்டு வாழ்ந்த குலமகளிரைக் காட்டிலும், தன் நலத்தை

பெரிதும் போற்றி வாழ்ந்த பரத்தையர்களின் வாழ்வானது, பெண்ணியக் கூறுகளோடு பெரிதும் ஒத்துக் காணப்படுகிறது. பிறநலத்தை பெரிதும் விரும்பும் பெண்களாக அறியப்பட்ட குலமகளிர் தன் நலத்தை ஒருபோதும் அறிந்திருக்கவில்லை.

தலைவனின் வாழ்வை தன் வாழ்வாகக் கொண்டு தலைவியானவள் வாழ்வதாக அறியப்படுகிறது. தலைவனுக்காக ஏங்குதல், தலைவனின் நலம் பேணுதல், தலைவனின் வரவை எதிர்நோக்குதல் என்று தலைவியின் செயல்கள் அனைத்தும் தலைவனின் நலத்தை பேணுவதாக அமைகிறது. ஆனால் பரத்தையர்களின் வாழ்வானது தலைவன் என்ற ஒற்றைச் சொல்லோடு நின்று விடாமல் தன் நலம் பேணுபவளாக அறியப்படுகிறாள். பண்டைய கால சமுதாயத்தில் விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகள் பரத்தையரை எவ்விதத்திலும் பாதிப்பதாக இருந்ததில்லை. மாறாக சமுதாயத்தால் பரத்தையர்கள் இழித்துரைக்கப் படும்போது, அதற்காக கூனிக்குறுகி விடாமல் தன் எதிர்ப்பைப் பதிவு செய்பவளாகப் பரத்தையர்கள் காணப்படுகின்றனர். அந்த வகையில் பரத்தையரின் செயல்பாடானது பெண்ணியக் கூறுகளோடு ஒத்துக் காணப்படுவதை அறியமுடிகிறது.

'பெண்ணிய நோக்கில் பரத்தமை' என்ற இந்த இயலானது பெண்ணியத்தை மையப்படுத்தி அமைந்திருந்தாலும், முழுக்க முழுக்க பெண்ணியக் கோட்பாடுகளின் அடிப்படையில் அமைகிறது என்று கூற இயலாது. ஏனெனில் சங்க இலக்கியங்களின் வழி அறியப்படும் பரத்தையானவள், தான் பரத்தமையில் ஈடுபட்டதற்காக வருந்தியதாக பாடல் இல்லை. மேலும், பரத்தமையில் இருந்து விடுபட்டு, குல மகளிரைப்போல் வாழ வேண்டும் என்ற எதிர்ப்புக் குரலும் இல்லை. ஆதலால் முழுமையாக பெண்ணியக் கூறுகள் கொண்டு அணுக இயலாது. ஆனாலும் பரத்தை என்பவள் தன் மீது வைக்கப்படும் விமர்சனங்களுக்கு பதிலடி கொடுக்கும் தன்மையானது, பெண்ணியக் கூறுகளோடு உள்ளதை அறியமுடிகிறது.

இவ்வாறு முழுமையான பெண்ணியத் தாக்கத்தை அறியமுடியவில்லை என்றாலும் பெண்ணியக் கூறுகள் இடம் பெற்றிருப்பதை அறியும் விதமாக இவ்வியலானது அமைகிறது.

சமூக நிறுவனங்களுள் பரத்தமைக்கு என்று தனி இடம் உண்டு. ஆணாதிக்கச் சமூகத்தில் ஆணின் தேவைக்காகவும் ஆணின் சுயநலத்திற்காகவும் உருவாக்கப்பட்டவள் பரத்தையர். சங்க இலக்கியங்களின் வழி வெகுவாக இந்தப் பரத்தமை பதிவு செய்யப்பட்டுள்ளது. தலைவன் ஒன்றிற்கு மேற்பட்ட பெண்களுடன் தொடர்பு கொண்டவன் என்பதை வெளிப்படுத்தும் விதமாக அமைகிறது. அக்காலச் சமுதாயத்தில் அங்கீகரிக்கப்பட்ட ஒன்றாகவே இந்தப் பரத்தமை காணப்படுகிறது. ஏனெனில் பிரிவு வகைகளுள் ஒன்றான பரத்தையர் பிரிவு இதற்குச் சிறந்த சான்றாக அமைகிறது. தலைவி, தோழி, நற்றாய், செவிலி முதலான பெண்கள் சமுதாயத்தில் உயர்ந்த நிலையில் காணப்பட்டனர். ஆனால் பரத்தை மட்டும் இழித்துரைக்கும் நிலையில் அறியப்படுகிறாள். ஆனாலும், பரத்தையானவள் சங்க இலக்கியங்களில் தனித்தன்மை பெற்றவளாகக் காணப்படுகிறாள்.

புணர்ச்சிச் சுதந்திரம் என்பது ஆண்களுக்கே உரித்தானது என்று இன்றளவிலும் நினைக்கும் தருணத்தில் சங்க இலக்கியங்களில் இடம்பெறும் பரத்தை கூற்றுப் பாடல்களின் வழி, புணர்ச்சிச் சுதந்திரமானது பரத்தைக்கு இயல்பாக அமைவதைக் காணமுடிகிறது. பெண்களுக்கு ஏற்படும் காமமானது அவள் நினைத்தாலும் வெளிப்படுத்த இயலாத சூழல் அன்று முதல் இன்றுவரை நிலவுகிறது. ஆனால் பரத்தையானவள் தான் விரும்பும் போதும் அல்லது பொருளுக்காகவும் யாருடனும் உறவு கொள்ளும் சூழலை அறியமுடிகிறது.

இவ்வாய்வானது பரத்தையரின் வாழ்வில் வெளிப்படும் உணர்வுகளைப் பெண்ணிய நோக்கில் அறிய முற்படுகிறது. மேலும் பரத்தையரின் அன்றைய வாழ்வை வெளிக்கொணரவும் முயல்கின்றது. பரத்தையானவள் சமுதாயத்தால் இழிந்துரைக்கும் தருணத்தில், அப்படியே ஏற்றுக்கொள்ளாமல், எதிர்த்து நிற்கும் நிலையை அறியமுடிகிறது. குறிப்பாக சினத்தை வெளிப்படுத்தும் தன்மை மற்றும் சூளுரைத்தல் முதலான செயல்கள் மூலம் அறியலாம். தன்னை இழித்துரைத்தல் யாராகினும், எதிர்ச் செயல் புரிவதில் வல்லவளாகத் திகழ்கின்றாள். இவ்வாறாக இவ்வாய்வு பரத்தமை எதிர்ப்பைப் பெண்ணிய நோக்கில் அறிய முற்படுகிறது.

**'பெண்ணிய நோக்கில் பரத்தமை'** என்ற இந்த நான்காவது இயலானது, பின்வரும் ஆறு பகுப்புகளாகப் பிரிக்கப்பட்டு ஆய்வு செய்யப்படுகிறது. அவை,

1. பரத்தை தலைவனை இகழ்ந்துரைத்தல்
2. பரத்தை தலைவியை இகழ்ந்துரைத்தல்
3. பரத்தை மற்றொரு பரத்தையை இகழ்ந்துரைத்தல்
4. பரத்தையின் சினம் வெளிப்படல்
5. பரத்தை அலருக்கு அஞ்சாதிருத்தல்
6. பரத்தையின் சூளுரை.

## பரத்தை தலைவனை இகழ்ந்துரைத்தல்

தலைவன், பரத்தையுடன் புனலாடினான் என்பதை அறிந்த தலைவி, தலைவன் மீது ஊடல் கொள்கிறாள். இதை அறிந்த தலைவன் தலைவியைத் தேற்றும் விதமாகப் பரத்தையுடன் புனலாடியது யான் அல்லேன் என்று பொய் சூளுரை வழங்குகிறான். இதை அறிந்த பரத்தை தலைவனை இகழ்ந்துரைப்பதாகக் கீழ்க்கண்ட பாடல் அமைகிறது.

**"உயிர்பலி பெறூஉம் உருகெழு தெய்வம்**

**புனையிருங் கதுப்பின் நீகடுத் தோள்வயின்**

**அனையேன் ஆயின் அணங்குக என்னென**

**மனையோள் தேற்றம் மகிழ்ந னாயின்"[5]**

தலைவன் பரத்தையுடன் புனலாடியது யான் அல்லேன் என்று கூறி, உயர்ந்த பலிகளைப் பெறும் அச்சம் தரும் வேளூர் தெய்வம், நான் தவறிழைத்திருந்தால் என்னை வருத்துவதாக என்று தலைவன் பொய் சூளுரை வழங்கி தலைவியைத் தேற்றுகிறான்.

தலைவனின் ஊரில், கள்ளானது மிகுதியாகக் கிடைக்கப் பெறுதல் இங்கு சுட்டப்படுகிறது. ஆதலால் தலைவன் மதியிழந்து பொய் சூளுரை வழங்கினான் என்று கூறுவது ஏற்புடையது. மேலும் தெய்வம் தன்னை வருத்துவதாக என்று கூறுவதால் தலைவன் தன்னை நியாயப்படுத்த எந்த நிலைக்கும் இறங்குவான் என்பது திண்ணம். மேலும், பரத்தை நேற்று நம்முடன் புனலாடியது தலைவன் இல்லை என்றால், வேறு யார் நம்முடன் புனலாடி மகிழ்ந்தது என்று தலைவனை எள்ளி நகையாடுவதாக அமைகிறது. தலைவனின் இச்செயலானது பரத்தை இகழ்ந்துரைப்பதற்கு ஏதுவாக அமைவதை அறியமுடிகிறது.

மேலும், தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையை நாடினான். தலைவி, தலைவனை இகழாமல் பரத்தையை இகழ்கிறாள். இதனை அறிந்த பரத்தை, தலைவியையும் தலைவனையும் ஒரு சேர இகழ்கிறாள். அதாவது,

**"கழனி மாத்து விளைந்துகு தீம்பழம்**

**பழன வாளை கதூஉ மூரன்**

**எம்மிற் பெருமொழி கூறித் தம்மிற்**

**கையுங் காலுந் தூக்கத் தூக்கும்**

**ஆடிப் பாவை போல**

**மேவன செய்யுந்தன் புதல்வன் றாய்க்கே"[6]**

- மாம்பழம் – தலைவன்
- வாளைமீன் – பரத்தை

தலைவன் என் இல்லம் வரும்போது என்னைப் பெருமொழி கூறி வயப்படுத்துவான். பின்னர் தம் இல்லம் செல்லும் போது, எதிர் நிற்பவர் செய்யும் செயல்களை அப்படியே செய்யும் ஆடிப்பாவை போல் எல்லாச் செயல்களையும் செய்வான். அதாவது தலைவியின் செயலுக்கு அடிபணிவான் என்பது பொருள். இங்கு பரத்தை தலைவியைப் புதல்வன் தாய் என்று அழைப்பது நினைவு கூரத்தக்கது. புதல்வனை ஈன்ற தலைவி தம் அழகினை இழந்தாள் என்று பொருள்படவும், வயது மூப்பினை எள்ளி நகையாடுவதும் வெளிப்படையாகத் தெரிகிறது.

**"ஆடிப் பாவை போல**

**மேவன செய்யுந்தன் புதல்வன் றாய்க்கே"[7]**

ஆணின் பேச்சுக்கு எதிர்ப் பேச்சு பேசாமல் வாழ்ந்த அந்த சமுதாயத்திலும், தன்னை நாடிவந்த தலைவனையும் ஊரார் அறியுமாறு எள்ளி நகையாடுவது அல்லது இகழ்ந்துரைப்பது அக்கால பரத்தையருக்கு இயல்பான ஒன்றாக அமைவதை அறியமுடிகிறது. மேலும், தலைவன் தன் விருப்பத்திற்காக எச்செயல்களையும் செய்யக்கூடியவன். தன்னை நாடிவரும் போது உன்னை என்றும் பிரியேன் என்பது, என்னைப் பிரிந்து தலைவியின்பால் செல்லும்போது என்றும் இனி உன்னைப் பிரியேன் என்று பொய்யுரை வழங்குவதிலும் வல்லவன் என்று பரத்தை, தலைவனை இகழ்ந்துரைப்பதாக அமைவதை அறியமுடிகிறது.

மேலும், தலைவன் சூள் பொய்த்தலில் வல்லவன் என்பதை மெய்ப்பிப்பதாகக் கீழ்க்கண்ட பாடல் அமைவதை அறியலாம்.

**"வல்லன் வல்லன் பொய்த்தல்"[8]**

தலைவன் தன்னை விரும்பி வாழும் பெண்டிரின் மையுண்ட கண்கள் பசப்புற்று நீர் நிறையுமாறு பொய்த்தலில் மிக மிக வல்லவனான். தான் செய்த சூளைப் மெய்ப்பித்தலை ஒரு போதும் அறியாதவன். தலைவன் ஒரு செயலில் வல்லான் என்றால் அது தன்னை நம்பினாரை வஞ்சித்து வருந்தச் செய்தலிலேயே, அன்றி வேறொன்றுமில்லை.

**"தேற்றா னுற்ற சூள்வாய்த் தல்லே"[9]**

என்று பரத்தை தலைவனின் சூள் பொய்த்தலை இகழ்ந்துரைப்பதாக மேற்கண்ட பாடல்கள் வாயிலாக அறிய முடிகிறது. தலைவன், பரத்தையின் மனையை விடுத்து தன் மனைக்குச் செல்லக் கருதினான் என அறிந்த பரத்தை கூறியது.

**"தன்சொல் லுணர்ந்தோர் அறியல னென்று"[10]**

தன் சொல்லை நம்பியோரின் அவலத்தை அவன் உணரும் அறிவில்லாதவன் எனப் பரத்தை, தலைவனை இகழ்ந்துரைக்கிறாள்.

**"தண்டளிர் வெளவு மேனி**

**யொண்டொடி முன்கை யாமழப் பிரிந்தே"[11]**

நாம் அழுதலையும் பொருட்படுத்தாமல் தன் மனைக்குத் திரும்பும் அவன் அன்பற்றவன் என்றும், அவனின் இச்செயல் அறமற்றது என்றும் பரத்தை தலைவனை இகழ்ந்துரைப்பதைத் தெளிவாக அறியமுடிகிறது.

நற்றிணைப் பாடலில் தலைவன் பரத்தையை விட்டுப் பிரிந்து தன்மனை சேர்ந்தான் என்பதை அறிந்த பரத்தை தலைவியானவள் வெறுப்படைதல் வேண்டும் என்ற நோக்கத்துடன், தலைவன் தன்னிடத்து நடந்து கொண்ட செயலை எண்ணி நகைப்பதாக அமைகிறது.

**"சினவிய முகத்துச் சினவாது சென்றுநின்**

**மனையோட்கு உரைப்பல் என்றலின்”[12]**

தண்ணிய நீர்த்துறையில், அத்துறைக்குரிய ஊரன் நெய் மணம் கமழும் என் கூந்தலைப் பற்றி என் கையில் உள்ள வெண்மையான, ஒளிமிக்க வளையைக் கழற்றிக் கொண்டதனால் உண்டாகிய பூசலில் சினம் கொண்ட முகத்தோடு அவனை நோக்கி, இனி நான் இவ்வாறு சினம் உறாது சென்று உன் மனைவிக்கு இங்கு நிகழ்ந்ததைக் கூறுவேன் என்றாள். அதற்கு அவன் ஊரின் எல்லையிலே உள்ள பல நெடிய ஆநிரைகளை விற்போரை வென்று செலுத்திக் கொண்டு வருகின்றவனும், இரவலர்க்குத் தேர் கொடுக்கும் வள்ளன்மை உடையவனுமான மலையமான் அவையில், வேற்று நாட்டிலிருந்து வந்த பெரிய இசையை உடைய கூத்தர் நன்மையை விரும்பி முழக்குகின்ற மத்தளத்தின் மார்ச்சனை வைத்த பக்கம் அதிர்வது போல அதிர்ச்சியுற்று நடுங்கினான். அவன் நடுங்கி வருத்தமுற்ற நிலையை நினைக்கும் போதெல்லாம் நான் சிரிப்பேன் என்று பரத்தையானவள் தலைவனின் அச்ச உணர்வு தோன்றுமாறு இகழ்வதை அறியமுடிகிறது.

தலைவன் பரத்தைப் பிரிவிற்காகப் பிரிந்து பிறகு தலைவியின்பால் செல்ல விழைகிறான். ஆனால் தலைவியோ தலைவனிடம் ஊடலை மேற்கொள்கிறாள். இதை அறிந்த காமக்கிழத்தி, தலைவிக்கு அறிவுறுத்துவதாக இப்பாடல் அமைகிறது.

**“நெடுநீர்ப் பொய்கை நடுநாள் எய்தித்**

**தண்கமழ் புதுமலர் ஊதும்**

**வண்டெென மொழிப மகனென் னாரே”[13]**

நெடிய நீரை உடைய பொய்கையில் நள்ளிரவில் சென்று அங்குக் குளிர்ந்ததாய் மணம் கமழும் புதிய மலரில் தேனை உண்ணுகின்ற வண்டு போன்றவன் எனக் கூறுவர். அவனை நல்ல ஆண்மகன் என்று யாரும் கூறமாட்டார்கள். ஆதலால் நீ அவனோடு ஊடுதலைத் தவிர்ப்பாயாக என்று

காமக்கிழத்தி கூறுவதாக அமைகிறது. இங்கு தலைவன் நள்ளிரவிலே புதிய பரத்தையை விரும்பித் துய்ப்பவன் என்பதால் வண்டு என்று குறிப்பிடப்படுகிறான். வண்டானது ஒரு மலரில் மட்டும் தேனை உண்ணும் இயல்புடையதன்று. அதுபோல தலைவனும் தலைவியை மட்டுமில்லாது பிற பரத்தையருடனும் இன்பம் துய்ப்பவன். ஆதலால் அவன் நல்ல ஆண்மகன் இல்லை என்று காமக்கிழத்தி கூறுதலால் தலைவனை இழிந்துரைப்பதை நம்மால் அறியமுடிகிறது.

தலைவன் பரத்தையைப் பிரிந்து தன்னில்லம் சென்றடைந்தான் என்பதை அறிந்த பரத்தை தலைவனை இகழ்ந்துரைப்பதாகக் கீழ்க்கண்ட பாடல் அமைகிறது.

**"நள்ளென் கங்குற் கள்வன் போல**

**அகன்துறை யூரனும் வந்தனன்**

**சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே"**[14]

அகன்ற நீர்த்துறையையுடைய ஊரனும் சிறந்த தந்தையின் பெயர் கொண்ட தன் மைந்தன் பிறந்தமைக்கு மகிழ்ந்து நள்ளிரவிலே கள்வனைப் போல் வந்தடைந்தான் எனப் பரத்தை தலைவனை இகழ்ந்துரைப்பதாக அமைகிறது. மேலும், தலைவன் தன் இல்லத்திற்குச் செல்வதற்கு நள்ளிரவிலே சென்றதை இங்கு கள்வனின் செயலுக்கு இணையாகக் கூறப்படுதலால் அறியமுடிகிறது.

**பரத்தை தலைவியை இகழ்ந்துரைத்தல்**

தலைவன், தம்மைப் பிரிந்து பரத்தையிடம் சென்றடைந்தான் என்பதை அறிந்த தலைவி, அது பொறுக்காதவளாய் பரத்தையை இழிந்துரைப்பதாகப் பாடல்கள் இடம்பெறுவதைக் காணமுடிகின்றது. அதுபோல் பரத்தையும் தலைவியை நகையாடும் செயலும் இங்கு காணத்தக்கது. அவ்வாறு

தலைவியை இழிந்துரைக்கும் பரத்தையின் செயல்பாட்டை இப்பாடல் சுட்டுகிறது.

**“யாண ரூரநின் மனையோள்**

**யாரையும் புலக்கு மெம்மைமற் றெவனோ”[15]**

பொதுவாக தலைவியை உயர்த்திக் கூறும் தன்மையை வெகுவாகக் காணலாம். ஆனால் இங்குப் பரத்தை, தலைவியின் செயல்பாட்டை இழிந்துரைப்பதாக அமைகிறது. அதாவது தலைவனே, உன் மனைவி நல்லவர் கெட்டவர் என வேறுபாடின்றி எத்தகையோரையும் வெறுத்துக் குறைக் கூறுவாள் என்னும் செய்தி ஊரறிந்தது. அவ்வாறு இருக்க தன் கணவனோடு உறவு கொண்டு வாழும் என்னைப் புறங்கூறினாள் என்பது வியப்பாக இல்லை என்று பரத்தை நன்மை, தீமையை ஆராய்ந்து அறியாத தலைவியின் செயல்பாட்டை இழித்துரைப்பதாக அமைகிறது.

**“அம்ம வாழி பாண வெவ்வைக்**

**கெவன்பெரி தளிக்கு மென்ப பழனத்து**

**வண்டுதா தூது மூரன்**

**பெண்டென விரும்பின் றவடன் பண்பே”[16]**

தலைவன் என் அக்காளாகிய தலைவிக்கு பெரிதும் தலையளி செய்வான் என்று கூறுவர் பலர். அஃது எதன் பொருட்டெனில், அவள் தன்னால் மணந்து கொள்ளப்பட்ட மனைவி என்பதாலும், அவள்பால் அமைந்த குடும்பப் பண்புமேயாகும். அழகும் இளமையும் கொண்டு தனக்குக் காதலின்பம் தரும் சிறப்பினாலன்று என்று கூறினாள். மேலும், ‘எவ்வை’ என்பதால் தலைவி தனக்கு அக்காள் என்ற பாசமிகுதியில் மொழிந்ததன்று, தலைவி தன்னிலும் மூத்தவள் என்று பரத்தை தலைவியின் வயது முதிர்வை இங்குக்கூறி எள்ளி நகையாடுவதைத் தெளிவாக அறியமுடிகிறது. மேலும், மற்றொரு பாடலிலும் பரத்தை தலைவியை வசைபாடுவதாக அமைகிறது.

**“மகிழ்நன் மாண்குணம் வண்டுகொண் டனகொல்**

**வண்டின் மாண்குணம் மகிழ்நன்கொண் டான்கொ**

**லன்ன தாகலு மறியா**

**ளெம்மொடு புலக்குமவன் புதல்வன் தாயே!”**[17]

இங்குத் தலைவியின் அறியாமையை இழித்துரைப்பதாக அமைவதை காணலாம். அதாவது தலைவன் இங்கு வண்டிற்கு உவமையாகக் கூறப்படுகிறான். வண்டானது ஒரு மலரின் தேன் உண்ட பிறகு, மற்ற மலர்களை நாடிச் செல்லும், அதுபோல் தலைவனும் தலைவியிடம் காமம் நுகர்ந்து, பிறகு பிற மகளிரை நாடிச்சென்று காமம் நுகர்வான் என்பதை அறியாத தலைவி என்னைக் குறைக் கூறுகின்றாள். இது அவளுடைய அறியாமையைப் புலப்படுத்துகிறது. மேலும், தலைவியைப் ‘புதல்வன் தாய்’ என்பதனால் தன்னிலும் வயதில் முதியவள் என்று இங்குக் குறிப்பாக உணர்த்தப்படுகிறது. மேலும் தலைவனைத் தன்பால் இருத்திக் கொள்ளும் தன்மையை அறியாதவளாய் தலைவி பொறுமையாய் இருந்துவிட்டு, என்னைக் குறைக் கூறினாள் என்பது அவளது அறியாமையின் செயல்பாடே அன்றி வேறொன்றுமில்லை என்று பரத்தை, தலைவியை இகழ்ந்துரைக்கும் தன்மையைத் தெளிவாக அறியமுடிகிறது.

## பரத்தை மற்றொரு பரத்தையை இகழ்ந்துரைத்தல்

தலைவன், பரத்தையிடம் இன்பம் நுகர்ந்து, பிறகு வேறு பரத்தையை நாடிச் சென்றான் என்பதை அறிந்த முற்பரத்தை சினம் கொண்டு தலைவனையும் பரத்தையையும் ஒரு சேர இகழ்வதாகக் கீழ்க்கண்ட பாடல் அமைகிறது. பொதுவாகத் திருவிழாக் காலங்களில் பரத்தையர் பெருமளவில் நகரில் வலம்வருவர். ஆனால் இப்பரத்தையானவள் திருவிழா முடிந்த பிறகு நகரில் வலம்வந்து தலைவனை அடைந்தனள் போலும் என்று ஏளனமாய் முற்பரத்தைக் கூறுவதை அறியமுடிகிறது.

**“விழவும் உழந்தன்று முழவுந் தூங்கின்று**

**எவன்குறித் தனள்கொல் என்றி யாயின்”[18]**

இளைய பரத்தை தெருவில் சென்றதைக் கண்ட ஊரார் நகைத்தனர். அது எவ்வாறு இருந்ததென்றால், போரில் ஓரியைக் கொன்ற திருமுடிக்காரி என்பான், ஓரியின் தெருவில் செல்லும்போது, காரியின் பகைவராகிய ஓரியைச் சேர்ந்த அனைவரும் ஒன்றுகூடிப் பேரிரைச்சல் இட்டதுபோல் இருந்தது. மேலும், இளைய பரத்தை வருவதைக் கண்ட குலமகளிர் தன் கொழுநனைப் பாதுகாத்து தம்வசம் பாதுகாத்துக் கொண்டனர். அவ்வாறு அவரவர் பாதுகாத்தலால் எவரும் கிடைக்காமல் இவரைக் கைப்பற்றினாள் போலும் என்று எள்ளி நகையாடுகிறாள். மேலும் மகளிரைப் பாதுகாத்தல் என்பது ஆண்மகனின் செயல். ஆனால் இங்கு ஆண்மக்களை மகளிர் பாதுகாத்தனர் என்றதனால் தலைவனையும் பரத்தை இகழ்கிறாள். எவரும் பாதுகாத்தற்கு இயலாத தலைவனை இவள் கைப்பற்றியது வியப்பேதுமில்லை என்று முற்பரத்தை, தலைவனையும் இளைய பரத்தையையும் இகழ்வதைத் தெளிவாக அறியமுடிகிறது.

## பரத்தையின் சினம் வெளிப்படல்

தலைவன், தலைவியைத் தவிர்த்து பரத்தையருடன் கூடிவாழும் செயலைச் செய்யக்கூடியவன். மேலும், ஒரு பரத்தை என்றில்லாமல் பல பரத்தையருடனும் கூடி வாழ்வான். இவ்வாறு பல பரத்தையருடன் காம வேட்கையை அனுபவிக்கும் தலைவன், பரத்தையர் பார்வையில் எள்ளல் தன்மைக்கு ஆளாகிறான். இதுவே பிறகு சினமாக உருவெடுக்கிறது. காதற்பரத்தையை விடுத்து வேறு அயற்பரத்தையை நாடிச்சென்ற தலைவன், பிறகு காதற்பரத்தையை நெருங்க பாணனைத் தூது விடுப்பதாக மேற்கண்ட பாடல் அமைகிறது.

**“நகைநன் குடையன் பாணநும் பெருமகன்**

***மிளைவலி சிதையக் களிறுபல பரப்பி***

**...................................................**

**மன்னெயில் உடையோர் போல அஃதுயாம்”[19]**

நும்தலைவன் பலராலும் நகைத்து எள்ளப்படுவதற்கு உரியனாயினான். அது எவ்வாறெனில், காவல் மதில் பலவும் சிதையுமாறு தம் யானைப்படைகளைக் கொண்டு பலப்பல அரண்களை வென்ற வலிமைமிக்க படையையுடையவன் பாண்டியன். அப்பாண்டியனை வாழ்த்தி தொழுது நிற்றலால் எஞ்சி வாழும் குறுநில மன்னர்கள், பாண்டியன் படையினால் சிறிதும் கவலையுறோம் என்று கூறுவர். அவற்றை கீழ்க்கண்ட சமன்பாட்டால் அறியலாம்.

- குறுநில மன்னர் – தலைவன்
- பாண்டியன் – பரத்தை

மேலும், தலைவன் பரத்தை சேரியிடத்தே வந்து கொண்டை மாலையையும், அழகு பொருந்திய கண்ணியையும் காட்டிப் பரத்தையோடு கூடி பிறகு பிரிந்தனன். அதனால் அப்பழியானது விடுவதற்கு உரியதாகாது. மேலும் என் அன்னை நெருங்கிய கணுக்களையுடைய மூங்கிற்கோலை கையில் கொண்டவளாய் மிகவும் சினந்த வண்ணம் உள்ளாள். ஆதலால் அவள் தலைவனைத் தண்டித்தல் உறுதி என்று பரத்தை கூறுவதை அறியமுடிகிறது. தன்னை விடுத்துச் சென்ற தலைவனை வேறுவழியின்றி ஏற்றுக் கொள்ளும் தலைவியின் மன்னிக்கும் பண்பானது பரத்தையின்பால் காணுதற்கரியது. மாறாக தலைவனைத் தண்டிக்கும் செயலை உறுதிபடக் கூறுவது இங்கு நோக்கத்தக்கது. இவ்வாறாகப் பரத்தையின் சினமானது தலைவன் இடத்தில் வெளிப்படுவதை அறியமுடிகிறது.

**பரத்தை அலருக்கு அஞ்சாதிருத்தல்**

நாகரிக உலகில் அலருக்கு என்று தனியிடம் உண்டு. அலருக்கு அலராத மனிதனே இல்லை என்னும் அளவிற்கு அலரானது மனித வாழ்வில் ஒன்றிணைந்துள்ளது எனலாம். சங்க காலம் முதல் இக்காலம் வரை அலரானது முக்கியத்துவம் பெறுகிறது. சங்க இலக்கியங்களில் இடம்பெறும் தலைவன், தலைவியின் களவு வாழ்வில் இந்த அலரானது குறிப்பிடத்தகுந்த இடத்தைப் பெறுகிறது. களவு வாழ்வில் இருந்து கற்பு வாழ்விற்குச் செல்ல அலரானது பெரும் பங்கு வகிக்கிறது. அதே வேளையில் அலருக்கு அஞ்சாதவளாய் வாழும் கதாப்பாத்திரமும் சங்க இலக்கியத்தில் உண்டு எனில் அது பரத்தை மட்டுமே ஆவாள். பொதுவாக ஊரார் தம்மை பற்றி ஏதாவது பேசி விடுவார்களோ என்று அஞ்சுவது என்பது பரத்தையிடம் காண இயலாத ஒன்று. மாறாக ஊரார் மூலம் எழும் அலரைப் பரத்தையானவள் வரவேற்பவளாகக் காணப்படுகிறாள்.

தலைவன், பரத்தையைப் புதுப்புனலாட அழைத்த போது பரத்தை கூறுவதாகக் கீழ்க்கண்ட பாடல் அமைகிறது.

**“பேரூ ரலரெழ நீரலைக் கலங்கி**

**நின்னொடு தண்புன லாடுது”**[20]

தாம் புதுப்புனல் ஆட தம்மோடு வருவதற்கு தயாராக உள்ளோம். ஆனால் அதற்கு நீ நின் மனைக்குச் செல்ல வேண்டா என்று பரத்தை, தலைவனை நோக்கி கூறுகிறாள். தலைவன் பரத்தையுடன் சேர்ந்து புனலாடும் செய்தியானது, ஊரார் மூலம் தலைவியைச் சென்றடையும். அதனால் தலைவியின் செருக்கானது அடங்கும் என்பது பரத்தையின் எண்ணம். மேலும் மற்றொரு பாடலில் தலைவன் தம்முடன் சேர்ந்து புனலாட வருமாறு பரத்தை அழைக்கிறாள். அது எத்தகையது என்றால், அணையை உடைத்துப் பாயும் வெள்ளமானது, பகைவர் மதிலைத் தன் கொம்புகளால் குத்தித் தகர்த்து

உட்புகும் யானைப்படை போல் உள்ளது என்று கூறுகின்றாள். பகைவர் யானைப் படையைத் தடுக்க இயலாததுபோல், இவ்வெள்ளத்தையும் யாராலும் தடுக்க இயலாததாக உள்ளது. அத்தகைய புதுப்புனலில் ஆடுவோம் என்று பரத்தை கூறுவதால் தலைவனை தாம் அடைய முற்படுவதை யாராலும் தலைவியாலும் தடுக்க இயலாது என்று கீழ்க்காணும் ஐங்குறுநூற்றுப் பரத்தை கூறுகிறாள். மேலும்,

**“மதில்கொல் யானையிற் கதழ்புநெறி வந்த**

**சிறையழி புதுப்புன லாடுக”**[21]

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடலில், தன் நெறியிலே விரைவாக வந்த வெள்ளமானது பரத்தைக்கு உவமையாகக் கூறப்படுகிறது. பரத்தையும் அவளுக்குரிய நெறியிலே வந்துள்ளதாக இங்குச் சுட்டப்படுகிறது. தலைவியுடன் நீ புனலாடலைத் தவிர்ப்பாயாக என்று குறிப்பால் பரத்தை உணர்த்துவதாக மேற்கண்ட பாடலானது அமைகிறது. இவ்வாறாகப் பரத்தையானவள் தலைவனுடன் புதுப்புனல் ஆடும்போது எழும் அலரைப்பற்றி சிறிதும் அஞ்சாதவளாய் காணப்பெறுகிறாள். காரணம் தலைவனோடு தான் கொண்ட தொடர்பு வெளியுலகில் தெரியும்போது தன் மதிப்பு ஏனைய பரத்தையரிடையே மிகும் என்பதும் ஒரு காரணமாகலாம்.

## பரத்தையின் சூளுரை

சங்க இலக்கியத்தில் இடம் பெறும் பாடல்களில், சூளுரைத்தல் என்பது வெகுவாக இடம்பெறுவதைக் காணமுடிகிறது. இந்தச் செயலானது புறப்பாடல்களில் மட்டுமல்லாது அகப்பாடல்களில் விரவி காணப்படுகிறது. குறிப்பாக பரத்தை கூற்றுப் பாடல்களில் சூளுரைத்தல் என்பது சிறப்பானதாக அமைகிறது. தலைவன் பரத்தையர் பிரிவை மேற்கொண்டு, பரத்தையின் இல்லத்திலேயே தங்கியதை அறிந்த தலைவி, தலைவனை இகழாமல் மாறாகப் பரத்தையை இகழ்ந்து புறங்கூறுகிறாள். இதனை அறிந்த பரத்தை

சினம் கொண்டவளாய், தலைவியை நோக்கி, நான் ஒருபோதும் தலைவனை நோக்கிச் சென்றதில்லை. தலைவனே தன்னை நாடி வந்தான். இதை அறியாமல், நீ என்னைப் புறங்கூறுகின்றாய் என்றும், என்னைப் பழிப்பதை நீ நிறுத்திக் கொள்ளாவிட்டால் தலைவனை எந்தக் காலத்திலும் நீ சேராதவாறு என்னுடனே இருத்திக் கொள்வேன் என்றும் பரத்தையானவள் தலைவி அஞ்சுமாறு சூளுரை செய்கிறாள். பரத்தையின் பல்வேறு சூளுரைகளின் வேறுபட்ட நிலைகளைக் கீழ்க்கண்ட பாடல்களின் வழி அறியலாம்.

தலைவன், பரத்தையின் அழகில் விரும்பி, அவளின் இல்லத்திலேயே தங்கினான் என்பதை அறிந்த தலைவி, பரத்தையை இழித்துரைக்கிறாள். இதை அறிந்த பரத்தை சினம் கொண்டவளாய் தலைவியை நோக்கிச் சூளுரைப்பதாகக் கீழ்க்கண்ட பாடல் அமைகிறது.

**“கச்சினன் கழலினன் தேந்தார் மார்பினன்**

**வகையமைப் பொலிந்த வனப்பமை தெரியல்**

**சுரியலம் பொருநனைக் காண்டி ரோலென**

**ஆதி மந்தி பேதுற் றினையச்**

**சிறைபறைந் துரைஇச் செங்குணக் கொழுகும்**

**அந்தண் காவிரி போலக்**

**கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின் யானே”**[22]

ஆட்டனத்தி கச்சினையும், கழலினையும், தார் அணிந்த மார்பினையும் உடையவன். சுருண்ட தலைமயிரினையுடைய ஆடல் வல்லவனான அவனைக் கண்டிரோ என வினவி, அவன் காதலியாகிய ஆதிமந்தி பெரிதும் மயங்கி வருந்துமாறு, அணை கடந்து கரை மோதி நேர் கிழக்கே பரந்தோடும் அழகிய குளிர்ந்த காவிரியாறு அவன் கணவனாகிய ஆட்டனத்தியைத் தன் திரைக் கையால் கவர்ந்து கொண்டது போல நானும் தலைவனைக் கைப்பற்ற

எண்ணியுள்ளேன் என்று பரத்தை, தன்னை வசையாடிய தலைவியை நோக்கிச் சூளுரைப்பதாக அமைகிறது. மேலும் மற்றொரு பாடலில்,

**“ஒளிறுவாட் டானைக் கொற்றச் செழியன்**

**வெளிறில் கற்பின் மாண்டமர் அடுதொறும்**

**களிறுபெறு வல்சிப் பாணன் எறியும்**

**தண்ணுமைக் கண்ணின் அலைஇயர் தன் வயிறே”**[23]

என்னும் இப்பாடலடிகளில், தலைவன் பரத்தையுடன் இருப்பதை அறிந்த தலைவி, இருவரையும் வெறுத்துப் பேசினாள். இதை அறிந்த பரத்தை, தலைவியை நோக்கி, சூளுரைப்பதாக அமைகிறது. அதாவது தலைவி குறை கூறுமளவிற்கு நாம் எதையும் செய்யவில்லை. ஆதலால் அவள் கூறும் பழியை ஏற்க இயலாது. தலைவியின் இச்செயலானது கண்டிக்கத்தக்கது. எனவே அதை உணர்த்தும் விதமாக, வெற்றி பொருந்திய பாண்டியன் வாட்படையினையும், படைக்கலப் பயிற்சியையும் கொண்டு, போரில் வெல்லக்கூடியவன். இதனால் பரிசில் பெறும் பாணன், தான் அடிக்கும் மத்தளத்தின் கண்போலும், தலைவியானவள் தன்வயிற்றில் அறைந்து கொள்ளுமாறு செய்வேன். மேலும் அவள் வருந்துமாறு அவள் வாழும் மனையிடத்தே நின்று உலவி வருவோம் என்று பரத்தை சூளுரைக்கிறாள்.

தலைவி தன்மேல் பழி கூறினாள் என்பதை அறிந்த பரத்தை, அது பொறுக்காதவளாய், இனி யாது நிகழ்ந்தாலும் கவலையில்லை என்று கூறித் தலைவியை எச்சரிப்பதாகப் பின்வரும் பாடல் அமைகிறது.

**“மல்லல் யாணர்ச் செல்லிக் கோமான்**

**எறிவிடத் துலையாச் செறிசுரை வெள்வேல்**

**ஆதன் எழினி யருநிறத் தழுத்திய**

**பெருங்களிற்று எவ்வம் போல**

**வருந்துவர் மாதவர் சேரியாஞ் செலினே"[24]**

மிகுந்த வளத்தினையும், புதிய வருவாயினையும் உடைய செல்லூர் மன்னனாகிய ஆதன் எழினி என்பவன், பகைவர் மீது எறியுமிடத்துச் சுரையிற் செறிக்கப் பெற்ற பழுதுபடாத வெண்மையான வேலினைத் தனது அரிய மார்பில் பாய்ச்சப்பெற்ற பெருங்களிறானது அடையும் துன்பம் எவ்வாறு பெரிதோ, அதே போல் தன்னை இகழ்ந்து பேசிய தலைவியின் துன்பமும் பெரியதாக அமையும் என்று பரத்தை சபிக்கிறாள்.

தலைவி தன்னைப் பழித்தாள் என்பதை அறிந்த பரத்தை, அவள் செருக்கு அடங்க 'யான் இன்னது செய்வேன்' என்று சூள் உரைக்கின்றாள்.

**"வருகதில் அம்மஎஞ் சேரி சேர**

**அரிவேய் உண்கண் அவன்பெண்டிர் காணத்**

**தாரும் தரனையும் பற்றி ஆரியர்**

**பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போலத்**

**தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்**

**மார்புகடி கொள்ளே னாயின் ஆர்வுற்று**

**இரந்தோர்க் கீயாது ஈட்டியோன் பொருள்போல்**

**பரந்து வெளிப்படா தாகி**

**வருந்துக தில்லயாய் ஓம்பிய நலனே"[25]**

தலைவன் எம் சேரிக்கு வந்தால், அவன் பெண்டிர் காணுமாறு அவன் சூடியுள்ள மாலையைப் பற்றுவேன். அவன் தப்பிப் போகாதபடித் தாழ்ந்து கிடக்கும் அவன் ஆடையைப் பற்றிக் கொள்வேன், ஆரியர் பழக்கி வைத்துள்ள பெண்யானை தான் பழகிக் கொண்டு வந்து தரும் ஆண் யானை போல, என் தோளே கட்டும் தறியாகக் கொண்டு, என் கூந்தலாகிய கயிற்றினால் கட்டி அவனுடைய மார்பினைச் சிறைப்படுத்துவேன். அவ்வாறு

நான் செய்யவில்லை என்றால், பொருள்மீது பற்றுக் கொண்டு இரந்தார்க்கு அவன் வேண்டியதைக் கொடுத்து உதவாத ஈட்டியோன் செல்வமானது பிறரால் அறியப்படாமல் அழிதல் போல, என்தாய் பேணிப் பாதுகாத்து வளர்த்த என் அழகும் பிறர் அறிய வெளிப்படாது இருந்து துன்புற்று அழிவதாக என்று பரத்தை சூளுரைக்கின்றாள்.

தலைவன் புதிய பரத்தையை நாடிச் சென்றான் என்பதை அறிந்த இற்பரத்தை. அப்புதிய பரத்தையை வசைப்பாடுகிறாள். இதை அறிந்த புதிய பரத்தை இற்பரத்தையை இகழ்ந்து சூளுரைப்பதாக அமைகிறது.

**"பாகன் நெடிதுயிர் வாழ்தல் காய்சினக்**
**கொல்களிற் றியானை நல்கல் மாறே**
**தாமும் பிறரும் உளர்போற் சேறல்**
**முழவிமிழ் துணங்கை தூங்கும் விழவின்**
**யானவன் வாரா மாறே வரினே**
**சுடரொடு திரிதரு நெருஞ்சி போல**
**என்னொடு திரியேன் ஆயின் வென்வேல்**
**மாரி யம்பின் மழைத்தோற் சோழர்**
**வில்லீண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை**
**ஆரியர் படையின் உடைகவென்**
**நேரிறை முன்கை வீங்கிய வளையே"[26]**

பாகன் நீண்ட நாள் உயிர் வாழ்வதற்குக் காரணம் சினம் மிக்க கொல்லும் தொழிலையுடைய யானை அவனைக் கொல்லாது விட்டு வைத்திருப்பதே ஆகும். அதுபோல் அப்பெண்டிரும் பிறரும் பெண்மை நலம் வாய்ந்தவர் போல் என்னை திட்டிவிட்டு தலைவனிடம் செல்லுவதற்குக் காரணம், முழவு ஒலிக்கக் குரவை ஆடும் விழாக் காலத்தே நான் அவ்விடத்துச் செல்லாததே

ஆகும். நானும் என் அழகு நலம் காட்டி அவ்விடத்துச் சென்றால் ஞாயிறு செல்லும் திசை நோக்கியே செல்லும் நெருஞ்சிப் பூப்போல நான் செல்லும் இடமெல்லாம் என்னையே சுற்றி சுழலுமாறு அத்தலைவனைச் செய்திடுவேன். அவ்வாறு செய்யவில்லையெனில், வலிமை மிக்க சோழர் படையின், வில்லாற்றலுக்கு அஞ்சி ஊரின் புறத்தேயுள்ள காவற்காட்டின்கண் வந்தடைந்த ஆரியரது படை தோற்றுச் சிதறி ஓடியது போல, என் முன்கையில் உள்ள செறிந்த வளையல்கள் உடைந்து சிதறுவதாக என்று சூளுரைக்கின்றாள். மேலும், மற்றொரு பாடலில் பரத்தையரின் சூளுரையானது வெளிப்படுவதை இங்கு அறியலாம்.

**“வணங்கிறைப் பணைத்தோ ளெல்வளை மகளிர்**

**துணங்கை நாளும் வந்தன வவ்வரைக்**

**கண்பொர மற்றதன் கண்ணவர்**

**மணங்கொளற் கிவரும் மள்ளர் போரே”[27]**

வேறு ஒரு பரத்தை தன்னைப் புறங்கூறினாள் என்பதை அறிந்த இற்பரத்தை சூளுரைப்பதாக அமைகிறது. பரத்தையர் ஆடும் துணங்கை விழா நடைபெறும் நாட்கள் இப்பொழுது வந்தன. அவ்விழா நிகழும் காலத்தில் நான் அவ்விடத்தில் வந்தால், என்னுடைய கண்கள் தலைவனோடு பொருத அளவில், வீரர்களும், அப்பரத்தையும் தலைவனைக் காணாமல் தன் கண்கள் அகல விரித்து நோக்குமாறு தலைவனை அவ்விடத்தில் இருந்து கவர்ந்து செல்வேன் என்று இற்பரத்தை சூளுரைக்கின்றாள்.

## தொகுப்புரை

***'பெண்ணிய நோக்கில் பரத்தமை'*** என்ற நான்காவது இயலில் பெண்ணியம் குறித்த வரையறைகளும் பெண்ணியத்தின் வகைகளும் விளக்கப்பட்டன. மேலும், பரத்தை எவ்வாறு தன்னைத் தனித்தன்மை பெற்றவளாக வெளிப்படுத்திக் கொள்கிறாள் என்பதை அறியமுடிகிறது.

தன் மீதான இழிச்சொல்லிற்கு தக்க பதிலுரை வழுங்குவதையும், பெண் என்பவள் ஆணின் சொல்லுக்கு கட்டுப்பட்டு நடக்கும் நிலையை எதிர்ப்பவளாகவும், மேலும் ஆண்களைத் துணிவாக இகழ்ந்துரைப்பவளாகவும் விளங்குகின்றாள். தன்னை எதிர்ப்பவர் யாராக இருந்தாலும் துணிந்து எதிர்ப்பதையும் இங்குக் காணலாம். குறிப்பாக, தலைவி மற்றும் பிற பரத்தையரை எள்ளி நகையாடுவதும், இகழ்ந்துரைப்பதையும் கூறலாம்.

எந்த ஒரு நிலையிலும் தன்னை விட்டுக் கொடுக்காதவளாய், விளங்கும் தன்மையானது, அவளின் உள்ள உறுதியை வெளிப்படுத்துவதாக அமைகிறது. நினைத்ததை அடைந்தே தீருவேன் என்று சூளுரைப்பது அவளின் தனித்தன்மையை வெளிப்படுத்தும் பாங்குகளில் ஒன்றாகத் திகழ்கிறது. அச்சம் என்பது பெண்களுக்கே உரித்தானது என்று கூறுவது ஆண்களின் செயல். ஆனால் அச்சத்தை அறவே நீக்கி, அலருக்கு அஞ்சாத தன்மையையும் இங்கு நினைவுக் கூரத்தக்கது.

சங்ககாலப் பரத்தை எந்நிலையிலும் தன்னை தனித்தன்மைக் கொண்டவளாக நிலைநிறுத்தும் பாங்கைத் தெளிவாக அறியமுடிகிறது. இல்லறப் பெண்கள் சூளுரைத்ததாகச் சங்க இலக்கியத்தில் காண இயலாத சூழலில் பரத்தையின் சூளுரை அவளுக்கிருந்த மன உறுதியையும் தன்னம்பிக்கையையும் புலப்படுத்துகின்றது.

தலைவி, தோழி, நற்றாய், செவிலி முதலிய பெண் மாந்தர்கள் உயர்ந்த நிலையில் இருந்தாலும் அவர்கள் ஆண்களுக்குக் கட்டுப்பட்டுள்ள தன்மையில் உள்ளதையும், பரத்தை ஒருத்தி மட்டுமே எவருக்கும் கட்டுப்படாத தன்மையில் தனித்தன்மைப் பெற்றிருந்ததையும் தெளிவாக அறியமுடிகிறது.

## சான்றெண் விளக்கம்

1. பிரேமா.இரா., பெண்ணியம். பக். 12.
2. மேலது, பக். 13.
3. பிரேமா.இரா., பெண்ணியம் அணுகுமுறைகள். பக். 20.
4. காவ்யா சண்முகசுந்தரம்., (தொ.ஆ) பெண்ணியமும் பிரதிகளும். பக். 8.
5. அகநானூறு, பா. 166.
6. குறுந்தொகை, பா. 8
7. மேலது, பா. 8.
8. ஐங்குறுநூறு, பா. 37.
9. மேலது, பா. 37.
10. மேலது, பா. 38.
11. மேலது, பா. 38.
12. நற்றிணை, பா. 100.
13. மேலது, பா. 290.
14. மேலது, பா. 40.
15. ஐங்குறுநூறு, பா. 87.
16. மேலது, பா. 89.
17. மேலது, பா. 90.
18. நற்றிணை, பா. 320.
19. மேலது, பா. 150.
20. ஐங்குறுநூறு, பா. 77.
21. மேலது, பா. 78.
22. அகநானூறு, பா. 76.
23. மேலது, பா. 106.
24. மேலது, பா. 216.
25. மேலது, பா. 276.

26. மேலது, பா. 336.

27. குறுந்தொகை, பா. 364

# முடிவுரை

**"சங்ககாலச் சமூகமும் பரத்தமையும்"** என்னும் ஆய்வுப்பொருளில் ஆராய்ந்த முடிவுகள் கீழே தொகுத்துத் தரப்படுகின்றன.

இலக்கண இலக்கியங்களில் பரத்தை என்ற சொல்லிற்கான சொற்பொருள் விளக்கத்தையும் பரத்தை என்ற சொல்லானது பல்வேறு காலக்கட்டங்களில் வழங்கி வந்த நிலையையும் அறியமுடிகின்றது.

இலக்கண நூல்களில் பரத்தை என்ற சொல்லிற்கான பதிவுகளும் அவை குறித்த உரையாசிரியர்களின் விளக்கங்களும் ஆராயப்பட்டுள்ளன. சங்க இலக்கியங்களான அகநூல்களில் பரத்தையர் பற்றிய பதிவுகள் எவ்வாறு இடம் பெற்றுள்ளன என்பதை அறியமுடிகிறது. மேலும், கூற்றுக்களின் அடிப்படையில் பரத்தையருக்கான தன்மைகள் விளக்கப்பட்டுள்ளன.

சங்கம் மருவிய கால இலக்கியங்களில் பரத்தையர் பற்றிய செய்திகள் இடம்பெறும் தன்மையை அறியமுடிகின்றது. சங்க காலச் சமுதாயத்தில் பரத்தமையை அங்கீகரித்த தன்மையையும் சங்கம் மருவிய கால இலக்கியங்களான பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் குறிப்பாக திருக்குறளில் பரத்தமையை கடிந்துரைக்கும் நிலையையும் காணமுடிகிறது.

சமண மதம் வேரூன்றிய காலங்களில் பரத்தமையானது பரவலாகக் கடிந்துள்ளதை அறியமுடிகின்றது. மேலும், காப்பிய காலக்கட்ட இலக்கியங்களான இரட்டைக் காப்பியங்கள், சீவகசிந்தாமானி, வளையாபதி, நீலகேசி முதலானவற்றில் பரத்தையர் என்ற சொல்லானது கணிகையர் என்ற சொல்லாக மாற்றம் பெற்றிருப்பதை அறியமுடிகிறது.

பிந்தைய காலக் கட்டங்களில் பரத்தை என்ற சொல்லானது பல்வேறு மாற்றங்களுக்குட்பட்டு தேவதாசிகள், தேவரடியார்கள் என்று மாற்றம்

பெற்றுள்ளதைக் கல்வெட்டுக்கள் மற்றும் நாட்குறிப்புகளின் வழித் தெளிவாக அறியமுடிகிறது. இலக்கணங்களின் வழி தலைவி, தோழி மற்றும் பரத்தையின் பண்புநலன்கள் விவரிக்கப்பட்டன.

சங்க அக இலக்கியங்களின் வழி மருத நிலம் சார்ந்த பாடல்களில் தலைவி பற்றிய வருணனைகளின் மூலம் அவளின் பண்புநலன்கள் அறியப்பட்டுள்ளன. மேலும், தலைவியின் பண்புநலன்களாக அழகு பற்றிய வருணனைகளும், ஆற்றாமைப் பண்பும், தன்னலம் பாராத தன்மையும், ஊடல் கொள்ளும் தன்மையும் தெளிவாக அறியமுடிகின்றது.

தோழி கூற்று பாடல்களின் வழி அவளின் மதிநுட்பமானது வெளிப்படும் தன்மையை அறியமுடிகிறது. தலைவன் மற்றும் தலைவியின் இல்லற வாழ்வில் தோழியின் பங்களிப்பானது திறம்படச் செயல்படுவதை அறியமுடிகிறது.

பரத்தைக் கூற்று பாடல்களின் வழி பரத்தையர் பற்றிய வருணனைகள் இடம்பெறுவதை அறியமுடிகிறது. பரத்தையின் பண்புநலன்களாக தலைவனை எள்ளி நகையாடும் தன்மையையும் தன்னை இழித்துரைக்கும் தலைவியை எதிர்க்கும் தன்மையையும், சூளுரைக்கும் விதத்தையும், தன்னை நியாயப்படுத்தும் தன்மையையும், சினத்தை வெளிப்படுத்தும் தன்மையையும் தெளிவாக அறியமுடிகிறது.

தலைவனின் பண்புநலன்களைத் தொல்காப்பியத்தின் வழி அறியும் தன்மையையும் பாடல்களின் வழி மிகுந்த காமவிழைவானது வெளிப்படும் தன்மையையும் ஒன்றிற்கு மேற்பட்ட பரத்தையரோடு கூடுவதால் 'தண்டாப் பரத்தன்' எனப் பெயர் பெறுதலையும் தலைவியின் தன்னலம்பாராத் தன்மையையும் அறியமுடிகிறது.

தலைவன் பரத்தையரோடு புனல் ஆடும் தன்மையும் பொய்ச்சூள் உரைக்கும் தன்மை வெளிப்படும் விதத்தையும் காணமுடிகிறது. பரத்தையரின்

திருமண விழைவானது வெளிப்படும் தன்மையை அறியமுடிகின்றது. தலைவனின் மகனைக் காணும்போது பரத்தையரின் தாய்மை உணர்வானது வெளிப்படும் பாங்கை அறியமுடிகின்றது.

சமுதாயத்தில் பரத்தையரின் நிலையானது இழிநிலையில் அமைந்துள்ள தன்மையைப் பதிவு செய்துள்ளது. சமுதாயத்தில் பாலின அடிப்படையில் தலைவனுக்கு என்று ஒரு நியதியும், பரத்தைக்கு என்று ஒரு நியதியும் வழங்கப்பட்டுள்ளது.

சமூக மதிப்பீட்டில் தவறிழைத்த தலைவனை ஏற்றுக்கொள்ளும் தன்மைப் புலப்படுத்தப்பட்டுள்ளது. அதுவே பரத்தையை இழித்துரைக்கும் தன்மையும் ஆராயப்பட்டுள்ளது.

பெண்ணிய நோக்கில் பரத்தமை என்னும் ஆய்வுப் பொருளில் பெண்ணியத்திற்கான விளக்கங்களும் பெண்ணிய வகைகளும் விளக்கப்பட்டுள்ளன. பரத்தையின் செயல்பாடுகளில் பெண்ணியக் கூறுகள் இடம் பெற்றிருப்பதை அறிய முடிகிறது. தலைவியைக் காட்டிலும் பரத்தை என்பவள், கல்வி அறிவிலும், கலைகளிலும் வல்லவளாகத் திகழ்வதை அறியமுடிகிறது.

தலைவனின் செயல்பாடுகளைக் கடிந்துரைக்கும் தன்மை தெளிவாக வெளிப்படும் விதத்தை அறியமுடிகிறது. பரத்தையின் சூளுரையின் மூலம் அவளின் மனத் திட்பமும், எவரையும் எள்ளி நகையாடும் தன்மையும் ஆராயப்பட்டுள்ளது.

பரத்தையின் சினமானது வெளிப்படும் தன்மையும், தன்னை நியாயப்படுத்திக் கொள்ளும் தன்மையும் தெளிவாக அறியமுடிகிறது. பரத்தையின் அலருக்கு அஞ்சாத தன்மையும், எந்தவொரு நிலையிலும் தன்னை விட்டுக் கொடுக்காதவளாய் விளங்கும் தன்மையும் அவளின் மன உறுதியை வெளிப்படுத்துவதையும் அறியமுடிகின்றது.

அச்சம் என்பது பெண்களுக்கே உரித்தானது என்பது ஆண்களின் செயல். ஆனால் அந்த அச்சத்தை நீக்கி வாழும் தன்மையைப் பரத்தையிடம் காணமுடிகின்றது. பரத்தை என்பவள் எந்நிலையிலும் தன்னை தனித்தன்மை கொண்டவளாக நிலைநிறுத்தும் பாங்கை அறியமுடிகின்றது.

தலைவி, தோழி, செவிலி, நற்றாய் முதலிய பெண் மாந்தர்கள் உயர்ந்த நிலையில் இருந்தாலும் அவர்கள் ஆண்களுக்குக் கட்டுப்பட்டுள்ள தன்மையில் இருப்பதையும் பரத்தை மட்டுமே எவருக்கும் கட்டுப்படாத தன்மையில் தனித்தன்மை பெறுவதையும் தெளிவாக அறியமுடிகிறது.

பரத்தையர் பற்றிய இப்பதிவானது ஆய்வின் தொடக்கமே. மேற்கொண்டு ஆய்வு செய்வதற்கான களங்களும் பல்வேறு கோட்பாடுகளின் அடிப்படையில் ஆராயும்போது பரத்தையர் பற்றிய உண்மை நிலையானது வெளிப்படும் என்பது ஆய்வாளரின் கருத்தாக அமைகின்றது.

# துணை நூற்பட்டியல்

## *I.முதன்மை ஆதாரங்கள்*


1. சாமிநாதையர். உ.வே., **குறுந்தொகை மூலமும் உரையும்**
உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம்,
சென்னை.
2000.

2. செயபால். இரா., **அகநானூறு (மூலமும் உரையும்)**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.
2014.

3. சோமசுந்தரனார். பொ.வே., **ஐங்குறுநூறு**
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
2009.

4. தட்சிணாமூர்த்தி. அ., (உ.ஆ) **ஐங்குறுநூறு (மூலமும் உரையும்)**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.
2014.

5. நச்சினார்க்கினியர் உரை **கலித்தொகை**
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
2007.

6. நாகராசன். வி., (உ.ஆ) **குறுந்தொகை (மூலமும் உரையும்)** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை. 2014.

7. நாராயணசாமி ஐயர்., (உ.ஆ) **நற்றிணை நானூறு** சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. 1952.

8. பாலசுப்பிரமணியன். கு.வெ., (உ.ஆ) **நற்றிணை (மூலமும் உரையும்)** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை. 2014.

9. விசுவநாதன். அ., (உ.ஆ) **கலித்தொகை (மூலமும் உரையும்)** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை. 2014.

10. வேங்கடசாமி நாட்டார். ந.மு., வெங்கடாசலம் பிள்ளை. ரா., (உ.ஆ) **அகநானூறு – களிற்றுயானை நிரை** சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. 2009.

## *II. துணைமை ஆதாரங்கள்*


1. அரங்க மல்லிகா., **தமிழ் இலக்கியமும் பெண்ணியமும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.
2009.

2. அழகர்சாமி. அ.கா., **பத்தினிப் பெண்டிர் அல்லோம்**
(பரத்தையர் கணிகையர் தேவதாசியர் பற்றிய பதிவுகள்)
கருத்து=பட்டறை.

3. அறவாணன். க.ப., **அற்றை நாட் காதலும் வீரமும்**
(தொல்காப்பிய அகத்திணை, புறத்திணை இயல் உரை வேறுபாடுகள்)
மெய்யப்பன் தமிழாய்வகம்,
சிதம்பரம்.
2002.

4. அறவாணன். க.ப., **அற இலக்கியக் களஞ்சியம்**
தமிழ்க் கோட்டம்,
சென்னை.
2011.

5. இன்னாசி. சூ., (ப.ஆ) **சதுரகராதி**
சந்தியா பதிப்பகம்,
சென்னை.
2005.

6. இளம்பூரணனார். (உ.ஆ) — **தொல்காப்பியம் பொருளதிகாரம்,** சாரதா பதிப்பகம், சென்னை. 2008.

7. இராகவன். அ., — **பெண்ணுரிமையும் மதமும்** திராவிடர் கழக வெளியீடு, சென்னை. 2001.

8. இராசமாணிக்கனார். மா., — **கல்வெட்டுக்களும் தமிழ்ச் சமூக வரலாறும்** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை. 2008.

9. இராமகிருட்டிணன். ஆ., — **அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு** சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை. 1982.

10. இராமநாத பிள்ளை சிதம்பரனார்.ஆ., — **திருமந்திரம் மூவாயிரம் (முதற் பகுதி)** (1 முதல் 5 தந்திரங்கள்) திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை. 1979.

11. கமலாலயன். (மொ.ஆ) — **தமிழகத்தில் தேவதாசிகள்** அகநி வெளியீடு, வந்தவாசி. 2013.

12. கார்த்திகேசு சிவத்தம்பி **பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.

13. கிருட்டிணன். அ., **கல்வெட்டில் வாழ்வியல்**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
1991.

14. கிருஷ்ணமூர்த்தி. ச., **தமிழ்நாட்டுச் செப்பேடுகள்**
மெய்யப்பன் தமிழாய்வகம்,
சிதம்பரம்.
2002.

15. கிருஷ்ணமூர்த்தி. சா., **அகத்திரட்டு**
பாண்டியன் பதிப்பகம்,
தஞ்சாவூர்.
1994.

16. கோபாலையர். தி.வை., **இலக்கணக் கொத்து**
மூலமும் உரையும்
சரசுவதி மகால் நூல் நிலையம்,
1990.

17. சண்முகசுந்தரம். காவ்யா., **பெண்ணியமும் பிரதிகளும்**
காவ்யா,
சென்னை.
2007.

18. சண்முகம் பிள்ளை., **சங்கத் தமிழர் வாழ்வியல்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
1997.

19. சதாசிவ பண்டாரத்தார். தி.வை., **இலக்கியமும் கல்வெட்டுக்களும்**
மணிவாசகர் நூலகம்,
சிதம்பரம்.
1977.

20. சரளா இராசகோபாலன்., **காப்பிய மகளிர்**
ஒளிப்பதிப்பகம்,
சென்னை.
1997.

21. சரோஜினி., **பெண்ணியச் சிந்தனையும் இலக்கியப் பதிவுகளும்**
அரசி பதிப்பகம்,
திண்டுக்கல்.
2006.

22. சாமிநாதையரவர்கள். வே., **சீவகசிந்தாமணி**
மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்,
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தஞ்சாவூர்.
1969.

23. சாமிநாதையர். உ.வே., **மணிமேகலை**
உ.வே.சாமிநாதையர் நூல் நிலைய வெளியீடு,
1981.

24. சாமி சிதம்பரனார்., **எட்டுத் தொகையும் தமிழர் பண்பாடும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.
1986.

25. சாமி சிதம்பரனார்., **மணிமேகலை காட்டும் மனித வாழ்வு**
பாவை பப்ளிகேஷன்ஸ்,
சென்னை.
2003.

26. சிங்காரவேலு முதலியார். ஆ., **அபிதான சிந்தாமணி**
சீதை பதிப்பகம்
சென்னை.
2009.

27. சிவராசன். து., **சங்க இலக்கிய வாழ்வியல்**
சிவம் பதிப்பகம்,
வேலூர்.
1998.

28. சிவலிங்கனார். ஆ., **தொல்காப்பியம்**
பொருளதிகாரம் (உரைவளம்)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
1993.

29. சிவசுப்பிரமணியன். ஆ., **தமிழகத்தில் அடிமை முறை**
காலச்சுவடு பதிப்பகம்
நாகர்கோயில்.
2016.

30. சிவராமலிங்கம். கெ., **சோழர்கால இலக்கியங்கள்**
இந்திய பண்பாட்டு ஆய்வுமையம்,
சென்னை.
2013.

31. சீனிவாசன். ச.பெ., **சங்க இலக்கியத்தில் அகவுணர்வு**
(உயிரினப் பயன்பாடு - நற்றிணை)
சேகர் பதிப்பகம்,
சென்னை.
2005.

32. சுப்பராயலு., (மொ.ஆ.) **தேவதாசி மரபு**
மருதம் பதிப்பகம்,
ஒரத்தநாடு.
2002.

33. சுப்பிரமணியன். ச.வே, **பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்**
(மூலமும் தெளிவுரையும்)
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
2010.

34. சுப்பிரமணியன். ச.வே, **தொல்காப்பியப் பதிவுகள்**
உலகத் தமிழாராய்ச்சிநிறுவனம்,
சென்னை.
1992.

35. சுப்பிரமணியபிள்ளை. கா., **பழந்தமிழர் நாகரிகம்**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
2009.

36. சுசீலா. எம்.ஏ., **பெண் இலக்கியம் வாசிப்பு**
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை.
2001.

37. செல்வராசு. சிலம்பு.நா., **வள்ளுவப் பெண்ணியம் தாயறம்**
(தமிழர் சிந்தனை மரபில் மழை-கற்பு-பத்தினி-பரத்தை பற்றிய ஆய்வு)
2002.

38. செல்வி திருச்சந்திரன்., **தமிழ் வரலாற்றுப் படிமங்கள் சிலவற்றில் ஒரு பெண்ணிய நோக்கு**
குமரன் பதிப்பகம்,
சென்னை.
1997.

39. சேதுராமன். பி., **ஆற்றுப்படை இலக்கியத்தில் தமிழர் வாழ்வியல்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.
2011.

40. சௌந்தரபாண்டியன். சு., **சமுதாய நோக்கில் கல்வெட்டுகள்**
பாரதி புத்தகாலயம்,
சென்னை.
2002.

41. தந்தை பெரியார்., **பெண் ஏன் அடிமையானாள்**
பெரியார் சுயமரியாதை பிரச்சார நிறுவன வெளியீடு,
சென்னை.
1942.

42. தாமரைச் செல்வி. தி., **திருக்குறள் காட்டும் தமிழர் சமுதாயம்**
(குடும்பம்,அரசு)
செயராம் பதிப்பகம்,
புதுச்சேரி.
2001.

43. தில்லைவனம். சு., **புதுச்சேரி மாநிலம் வரலாறும் பண்பாடும்**
சிவசக்திப் பதிப்பகம்,
புதுச்சேரி.
2007.

44. துரைராஜி. நா., **குறுந்தொகையில் அவலச்சுவை**
நிலாச் சூரியன் பதிப்பகம்,
சென்னை.
2012.

45. நச்சினார்க்கினியர்., (உ.ஆ.) **தொல்காப்பியம் பொருளதிகாரம்**
கழக வெளியீடு,
1969.

46. நர்மதா., **தமிழகத்தில் தேவரடியார்**
**மரபு – பன்முக நோக்கு,**
போதிவனம்,
சென்னை.
2006.

47. நடராஜ். வி., (மொ.ஆ.) **தமிழகக் கல்வெட்டுக்களில் பெண்கள்**
விடியல் பதிப்பகம்,
கோயம்புத்தூர்.
2003.

48. நசீமாபானு. சா., **சங்க இலக்கியத்தில் மனையறம்**
பாத்திமா பதிப்பகம்,
காரைக்கால்.
1983.

49. நிர்மலா. பெ., **தமிழ்ப் பண்பாட்டில் பால் வேற்றுமைப் பதிவுகள்**
(பெண் தொன்மம் குறித்த பதிவுகள்)
பல்கலைப் பதிப்பகம்,
சென்னை.
2009.

50. பத்மினி. ப., **மறக்கப்பட்ட பதிவுகள்**
**பெண் எழுத்து வரலாறு (1896-1956)**
புலம் வெளியீடு,
சென்னை. 2016.

51. பழனிச்சாமி. செ., **புறநானூற்றில் சமுதாய அமைப்பு**
வாணி பதிப்பகம்,
கோவை.
1989.

52. பழனியப்பன். மு., **பெண்ணிய வாசிப்பும் பெண்ணெழுத்துத் திறனாய்வும்**
காவ்யா,
சென்னை.

53. பழனிவேலு. கே., **சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து மரபும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.
2010.

54. பரிமளம். க., **பெண்ணியப் பார்வை**
(சங்க இலக்கியம் / தி.ஜானகிராமனின் நாவல்கள்)
தமிழினி,
சென்னை.
2008.

55. பாண்டுரங்கன்., **சங்க இலக்கியம் (சமயம்,வழிபாடு, அரசு, சமூகம்)**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.
2016.

56. பாலசுப்பிரமணியன். கு.வெ., **சங்க இலக்கியத்தில் புறப்பொருள்**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம். 2007.

57. பாஸ்கரதாஸ் ஈ.கோ., **அகப்பொருள் பாடல்களில் தோழி**
திருமனை,
கோவை.
1979.

58. பிரபஞ்சன்., **தாழப் பறக்காத பரத்தையர் கொடி**
டிஸ்கவரி புக் பேலஸ்,
சென்னை.
2016.

59. பிரபஞ்சன்., **பெண்**
டிஸ்கவரி புக் பேலஸ்,
சென்னை.
2016.

60. பிரேமா. இரா., **பெண் – மரபிலும் இலக்கியத்திலும்**

தமிழ்ப் புத்தகாலயம்,

சென்னை.

61. பிரேமா. இரா., **பெண்ணியம் அணுகுமுறைகள்**

தமிழ்ப் புத்தகாலயம்,

சென்னை.

1998.

62. பிரேமா. இரா., **பெண்ணியம்**

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,

சென்னை.

1994.

63. பிரேமா. இரா., **பெண்ணியம் அகலமும் ஆழமும்**

காவ்யா,

சென்னை.

2015.

64. பிரேமா அருணாசலம் **பத்தினித் தெய்வங்களும் பரத்தையர் வீதிகளும்**

சவுத் ஏசியன் புக்ஸ்,

சென்னை.

1993.

65. பூங்காவனம். ப., (தெ.ஆ.) **அகப்பொருள் விளக்கம்**

தமிழ் முல்லைப் பதிப்பகம்,

புதுச்சேரி.

2009.

66. பூங்குன்றன். ர., **தொல்குடி வேளிர் வேந்தர்**

(பண்டைய தமிழகத்தில் அரசு உருவாக்கம் பற்றிய ஆய்வு)

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,

சென்னை.

2016.

67. பூரணி. ஜா., **இன்றைய மகளிர் நிலை**

(களஆய்வு அடிப்படையில்)

மீனா புத்தகப் பண்ணை,

விழுப்புரம்.

1999.

68. மணி. பெ.சு., **சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்**

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,

சென்னை.

1986.

69. மாதையன். பெ., **சங்க இலக்கியத்தில் குடும்பம்**

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,

சென்னை.

2010.

70. மாதையன். பெ., **சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம்**

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,

சென்னை.

2010.

71. முருகேச பாண்டியன் (தொ.ஆ.) **சங்கப் பெண் கவிஞர்களின் கவிதைகள்**

மருதா

சென்னை.

2005.

72. முருகேசர். ச., **தமிழ் இலக்கியத்தில் சமுதாயச் சிந்தனைகள்**

திருக்குறள் பதிப்பகம்

சென்னை.

2006.

73. முருகேசன். சி.எஸ்., **வரலாற்றில் தேவதாசிகள்**

குறிஞ்சி,

சென்னை.

74. மெய்யப்பன்.ச., **புறப்பொருள் வெண்பாமாலை**

மணிவாசகர் பதிப்பகம்,

சென்னை.

1997.

75. ராஜன். கா., **கல்வெட்டியல்**

மனோ பதிப்பகம்,

தஞ்சாவூர்,

2006.

76. வல்லிபுரம் மகேஸ்வரன்., **சோழர் காலத்துக் கோயிலும் சமூகமும்**

குமரன் புத்தக இல்லம்,

சென்னை.

2008.

77. வரதராசனார். மு., **திருக்குறள் (தெளிவுரை)**
திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
சென்னை.
1998.

78. விஜயலட்சுமி. ர., **தமிழக மகளிர்**
(தொடக்கக் கால முதல் ஆறாம் நூற்றாண்டு வரை)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
1997.

79. வேங்கடசாமி நாட்டார். ந.மு., **சிலப்பதிகாரம்**
ராமையா பதிப்பகம்,
சென்னை.
2005.

80. ஜெகதீசன். தெ., (ப.ஆ.) **பழந்தமிழ்க் கலைகளும் நீட்சியும்**
காவ்யா,
சென்னை.
2012.

81. ஜெய் கணேஷ். பா., மகாலட்சுமி. ம., மகேஸ்வரி. சு., (தொ.ஆ.) **சங்க இலக்கியம் வரலாறு – மானிடவியல் தொல்லியல்**
பரிசல்
சென்னை.
2007.

*அகராதிகள்*

1. இராமநாதன்., **இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகாதி தொகுதி - 2** இன்ஸ்டிடியூட் ஆப் சவுத் இந்தியன் ஸ்டடிஸ், சென்னை.

2 கதிரை வேற்பிள்ளை. நா., **தமிழ்மொழி அகராதி** (தமிழ்-தமிழ் அகராதி) சாரதா பதிப்பகம், சென்னை. 2009.

3. சந்தியா நடராஜன்., **மதுரைத் தமிழ்ப் பேரகராதி** இரண்டாம் பாகம், சந்தியா பதிப்பகம், சென்னை. 2004.

*கலைக்களஞ்சியங்கள்*

1. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி 7
   தமிழ்ப் பல்கலைக் கழகம்
   தஞ்சாவூர்.

***ஆய்வேடுகள்***


1. அருண் பிரியா., **சங்க இலக்கிய பரத்தையர் வாழ்வியற் சிக்கலின் ஆளுமை நிலைப்பாடு** மதுரை காமராசர் பல்கலைக் கழகம் மதுரை.

2. அன்புச்செல்வன்., **தமிழ் இலக்கணங்களில் சமூக நிறுவனங்கள்** புதுவைப் பல்கலைக் கழகம், புதுச்சேரி. 2008.

3. விநாயகமூர்த்தி. ஆ., **சங்க இலக்கியப் பெண் புலவர்களின் மொழிநடை** புதுவைப் பல்கலைக் கழகம், புதுச்சேரி. 2007.

## பின்னிணைப்பு I

சங்க அகப்பாடல்களில் மருதநிலப் பாடல்களின் எண்ணிக்கை 254.

**1. நற்றிணை** → 32 பாடல்கள்.

| | **புலவர்** | **நிலம்** | **பாடல் எண்** |
|---|---|---|---|
| 1. | ஓரம்போகியார் | மருதம் | 20, 360 |
| 2. | கொற்றனார் | மருதம் | 30 |
| 3. | கோண்மா நெடுங்கோட்டனார் | மருதம் | 40 |
| 4. | மருதம் பாடிய இளங்கடுங்கோ | மருதம் | 50 |
| 5. | தூங்கலோரியார் | மருதம் | 60 |
| 6. | வெள்ளிவீதியார் | மருதம் | 70 |
| 7. | பூதன்தேவனார் | மருதம் | 80 |
| 8. | அஞ்சில் அஞ்சியார் | மருதம் | 90 |
| 9. | பரணர் | மருதம் | 100, 260, 280, 300, 310, 350 |
| 10. | மாங்குடிகிழார் | மருதம் | 120 |
| 11. | கடுவன் இளமள்ளனார் | மருதம் | 150 |
| 12. | கூடலூர்ப் பல்கண்ணனார் | மருதம் | 200, 380 |
| 13. | மிளைகிழான் நல்வேட்டனார் | மருதம் | 210 |
| 14. | மதுரை மருதன் இளநாகனார் | மருதம் | 216, 290 |
| 15. | ஆலங்குடி வங்கனார் | மருதம் | 230, 330, 400 |
| 16. | மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார் | மருதம் | 250 |
| 17. | கபிலர் | மருதம் | 320 |
| 18. | நக்கீரர் | மருதம் | 340 |
| 19. | உறையூர்க் கதுவாய்ச் சாத்தனார் | மருதம் | 370 |
| 20. | ஔவையார் | மருதம் | 390 |
| 21. | ஆசிரியர் பெயர் தெரியவில்லை | மருதம் | 170, 180 |

**2. ஐங்குறுநூறு** → 100 பாடல்கள். 1 முதல் 100 வரை மருதம் ஆசிரியர் ஓரம்போகியார்.

**3. குறுந்தொகை** → 47 பாடல்கள்

| | **புலவர்** | **நிலம்** | **பாடல் எண்** |
|---|---|---|---|
| 1. | ஆலங்குடி வங்கனார் | மருதம் | 8, 45 |
| 2. | ஓரம்போகியார் | மருதம் | 10, 127, 384 |
| 3. | பரணர் | மருதம் | 19, 89, 258, 393, 399 |
| 4. | ஆதிமந்தி | மருதம் | 31 |
| 5. | படுமரத்து மோசிகீரன் | மருதம் | 33, 75 |
| 6. | கொல்லிக்கண்ணன் | மருதம் | 34 |
| 7. | கழார் கீரன் எயிற்றி | மருதம் | 35 |
| 8. | மாமிலாடன் | மருதம் | 46 |
| 9. | குன்றியனார் | மருதம் | 50, 238 |
| 10. | கோப்பெருஞ்சோழன் | மருதம் | 53 |
| 11. | தும்பிசேர் கீரன் | மருதம் | 61 |
| 12. | ஔவையார் | மருதம் | 80, 91, 364 |
| 13. | வடம வண்ணக்கண் தாமேமாதரன் | மருதம் | 85 |
| 14. | அள்ளூர் நன்முல்லையார் | மருதம் | 93, 157, 202 |
| 15. | மதுரைக் கண்ணனார் | மருதம் | 107 |
| 16. | மாதீர்த்தன் | மருதம் | 113 |
| 17. | ஒக்கூர் மாசாத்தியார் | மருதம் | 139 |
| 18. | மாங்குடி மருதன் | மருதம் | 164 |
| 19. | வெள்ளி வீதியார் | மருதம் | 196 |
| 20. | பூங்கணுத்திரையார் | மருதம் | 171 |
| 21. | நெடும்பல்லியத்தை | மருதம் | 178, 203 |
| 22. | கிள்ளி மங்கலம் கிழார் | மருதம் | 181 |
| 23. | மிளைக்கந்தன் | மருதம் | 196 |
| 24. | பாலை பாடிய பெருங்கடுங்கோ | மருதம் | 231 |
| 25. | அழிசி நச்சாத்தனார் | மருதம் | 271 |
| 26. | கள்ளில் ஆத்திரையன் | மருதம் | 293 |
| 27. | தூங்கலோரி | மருதம் | 195 |

| | | | |
|---|---|---|---|
| 28. | குப்பைக் கோழியார் | மருதம் | 305 |
| 29. | உறையூர்ச் சல்லியன் குமாரன் | மருதம் | 309 |
| 30. | கயத்தூர் கிழான் | மருதம் | 354 |
| 31. | பேயன் | மருதம் | 359 |
| 32. | மதுரை மருதன் இளநாகன் | மருதம் | 367 |
| 33. | நக்கீரர் | மருதம் | 368. |

**4.கலித்தொகை** → 66 முதல் 100 வரை உள்ள பாடல்களாகும்.

பாடிய புலவர் மருத இளநாகனார்

**5.அகநானூறு** → 40 பாடல்கள்

| | **புலவர்** | **நிலம்** | **பாடல் எண்** |
|---|---|---|---|
| 1. | பரணர் | மருதம் | 6, 76, 116, 186, 196 266, 326, 356,376,386, 396 |
| 2. | சாகலாசனார் | மருதம் | 16 |
| 3. | பாண்டியன் கானப்பேரெயில் தந்த உக்கிரப் பெருவழுதி | மருதம் | 26 |
| 4. | மதுரை நக்கீரர் | மருதம் | 36, 126 |
| 5. | அள்ளூர் நன்முல்லையார் | மருதம் | 46 |
| 6. | மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் | மருதம் | 56 |
| 7. | செல்லூர்க் கோசிகன் கண்ணனார் | மருதம் | 66 |
| 8. | நல்லாவூர் கிழார் | மருதம் | 86 |
| 9. | மருதம் பாடிய இளங் கடுங்கோ | மருதம் | 96, 176 |
| 10. | ஆலங்குடி வங்கனார் | மருதம் | 106 |
| 11. | விற்றூற்று மூதெயினனார் | மருதம் | 136 |
| 12. | உவர்க் கண்ணூர்ப் புல்லங்கீரனார் | மருதம் | 146 |
| 13. | ஆவூர் மூலங்கிழார் | மருதம் | 156 |
| 14. | இடையன் நெடுங்கீரன் | மருதம் | 166 |
| 15. | மதுரை மருதன் இளநாகனார் | மருதம் | 206 |

| | | |
|---|---|---|
| 16. ஐயூர் முடவனார் | மருதம் | 216 |
| 17. மதுரைத் தமிழ்க் கூத்தனார் | | |
| கடுவன் மள்ளனார் | மருதம் | 256 |
| 18. ஓரம்போகியார் | மருதம் | 286, 316 |
| 19. மதுரைப் பேராலவாயார் | மருதம் | 296 |
| 20. மதுரைக் கூலவாணிகன் | | |
| சீத்தலைச் சாத்தனார் | மருதம் | 306 |
| 21. பாவைக் கொட்டிலார் | மருதம் | 336 |
| 22. நக்கீரர் | மருதம் | 346 |
| 23. குடவாயிற் கீரத்தனார் | மருதம் | 366 |

# பின்னிணைப்பு II

## பரத்தையரைக் குறிக்கும் பதினேழு சொற்கள்

1. ஆயிழை மகளிர் → அகம் → 206:8

   **“அம்மா மேனி ஆயிழை மகளிர்”**

2. நேரிழை மகளிர் → அகம் → 336:11

   **“தேர்தர வந்த நேரிழை மகளிர்”**

3. விலைக் கணிகை → பரி → 20:49

   **“மாயப்பொய் கூட்டி மயக்கம் விலைக்கணிகை”**

4. விலை நலப் பெண்டிர் → புறம் → 365:8

   **“விலைநலப் பெண்டிரிற் பலர்மீக் கூற”**

5. குறுமகள் → நற் → 20:1

   **“ஐய குறுமகட் கண்டிகும் வைகி”**

6. மாணிழை மகளிர் → நற் → 30:5

   **“மார்புதலைக் கொண்ட மாணிழை மகளிர்”**

7. வாலிழை மகளிர் → நற் → 380:2

   **“வாலிழை மகளிர் சேரித் தோன்றுந்”**

8. குறுந்தொடி மகளிர் → குறுந் → 384:2

   **“நெடும்பல் கூந்தற் குறுந்தொடி மகளிர்”**

9. கனங்குழையவர் → கலி → 3:66:13

**“கனலுநோய்த் தலையுநீ கனங்குழை யவரொடு”**

10. எழிலுண்கண் நல்லார் → கலி. 3:67:6

**“நலத்தகை யெழிலுண்கண் நல்லார்தங் கோதையால்”**

11. கொடியன்னார் → கலி. 3:67:10

**“கோடெழி லகலல்குற் கொடியன்னார் முலைமூழ்கிப்”**

12. எழில் நல்லார் → கலி. 3:67:14

**“இனிப்புணர்ந்த எழில்நல்லா ரிலங்கெயி றுறாஅலின்”**

13. துணைமலர்க் கோதையார் → கலி. 3:70:9

**“துணைமலர்க் கோதையார் வைகலும் பாராட்ட”**

14. கடிக்கொண்டார் → கலி. 72:9

**“கண்ணிநீ கடிகொண்டார்க் கனைதொறும் யாமழப்”**

15. ஏதிலார் → கலி. 78:13, 84:20.

**“எரியிதழ் சோர்ந்துக ஏதிலார்ப் புணர்ந்தமை”**

**“சிறுபட்டி ஏதிலார் கையெம்மை எள்ளுபு நீதொட்ட”**

16. கொண்டி மகளிர் → மதுரைக். 583.

**“கண்டோர் நெஞ்சு நடுக்கு உறூஉ கொண்டி மகளிர்”**

17. பரத்தை → அகம்.256:12, பரி.10:23, 12:45, நற்.230:6, 360:5, கலி.73:20, 84:25, ஐங்.48:4, 84:5.

**“பரத்தை யாயங் கரப்பவும் ஒல்லாது” (அகம். 256:12)**

**“பதிவத மாதர் பரத்தையர் பாங்கர்” (பரி. 10:23)**

**“நாணால் கொல் தோழி நயன்இல் பரத்தையின்” (பரி. 12:45)**

**“முனிவில் பரத்தையை என்துறந்து அருளாய்” (நற். 230:6)**

**“சென்றீ பெரும சிறக்கநின் பரத்தை” (நற். 360:5)**

**“தண்டாப் பரத்தை தலைக்கொள்ள நாளும்” (கலி. 73:20)**

**“செறியாப் பரத்தை இவன்றந்தை மார்பிற்” (கலி. 84:25)**

**“வேண்டேம் பெருமநின் பரத்தை” (ஐங். 48:4)**

**“பலர்படிந் துண்ணுநின் பரத்தை மார்பே” (ஐங். 84:5)**

# பின்னிணைப்பு III

## வாழ்வியற் களஞ்சியம்

**பரத்தமை**

விருப்பு வெறுப்பின்றிப் பணத்திற்காகவோ பொருளுக்காகவோ கண்டவாறு கொள்ளுகின்ற செயல் பரத்தமை (Prostitution) எனப்படும். உலகத்தின் பழமையான தொழில் எனச் சொல்லப்படும் இப்பரத்தைத் தொழிலானது காலம் காலமாகச் செழித்து வளர்ந்து வந்துள்ளது. ஒரு பெண் பணத்திற்காகத் தன்னுடைய உடலை ஆண்மகனுக்கு விற்பதைப் பரத்தமை என்ற சொல் குறிக்கிறது. இதைப் போலவே பெண்களுக்குத் தங்கள் உடலை விற்கின்ற ஆண்களும் உலகில் இருக்கத்தான் செய்கிறார்கள். இருப்பினும் பெண் பரத்தையரோடு ஒப்பிடுகையில் அவர்களின் எண்ணிக்கைக் குறைவு என்றுதான் சொல்ல வேண்டும்.

எனவேதான், "பணத்திற்காகவோ பொருளுக்காகவோ சொந்த மனநிறைவுக்காகவோ முழு நேரம் அல்லது பகுதி நேரத் தொழிலாகப் பல்வேறு மனிதர்களிடம் (ஒரே பாலினம் அல்லது எதிர் பாலினம்) உடலுறவு கொள்ளுகின்ற ஆணோ பெண்ணோ பரத்தையர் எனப்படுவரென இசுகாட்டு" (G.S.Scott) என்ற அறிஞர் கூறுகிறார். இதிலிருந்து பரத்தைமை என்ற சொல்லானது பணத்திற்காக ஓர் ஆணோ பெண்ணோ தன் உடலை விற்கின்ற தொழிலைக் குறிப்பது புலனாகிறது.

வரலாற்றுத் தோற்றங்கள் மிகுந்த சமூகக் கட்டுப்பாட்டின் காரணமாகப் பண்டைக் காலங்களில் திருமணமாகாத ஆண்கள் மணமாகாத பெண்களுடன் உடலுறவு கொள்ளுதல் இயலாத காரியமாக இருந்தது. எனவே, அவர்கள் தங்கள் பாலுணர்வு உந்துதல்களுக்கு வடிகாலாகப் பரத்தையரையே நாட வேண்டியிருந்தது. மேலும், திருமணமான ஆண்கள் கூடத் தங்கள் மனைவியின் மீது மிகுதியான மதிப்பு வைத்திருப்பினும் தங்கள் உடலுறவின் முழுமையான மனநிறைவிற்காகப் பிற பெண்களையே நாடியுள்ளனர். ஆகவேதான், அக்காலங்களில் பரத்தமை குற்றமெனக் கருதாது ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது.

ஆனால், இன்றைய பாலுறவும் புரட்சிக் காலத்தில், எந்தவொரு திருமணமாகாத ஆணும் பெண்ணும் கூடப் பாலுறவு வைத்துக் கொள்ள

வாய்ப்புகள் உள்ளன. திருமணமாகாமல் கருச்சிதைவு செய்து கொள்ளுகின்ற பெண்களின் எண்ணிக்கை மிகுந்து வருவது இதற்குச் சான்றாகும். மேலும், திருமணத்தின் மூலம் உடலுறவில் மனநிறைவடையாத ஆண்கள், மருத்துவ அறிஞர்களின் அறிவுரைப்படியே பிற பெண்களுடன் பாலுறவு கொள்ளுதல் முதல் மணமுறிவு செய்து கொள்ளுதல் வரை இன்றைய காலம் மாறியிருக்கிறது.

பரத்தமையின் நிலைகள் சிலவற்றில் நன்கு புலப்படத்தக்க அளவு மாற்றங்கள் இப்பொழுது நிகழ்ந்துள்ளன. இருப்பினும் சமூகத்தில் 1. சாலை ஓரத்துப் பரத்தைகள், 2. வீட்டில் தங்கித் தொழில் செய்யும் பரத்தைகள் என இருவகையான பரத்தைத் தொழில்கள் எப்பொழுதும் நிகழ்ந்து கொண்டே தான் இருக்கின்றன.

தொழிற்புரட்சி ஏற்படுவதற்கு முன்னர் இருந்த சமூகங்களில் குடும்பப் பெண்களுக்குக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருந்தன. எனவே, அவர்கள் வெளியே சட்டப்படி பணியாற்றுவதும் பொதுநலப் பணிகளிலும், அறிவு அடிப்படையிலான பணிகளிலும் ஈடுபடுவதும் மிகக் குறைவாகும். ஆனால், விலைமாதர்கள் எனச் சொல்லப்படும் பரத்தையர், சமூகத்தில் மிக உயர்ந்த தகுநிலையையே பெற்று வந்துள்ளனர். தொன்மையான ஏதென்சு நாட்டின் சிறந்த பெண் கல்வியாளர்கள் இதற்கு சான்று ஆவர். அவர்கள் நடத்துகின்ற பரத்தையர் இல்லத்தில் தங்கள் நாவன்மையாலும், அறிவுக் கூர்மையாலும் தத்துவவாதிகள் முதற்கொண்டு தலைச்சிறந்த இராசதந்திரிகள் வரை அனைவரும் அங்குத் திரளுமாறு செய்தனர். பதினான்காம், பதினைந்தாம் உலூயியின் மனைவியர் (Mistress) பிரான்சு நீதிமன்றத்தில் பதவி வகித்துத் தங்கள் காதலர்களுக்குப் பரிந்துரை நல்கும் வண்ணம் விளங்கியதுடன், அரசியல் முன்னேற்றத்திற்காக அரசவையினர் தங்களைக் கெஞ்சி ஆதரவைப் பெறும் வண்ணம் நடந்து கொண்டதாகவும் வரலாற்றுச் சான்றுகள் தெரிவிக்கின்றன.

பரத்தமை பல நாடுகளில் பலகாலமாகச் சட்டப்படி அனுமதிக்கப்பட்டு வருகிறது. முன்னர் வழுக்கி விழுந்த பெண்களுக்குத் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளும் ஒரே வழியாக இது கருதப்பட்டது. ஆனாலும், பிரெஞ்சு, இத்தாலி போன்ற நாடுகளில் பெண் வாக்காளர்கள் பலர் பரத்தையர் தொழிலை

எதிர்த்துப் போராடியதன் விளைவாகக் கி.பி. 19ஆம் நூற்றாண்டிலிருந்து இத்தொழிலானது சட்டப்படி குற்றமாகக் கருதப்பட்டது. மேலும், இதைத்தவிர்த்த வேறுவகையான வேலைகளைப் பெற்றுக்கொள்ள இயலும் என்பதோடு கலையிலும், பிற தொழில்களிலும் சிறந்து விளங்க இயலும் என்ற எண்ணமும் பெண்களுக்கு ஏற்பட்டது. இந்த எண்ணம் ஏற்பட்ட பின்னர்ப் பொருளாதார ஏழ்மையின் காரணமாக இப்பரத்தைத் தொழிலில் ஈடுபடுவோரின் எண்ணிக்கை குறையத் தொடங்கிற்று. இருப்பினும் ஆங்காங்கே அனைத்துச் சமூகங்களிலும் இத்தொழில் நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கிறது. எனவே, சமூகவியல், உளவியல் அறிஞர்கள் இதைப் பிறழ்வு நடத்தையாகக் கருதி ஆய்வு செய்து வருகின்றனர்.

**பரத்தமையும் சமூகக்கேடும்**

பரத்தமை மிகப் பெரிய சமூகக்கேடாகும். பரத்தையர்கள் பணத்திற்காகத் தங்களுடைய உடலை விற்றுச் சமூகத்திற்கு எதிரான குற்றங்களைச் செய்கிறார்கள். பரத்தைத் தொழிலில் பலதரப்பட்ட இளமையான, அறியாப் பெண்கள் ஈடுபடுத்தப்படுகிறார்கள். அவ்வாறான பரத்தைத் தொழிலில் ஒரு பெண் ஈடுபடுவதால் அவளுடைய குடும்ப வாழ்க்கை முதலாவதாக அழிகிறது. பின்னர் அவளுடைய உடல் அழகு கெடுகிறது. அவள் ஆளுமையையும் இழக்கிறாள், பலவகையான உடலுறவு நோய்களினால் பாதிக்கப்படுகிறாள். இருப்பினும் இப்பரத்தைத் தொழில் அனைத்துச் சமுதாயங்களிலும் பரவலாக நடந்து கொண்டுதான் இருக்கிறது. ஒரு தொழில் என்ற அடிப்படையில் இப்பரத்தமையை மிகவும் தொன்மையானது எனச் சொல்லலாம்.

இக்காலத்தில் இத்தொழில், நகரங்களில் மட்டுமன்றிக் கிராமப்புறங்களிலும் இருப்பது அறியமுடிகிறது. கிராமப்புறங்களில், ஒரு பெண் அல்லது ஒரு பெண்ணும் அவளுடைய மகளும் அவர்களுடைய வீட்டில் ஆணுக்கு விருந்து படைக்கின்ற வடிவில் பரத்தமை நடைபெறுவதாக மமோரியா (Dr.C.B.Mamoria) என்ற அறிஞர் கூறுகிறார். மேலும், பெண்களைப் பரத்தைத் தொழிலில் வாடகைக்கு விட்டுப் பணம் ஈட்டுவதற்காக இடைத் தரகர்களால் ஏமாற்றப்படுகின்ற கிராமத்துப் பெண்களும் பலர் உளர். ஆனால், பொதுவாகக் கிராமப்புறங்களில் வருந்தி அழைக்கின்ற பழக்கம் இருக்காது. பெரிய நகரங்களிலும் தொழில் மையங்களிலும் பெரிய அளவிலான பரத்தையர்

விடுதிகள் அமைக்கப்பட்டு வெளிப்படையாகப் பரத்தைத் தொழில் நடத்தப்பட்டு வருகிறது.

**பரத்தமைக்கான காரணிகள்**

பரத்தமை என்பது ஒரு தனிப்பட்ட நிகழ்ச்சி அன்று. இதற்கு பல சமூக, பொருளாதார, உளவியல், உடற்கூறுகள் காரணிகளாக அமைகின்றன. ஒழுக்கநெறி என்பது எல்லாக் காலங்களிலும் எல்லா நாடுகளிலும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. எடுத்துக்காட்டாகத் திருமணம் என்பது ஆண், பெண் இருபாலருக்கும் இடையே ஏற்படுகின்ற உரிமை நிறைந்த புனிதமான உறவாகும். இவ்வுறவானது கடுமையான விதிகளையும் பழமையான வழக்கங்களையும் கொண்டதாகும். இருப்பினும், குறிப்பிட்ட பிரிவினர் இவ்வகையான திருமண வாழ்க்கையை மீறி நடக்கின்றனர். வெறும் உடல் மன நிறைவிற்காகக் கள்ளத்தனமாக உறவுகளை மேற்கொள்கின்றனர். எனவே, சமூகத்தில் தவறான திருமண உறவுகள் காலம் காலமாக நடந்து வருவது நடைமுறையாகிவிட்டது. தொற்று நோய், போர் ஆகியவற்றால் ஏற்படுகின்ற மக்கள் தொகை இழப்புகளால் ஆண் - பெண் விகிதங்கள் வேறுபடுவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது. அக்காலக் கட்டத்தில் ஒருவன் ஒருத்தியைத் தான் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்ற சமய மற்றும் சட்ட நியதிகள் தோன்றிவிடுகின்றன.

குழந்தைத் திருமணங்களிலும் இனப்பொருத்தமற்ற ஆண் - பெண் இருவருக்கிடையிலான திருமணங்களிலும் அன்பும் நெருக்கமும் அதிகபட்சம் இருப்பதில்லை, மேலும் விதவை மறுமணங்கள் தடை செய்யப்படுவதும் வரதட்சணைக் கொடுமைகள் நிகழ்வதும் பரத்தமைக்கான முக்கிய சமூகக் காரணிகளாக அமைகின்றன. இவை போன்ற பொருளாதார, சமூகவியல் காரணிகள் நேரடியாகவோ மறைமுகமாகவோ தனிப்பட்ட மனிதனிடம் ஒழுக்கமின்மையை ஏற்படுத்துகின்றன. அம்மனிதர்கள் பலர் அதனால் கண்டவாறு பாலுறவு கொள்ளத் தொடங்குகின்றனர். அதுபோன்ற கொடிய சூழ்நிலையில் தீய தொழில் மையமான பரத்தையர் இல்லங்களில் தஞ்சம் புகவேண்டிய நிலை ஏற்படுகிறது.

மேலும், வேறு பல காரணங்களும் சமூகத்தில் பெண்களில் நிலையைத் தாழ்த்தி விடுகின்றன. எடுத்துக்காட்டாகச் சமூகத்தில் பெண்கள் கணவனைத்

தவிர வேறு ஆணுடன் உடலுறவு கொள்வது தவறு என்றும், ஆனால் ஆண்கள் பிற பெண்களிடம் உடலுறவு கொள்வது அவனுடைய மன நிறைவிற்காக என்றும், அதில் தவறில்லை என்றும் ஒழுக்க நெறிகள் இரண்டு விதமாகத் தரம் பிரிக்கப்பட்டுள்ளன. அதன் விளைவாகத் திருமணம் ஆகாமல் ஒரு பெண் தாய்மையுற்றால் அவள் வாழ்க்கை சீரழிந்து விடும். ஆனால் ஆண்களுக்கு எந்தவித தடையோ பாதிப்போ கிடையாது. எனவேதான், சமூகச் சீர்திருத்தவாதிகள் ஒழுக்கம் என்பது இருபாலாருக்கும் பொருந்துவதாக அமையவேண்டும் என வற்புறுத்துகின்றனர்.

மேற்கூறிய காரணிகளை மையமாகக் கொண்டு பின்வருவனவற்றைப் பரத்தமைக்கான காரணிகளாகக் கூறலாம்.

1. **ஏழ்மை:** ஏழ்மை பரத்தமைக்கான காரணிகளுள் மிக முக்கியமான ஒன்றாகும். இதுவே பரத்தமைக்கு அடித்தளமாக அமைகின்றது என்று கூறலாம். பரத்தையர்கள் பொதுவாகக் கல்வி அறிவற்றவர்களாகவும் ஏழைகளாகவும் இருப்பர். எனவே, அவர்கள் தகாத உடலுறவு கொள்வதற்குத் தள்ளப்படுகிறார்கள். தங்களுடைய வாழ்க்கைக்காக அவர்கள் வாடிக்கையாளர்களின் உடல்பசியைப் போக்கிப் பணம் பெறுகின்றனர். மேலும், ஏழ்மையே பரத்தமைக்கு முதன்மையான காரணியாக அமைகிறது எனச் சர்வதேச சங்கத்தின் (League of Nations) அறிக்கையும் கூறுகிறது. அதாவது வாழ்வதற்கு வேறு வழியோ பிறர் ஆதரவோ இல்லாத நிலையே ஒரு பெண் பரத்தையாவதற்கு அடிப்படைக் காரணமாக அமைகிறது.

2. **சமய வழக்கங்கள்:** சமய வழக்கங்களும் பரத்தமைக்குக் காரணியாக அமைகின்றன. நாட்டியம் ஆடுகின்ற பெண்களைக் கோயில்களுக்கு அளித்து விடுகின்ற வழக்கம் பழங்காலத்தில் இருந்து வந்தது. இவ்வழக்கமும் பரத்தமைக்குக் காரணமாக அமைகிறது. அதாவது இந்நடனப் பெண்மணிகள் பரத்தைத் தொழில் செய்து வந்ததாக வரலாற்றுச் சான்றுகள் கூறுகின்றன.

3. **சமூக வழக்கங்கள்:** இந்து சமயத்திலுள்ள பல சமூக வழக்கங்கள் பெரும்பாலும் ஆளுமை வளர்ச்சியைப் பாதிக்கின்றன. வரதட்சணை

முறை, குழந்தைத் திருமணம், விதவை மறுமணத் தடை, பல மணம் (Polygamy), இரட்டை ஒழுக்கத் தரம் (Dual Standard of Morality), சாதி அமைப்பு முறை ஆகியவை குடும்பத்தில் சில விரும்பத்தகாத சூழ்நிலையை ஏற்படுத்துகின்றன. வரதட்சணைக் கொடுமையின் காரணமாகப் பல இளம்பெண்கள் திருமணமாகாத நிலைக்குத் தள்ளப்படுகிறார்கள். அத்தகைய பெண்கள் பிறரைப் புணர்தலுக்கோ, பரத்தையர் ஆவதற்கோ வாய்ப்புடையர். அதுபோலவே சமூகத்தில் விதவை மறுமணங்கள் தடை செய்யப்படுவதும், பரத்தைத் தொழிலை அவர்கள் நாடுவதற்குக் காரணமாகிவிடுகிறது. கூட்டுக் குடும்பங்களில் ஒற்றுமையின்மை நிலவுவதால் விதவைகளுக்குப் பாதுகாப்பும் குறைகிறது. எனவே, அவர்கள் வரன்முறையற்ற உடலுறவில் ஈடுபடுவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது.

4. **சமூகச் சூழ்நிலைகள்:** சமூகச் சூழல்கள் பலவும் பரத்தமைக்குக் காரணியாக அமைகின்றன. பரத்தமைக்கு அடித்தளமாக அமைகின்றனர்.

**சமூகச் சூழல்கள் பின்வருவன**

**அ) விரைவான தொழில்மயமாதல்**

நகரங்கள் விரைவாகத் தொழில்மயமாவதால் அங்கு வசதி வாய்ப்புகள் குறைவதுடன் குடியிருப்பதற்கு இடப்பற்றாக் குறையும் ஏற்படுகிறது. அதனால் தொழிற்சாலைகளில் பணியாற்றும் தொழிலாளர்கள் பலர் தங்கள் மனைவிமார்களைக் கிராமப்புறங்களிலேயே விட்டுவிட்டு வரவேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது. அதன் விளைவாக அனைத்துத் தொழில் மற்றும் வணிக மையங்களில் ஆண் - பெண் விகிதம் வேறுபடுகிறது. இவ் வேறுபாட்டின் காரணமாக நகரங்களில் கடுஞ் சிக்கல்கள் பல ஏற்படுவதாக ஒயிட்லி விசாரணை அறிக்கை (Whitely Commission Report) தெரிவிக்கிறது.

அவை: 1) இவ்வேறுபாடு பரத்தமை பெருகுவதற்கு வழிவகுப்பதுடன் பல உடலுறவு நோய்களையும் பரப்புகிறது. அந்நோய் முதலாவதாக நகரங்களில் பரவுகிறது. பின்னர்த் தொழிலாளர்கள் கிராமங்களிலுள்ள தங்கள் வீடுகளுக்குத் திரும்பும்போது கிராமப்புறங்களிலும் அந்நோய் பரவுகிறது. 2) அதனால் முறையற்ற உறவுகள் கொள்ளுவதால் குடும்ப வாழ்க்கை நாசமாகிறது.

நகரங்களில் கிராமங்களைப் போன்று கட்டுப்பாடும் ஒழுக்க நியதிகளும் இல்லாததால் இங்குப் பெண்கள் கெட்டுப் போவதற்கு வாய்ப்பு நேரிடலாம் எனப் பெரும்பாலான ஆண்கள் நினைக்கின்றனர். எனவே தான், ஆண்கள் பலர் தங்கள் மனைவியரை நகர்ப்புறங்களுக்கு அழைத்து வருவதற்குச் சங்கடப்படுகின்றனர். இவை போன்ற சிக்கல்களை நீக்கிச் சரிசமமான ஆண் - பெண் விகிதங்களைத் தொழில் நகரங்களில் கொண்டுவர முயற்சிகள் பல எடுக்க வேண்டியது இன்றியமையாதது.

தொழில் நகரங்களிலுள்ள குடியிருப்புச் சிக்கல்கள் அங்கு மிகுதியான சமூக விளைவுகளை ஏற்படுத்துகின்றன. இந்தியத் தொழில் மையங்களிலுள்ள ஆயிரக்கணக்கான சேரிகளில் வாழும் ஆண்கள், மனிதத் தன்மையற்றவர்களாகவும், பெண்கள் நேர்மையற்றவர்களாகவும், குழந்தைகள் பாழ்பட்டவர்களாகவும் உள்ளனர் என **முகர்சி** (R.K.Mukriji) என்ற அறிஞர் கூறுகிறார்.

**ஆ.) பாலுறவுத் தொடர்பான மனநிலை**

இந்திய மக்களிடையே பாலுறவுத் தொடர்பாக ஒரு புதுமையான மனநிலை நிலவுகிறது. பாலுறவு பற்றிப் பேசுவதையே தவறாகக் கருதுகின்றனர். குழந்தைகளும் வாலிபர்களும் பாலுறவு பற்றித் தெளிவான அறிவு பெற இயலாதவர்களாகவே இருக்கின்றனர். எனவே ஆபாசம் நிறைந்த இலக்கியங்கள், திரைப்படங்கள், பத்திரிக்கைகள் ஆகியவற்றிலிருந்து பெற்றுக் கொள்கின்றனர். அதனால் விளைவுகள் பெரும்பாலும் தீங்காகவே முடிகின்றன. ஆண்களும் பெண்களும் பரத்தமையில் விழுவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது.

**இ) கொடுமையான நடவடிக்கைகள்**

சில குடும்பங்களில் மருமகள் ஒழுங்காக நடத்தப்படுவதில்லை. அவள் வழக்கமாக மாமியார், நாத்தனார் போன்றவர்களாலும் சில நேரங்களில் கணவனாலும் கொடுமைக்கு ஆட்படுகிறாள். அவ்வாறான சூழ்நிலையில் பெண்கள் தற்கொலை செய்து கொள்கின்றனர். அல்லது வீட்டை விட்டே ஓடிவிடுகின்றனர். அவ்வாறு குடும்பத்தைவிட்டு வெளியே வந்த பெண்கள் எளிதாக இப்பரத்தைத் தொழிலில் ஈடுபடுவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது.

**ஈ) கடத்தல்**

பெண்கள் பலர் கடத்தப்பட்டும் பரத்தைத் தொழிலில் ஈடுபடுத்தப்படுகிறார்கள். இளம் வயதுப் பெண்களும் அறியாப் பெண்களும் தங்களுடைய காதலர்கள், முதலாளிகள், உடன் பணியாற்றுவோர், பரத்தைத் தொழில் தரகர்கள் (Procurer) ஆகியோரால் ஏமாற்றப்பட்டுக் கடத்தப்படுகிறார்கள். சில சமயங்களில் அவர்கள் திருமணம் செய்து கொள்வதாகவோ வேலை வாங்கித் தருவதாகவோ கூறியும் கடத்தப்படுவதுண்டு. எனவே, ஒரு பெண் ஒரு முறை (பரத்தைத் தொழில்) தரகர்கள் கையில் சிக்கினால் மறுபடியும் அவள் குடும்ப வாழ்க்கையை நினைத்துப் பார்த்தல் அரிதாகும்.

**உ) வேலையின்மை**

வேலையில்லாத திண்டாட்டமும் சில சமயங்களில் பெண்களைப் பரத்தைத் தொழிலில் ஈடுபடச் செய்து விடுகிறது. இப்பொழுது திரைப்படத் தொழில் ஒரு கவர்ச்சியான தொழிலாகக் கருதப்படுகிறது. எனவே, பெரும்பாலான ஆண்களும் பெண்களும் இத்தொழிலில் ஈடுபட முயலுகின்றனர். பெரும்பாலான சமயங்களில் இத்தொழிலில் ஈடுபடும் பெண்களுக்குப் பாதுகாப்பான நிலை இல்லை. திரைப்படத்தில் நடிப்பதற்காகப் பெண்கள் திரைப்படத் தயாரிப்பாளர், இயக்குநர், நடிகர்கள் முதலானோர் காமவலையில் விழுவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது. பின்னர் நிரந்தரமாகப் பரத்தைத் தொழிலில் ஈடுபடுவதைத் தவிர அவர்களுக்கு வேறு வழியில்லை.

**ஊ) தவறான தோழமையும் பொழுதுபோக்கும்**

தவறான தோழமையும், தவறான பொழுதுபோக்குக் காரணிகளும் பெண்களை இழிவான நிலைக்கு இட்டுச் செல்கின்றன. பொழுதுபோக்குதல் என்ற பெயரில் மது அருந்துதல், சீட்டாடுதல், நடன அரங்கு செல்லுதல், நீலப் படங்கள் பார்த்தல், மோசமான தோழமை கொள்ளுதல் போன்றவை பல பெண்களை ஒழுக்க நெறியைவிட்டு விலகச் செய்கின்றன.

**எ) குடும்பச் சூழல்கள்**

குடும்பச் சூழல்கள் சில பெண்களைப் பரத்தைத் தொழிலில் ஈடுபடச் செய்கின்றன. சிதைந்த குடும்பங்கள், ஒழுக்கமற்ற தாய் - தந்தையர், அன்பும்

பாசமும் கிடைக்காத குழந்தைப் பருவம், கணவன் - மனைவி தகராறுகள், பிறருடன் ஒத்துப் போகாத தன்மை ஆகியன பரத்தமையாக மாறி குற்றங்கள் புரிவதற்குக் காரணங்களாக அமைகின்றன.

**ஏ) உடற்கூறு நிலை**

உடற்கூறு காரணிகளும் பாலுறவு குற்றங்களுக்குக் காரணங்களாக அமைகின்றன. சபல மனம், மனநிறைவற்ற உடலுறவு ஆசைகள், கட்டுப்படுத்தவியலாத உடலுணர்ச்சிகள் ஆகியவை மனிதனுடைய மனநிலையைக் கெடுத்துச் சமூக நெறிகளுக்கு எதிரான செயல்களில் அவனை ஈடுபடுத்துகின்றன. அத்தகைய மனிதர்கள் பரத்தமையிலே ஈடுபடுகிறார்கள்.

மேற்கூறிய காரணிகள் தவிர்த்துச் சில வேளைகளில் நோயியல் காரணங்களும் பரத்தமைக்குக் காரணமாக அமைகின்றன. குடும்பத்தில் வருவாய் போதாத நிலையில் கணவனே தன்னுடைய மனைவியை இத்தொழிலில் ஈடுபடுத்துவதுண்டு. அது போலவே பெற்றோர் சிலர் தங்களுடைய வீட்டில் மகளைப் பரத்தைத் தொழிலில் ஈடுபடுத்துகிறார்கள். வெளியே சென்று அலுவலகங்களிலோ கடைகளிலோ பணியாற்றும் பெண்கள் பலர் சூழ்நிலை காரணமாக எதிர்பாராத விதமாக இத்தீங்கில் விழுந்து விடுகிறார்கள்.

**வகைகள்**

வகை அடிப்படையில் பரத்தமையானது பின்வருமாறு வகைப்படுத்தப்படுகிறது.

**1. பொதுவான பரத்தைகள்**

வயதுமுதிர்ந்த தேர்ச்சி பெற்ற பரத்தையர், பொதுவாகத் தரகர்களின் மூலம் இளம்பெண்களை விலைக்கு வாங்கிப் பரத்தையர் இல்லத்தினை நடத்துகின்றனர். இங்குப் பரத்தைத் தொழிலில் அப்பெண்களை ஈடுபடச் செய்வதால் அவர்கள் வாழ்க்கை பாழாக்கப்படுகிறது. அப்பெண்களுக்கு உணவும் உடைகளும் வழங்கப்படுகின்றன. அப்பெண்களின் மூலம் கிடைக்கின்ற பணத்தின் பெரும்பகுதியை அப்பரத்தையர் இல்லத்தை நடத்துகின்றவர்களே அனுபவிக்கின்றனர். ஆனால், தொழிலில் ஈடுபடுத்தப்படும் பெண்கள் மிகக் குறைவான பணத்தைப் பெற்றுச் சமுதாயத்தில் இழிவான பெயரையும் பெறுகின்றனர்.

### 2. விடுதிப் பரத்தையர்

தங்கும் விடுதிகளை நடத்துபவர்களால் இப்பரத்தையர்கள் வேலைக்கு அமர்த்தப்படுகிறார்கள். இவர்கள் பெரும்பாலும் தனிப்பட்ட வீடுகளில் குடியிருப்பதோடு ஆடம்பர வாழ்க்கையில் விருப்பம் கொண்ட பெண்களாகவும் இருப்பர். இவர்கள் பரத்தைத் தொழிலை ஓர் இரண்டாம் நிலைத் தொழிலாகவே கொண்டிருப்பர். விடுதியில் வந்து தங்கும் வாடிக்கையாளர்களை மனநிறைவுபடுத்த விடுதி நடத்துபவர்களால் இவர்கள் அவ்வப்போது அழைக்கப்படுவர். ஆனால், இப்பொழுது பணத்திற்காகப் பரத்தமையையே தொழிலாகக் கொண்டு வாழும் ஏழைப் பெண்களும் வீதிகளில் தங்கித்தான் பிழைப்பு நடத்துகின்றனர்.

### 3. பரவலாக்கப்பட்ட பரத்தையர்

ஒழுங்கு நடவடிக்கைச் சட்டத்தின் பயனாகப் பல பரத்தையர் இல்லங்கள் ஒழிக்கப்படுகின்றன. அதன் விளைவாக அங்கிருந்த பரத்தையர்கள் நகரத்திலுள்ள வெவ்வேறு பகுதிகளுக்குப் பிரிந்து சென்று தனித்தனியாக இத்தொழிலைச் செய்து வருகின்றனர்.

### 4. பரம்பரையான பரத்தையர்

சமூகத்திலுள்ள சில வகுப்பினரிடையே பரத்தைத் தொழிலானது தாயிடமிருந்து மகளுக்கு எனப் பரம்பரை பரம்பரையாகச் செய்யப்பட்டு வருகிறது. எந்தவித வெட்கமோ தவறு என்ற எண்ணமோ இல்லாமல் வழி வழியாக இவ்வழக்கம் அவர்களிடையே இருந்துவருகிறது. அவ்வாறான குடும்பங்களில் பெண்கள் நடனமாடவும் பாடவும் கற்பிக்கப்படுகின்றார்கள். இவர்கள் மிகவும் கை தேர்ந்தவர்கள், குறிப்பிட்ட காலத்திற்கு ஒரே ஆண்மகனிடம் மட்டும் இருப்பார்கள் இப்பொழுதும் இந்தியாவில் இவர்கள் மாநிலத்திற்கு மாநிலம் வெவ்வேறு பெயர்களில் இருந்து வருகிறார்கள்.

### 5. சமயத் தொடர்பான பரத்தையர்

இந்தியாவில் பரத்தைத் தொழிலானது பழமையான சமய வழக்கங்களில் போற்றப்பட்டு வந்துள்ளது. கோயில்களுக்குப் பெண்களை அளித்துவிடுகின்ற தேவதாசி அமைப்பு முறை (Devadasi System) இப்பொழுதும் இந்தியாவிலுள்ள சில பகுதிகளில் நடைமுறைப்படுத்தப்பட்டு வருகிறது. கோயில்களுக்கு

அளிக்கப்பட்ட அப்புனிதமான பரத்தையர் கேரளாவில் தேவதாசிகள் என்றம், மகாராட்டிரத்தில் முர்லி (Murli) என்றும், கருநாடகத்தில் சோகதி (Jogathi) என்றும் சொல்லப்படுகின்றனர். திருவிழாக்காலங்களில் கடவுள் சிலையின் முன்னர் பாடல்களைப் பாடி நடனமாடுவது இவர்கள் பணியாகும்.

### 6. மரபுவழிப் பரத்தையர்

முற்காலத்திய அரசர்கள், மானியக்காரர்கள், பெருஞ்செல்வர்கள் மரபுவழியாக வருகின்ற பரத்தையர் குழுவினரையும் தங்களுடன் வைத்துக் காப்பாற்றி வந்தனர். இவர்கள் அரசாளுபவர்களுக்குச் சிறப்பான சேவைகள் செய்வதற்குப் பணிக்கப்படுகின்ற பெண்களாவர். இவர்கள் கலா வந்தியர் (kalavanthis), நித்திய மகளிர் (Nithyanmagalis), மங்களமுகியர் (Mangalmukhis) எனக் கூறப்படுகிறார்கள். திருவிழாக் காலங்களில், அரசாளுபவர்களுக்கும், இளவரசர்களுக்கும் விருந்தளித்து மகிழ்விப்பது இவர்கள் பணியாகும். இம்மரபுவழிப் பரத்தையர்களின் வாரிசுகள் இப்பொழுதும் இந்தியாவில் வாழ்ந்து வருகின்றனர்.

மேற்கூறிய வகைகள் தவிர்த்து ஏழ்மை, வேலையின்மை காரணமாகப் பரத்தைத் தொழிலில் ஈடுபடுவோர், தங்களுடைய குடும்பத்திற்குப் பாரமாக இருப்பதாக எண்ணியோ சூழ்நிலை காரணமாகத் தள்ளப்பட்டோ இப்பரத்தையர் தொழிலில் ஈடுபடுகின்ற இளம் விதவைகள், திருமணமே ஆகாத சூழலில் இத்தொழிலில் தள்ளப்படுவோர், கணவனால் கொடுமைப்படுத்தப்பட்டு வீட்டைவிட்டு வெளியேறி இத்தொழிலில் ஈடுபடுவோர், பெண்தரகர்களால் ஏமாற்றப்பட்டு வஞ்சிக்கப்படும் பாதுகாப்பற்ற அனாதைப் பெண்கள் எனப் பலவகையான பரத்தையர்களும் அனைத்துச் சமூகத்திலும் இருக்கின்றனர்.

மேலும், இன்றைய காலத்தின் இளைய தலைமுறையினர் பணத்திற்காக இல்லாவிட்டாலும் சுகத்திற்காகப் பிறருடன் உடலுறவு கொள்வதை விரும்புகிறார்கள். நகரங்களில் மட்டுமன்றிக் கிராமங்களிலும் கூட இந்த உறவைத் தவறாகக் கருதாதது நாகரிகமாகவே எண்ணி ஈடுபடுகின்றனர். மேலும் நகரங்களிலே வாழும் செல்வர்களிடையே இப்பரத்தமைத் தொழில் ஒரு கௌரவமான தொழிலாகவே இன்று கருதப்பட்டு வருகிறது. சமூகக் கேடாகக்

கருதப்படும் இப்பரத்தைத் தொழில் செல்வர்களாலேயே நடத்தப்படுவது என்பது மிகவும் கவலைக்குரியது.

இப்பரத்தைத் தொழிலைக் கட்டுப்படுத்தி அழிக்கும் பொருட்டு அரசினாலும் பல சமூக நல நிறுவனங்களாலும் பல வகையான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. அதில் ‘முறையற்ற வணிகத்தை ஒழித்தல் சட்டம்’ 1956 (The Suppression of Immoral Traffic Act, 1956) இன் கீழ்ச் சட்டப்படி நடவடிக்கை எடுப்பதும், பரத்தையர் பாதுகாப்பு இல்லங்கள் நடத்துவதும் முக்கியமானவையாகும்.

## பின்னிணைப்பு

### புகைப்படங்கள்



நாட்டிய மங்கை ஓவியம்,
சித்தன்னவாசல் குகை, புதுக்கோட்டை



நாட்டிய மங்கை, மண்டபத் தூண், பூலோகநாதர் கோயில், திருமங்கலம், மாயவரம்





தேவரடியார்களின் நடன உடை



பொட்டுக் கட்டுவதற்குப் பயன்படுத்திய திரிசூலம்



திருமதி. துரையம்மாள், தஞ்சாவூர்



திருமதி. பி.ஆர். திலகம், திருவாரூர்



திருமதி. கமலாம்பாள், சிதம்பரம்



திருமதி. பாலசரசுவதி, திருமதி. பட்டம்மாள், திருவிழிமிழலை



கைசகி புராணத்தில் திருமதி. துரையம்மாள்



திருமதி. நவநீதத்தம்மாள், திருவிடை மருதூர்



திருமதி. காந்திமதியம்மாள், திருக்குறுங்குடி



திருமதி. குறுங்குடியம்மாள், திருக்குறுங்குடி



திருமதி. டி.ஆர். இராஜலட்சுமி, திருவிடை மருதூர்



திருவிழாவில் தேவரடியார் நடனம்



கைசகி புராணத்தில் திருமதி. குறுங்குடியம்மாள், திருமதி. காந்தியம்மாள்

(தமிழகத்தில் தேவரடியார் மரபு – பன்முக நோக்கு – முனைவர்.நர்மதா)